உ

கடவுள் துணை.

# பன்னூற்றிரட்டு.

இஃது

மதுரைத் தமிழ்ச்சங்க ஸ்தாபகரும்

பாலவநத்தம் ஜமீந்தாருமாகிய

பொ. பாண்டித்துரைத் தேவரால்

தொகுக்கப்பெற்றது.

நான்காம் பதிப்பு.




மதுரைத் தமிழ்ச்சங்கப் பிரசுரம்—௫.

மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை,

மதுரை.

1931.

விலை ரூ. 3

# நான்காம்பதிப்புரை.

நல்லிசைப்புலவர்களுடையறாப்புகழ்ப்
பல்வகைவளமும்பரந்தொருங்கமைந்த
பாண்மைபெற்றொளிரும்பாண்டிநன்னாட்டில்
மேன்மைசால்முகவைவியன்பதிமேவிய
சேதுகாவலர்கள்திருமரபுதித்தே
ஓதுபல்கலையுமுளங்கொளப்பயின்று

செந்தமிழ்நாடுசெய்தவப்பயனென வந்த பேருபகாரியும், மதுரைத் தமிழ்ச்சங்கஸ்தாபகருமாகிய பாலவனத்தம் ஜமீன்தார் ஸ்ரீமாந். பொ. பாண்டித்துரைத்தேவரவர்கள் தாம் பயின்ற தென்கலைத்தொகுதியாம் திருப்பாற்கடலைத் தன் மதியென்னும் மத்தினாற்கடைந்து திரட்டியெடுத்த தெள்ளமுதென்ன இற்றைக்குச் சற்றேறக்குறைய முப்பது வருடங்கட்கு முன்னாகத் தொகுத்து வெளியிட்ட இப் பன்னூற்றிரட்டு என்னும் தொகைநூல் மும்முறை பதிப்பிக்கப்பெற்றுப் பிரதிகள் முழுதும் செலவாகி இப்பொழுது நான்காவது பதிப்பாக வெளிவருவதால் இந்நூலின் பயன்பாடு நன்கு விளங்கும். மேலும், இந்நூலையும் இந்நூல் தொகுத்தாரையும் பற்றிய அருமை பெருமைகள் முழுதும் இந்நூற்குச் சிறப்புப்பாயிரந்தந்துள்ள மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி பிரம்மஸ்ரீ. உ. வே. சாமிநாதையரவர்கள், தேவகோட்டை ஸ்ரீமான் வீர. லெ. சிந்நயச்செட்டியாரவர்கள் முதலிய கல்வியிற் சிறந்த கலைஞர்களின் கட்டுரைகளாலும், முதலிரண்டு பதிப்புக்களின் விவரம் இந்நூலாசிரியர் எழுதிய முகவுரைகளாலும், மூன்றாம் பதிப்பின் விவரம் மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலைத் தலைமையாசிரியரும் 'செந்தமிழ்'ப்பத்திராதிபருமாகிய ஸ்ரீமத். உ. வே. திரு நாராயணையங்காரவர்களெழுதிய அதன் பதிப்புரையாலும் நன்குபுலனாம்.

மூன்றாம்பதிப்பின் பிரதிகள் முழுதும் செலவாகிவிட்டபடியால் அம் மூன்றாம்பதிப்பிலுள்ளவாறே இந் நான்காம்பதிப்பு மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரால் பதிப்பிக்கப்பெற்றது.

இப்பதிப்பிற் காணப்படுங் குற்றங்களைந்து குறைபெய்து வாசித்தல் கற்றறிந்தமாந்தர் கடன்.

மதுரை,
19—12—'30

பண்டித சு. ஹரிஹரையர்,
கலாசாலை உபாத்தியாயர்,
மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை.

# மூன்றாம்பதிப்புரை.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தைநாட்டி அதற்கு நிரந்தர அக்கிராசனாதிபதியாயிருந்து தமிழைப்பரிபாலித்துவந்த வித்வத்பிரபுவான பாலவனத்தம் ஜமீன்தார் பொ. பாண்டித்துரைத்தேவரவர்கள் தாம் அரிதிற்புரிந்துபோந்த தமிழ்நூலாராய்ச்சியின்பயனைத் தமிழுலகு எளிதினடையும்படி, ஓரோர்விஷயம்பற்றிப் பலநூல்களிற்புலப்படும் பாடல்களை ஒருநிலைக்களப்படத்தொகுத்து, அதிகாரமுறையாக வகுத்து, பன்னூற்றிரட்டெனப்பெயரிட்டு, இந்நூலை இற்றைக்குச் சற்றேறத்தாழ விருபதுவருடங்கட்குமுன்பு அச்சிட்டு வெளியிட்டனர். வெளிவரவே இது தமிழ்ப்புலவர்பலராலும் பாராட்டப்பட்டுப் பிரசங்கோபகாரியாய் விளங்கிற்று.

சென்னைச்சர்வகலாசங்கத்தாரும் இதனை நன்குமதித்துப் பல வருடங்கள் தொடர்பாகப் பிரவேசபண்டித வகுப்புக்கும், பிரதம கலாசாலை வகுப்புக்கும் பயிற்றற்குரிய தமிழ்ப்பாடங்களை இதினின்று தெரிந்தெடுத்துக்கொண்டனர். அவற்றுட்கல்வியதிகாரம் என்னும் ஒரு பகுதிக்குத் தேவரவர்களால் ஓரரியவிரிவுரையும் எழுதப்பெற்றது.

இந்நூலின் சிறப்பினையும், இதனை ஆக்கியளித்த தேவரவர்களது பெருந்தகைமைபொருந்திய குணவிசேடங்களையும் இந்நூற்குச்சிறப்புப் பாயிரமாக மகாமகோபாத்தியாய பிரும்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களும், தேவகோட்டை வித்வான், வீ. லெ. சிந்நயச்செட்டியாரவர்களும் பாடியசெய்யுட்களாலும் சென்னை கிறிஸ்தவகலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதராயிருந்த வை. மு. சடகோபராமாநுஜாசாரியாரியற்றிய பின்வரும் வெண்பாக்களாலும் அறியலாம்.

அந்நாளருந்தமிழையாதரித்தபாண்டியர்போல்
இந்நாளினிது இக்கவேந்தலென—எந்நாளும்
பாரோர்புகழ்ந்திடுமிப்பாண்டித்துரையையலால்
ஆரோபுலவர்க்கரண்.

இன்னூற்றிரட்டிதனுக்கேது நிகரின்றெனவே
பன்னூற்றிரட்டொன்றுபாலித்தான் — நன்னூல்கட்
கீண்டித்துரையேயிடமெனயாவுந்தேர்ந்த
பாண்டித்துரையாம்பதி.

இந்நூலிற் பலர்க்கும் விருப்புடைமையாலும், தேவரவர்களது ஔதாரியத்தாலும் முதற்பதிப்புப்புத்தகங்கள் விரைவிற்செலவாய் விட்டமையால், பின்னும் பலபாடல்களைப் பிற பல நூல்களினின்றும் தெரிந்தெடுத்துச்சேர்த்து நூலைப்பெருக்கி மதுரைத்தமிழ்ச்சங்கத்துக் குரியதாக்கி மறுமுறை பதிப்பிக்கப்பட்டது. அப்பதிப்பும் சிலவருடங்களிற் செலவாய் விலைக்குக்கிடைப்பதரிதாய்ப் பலரும் விரும்பிக் கேட்பது தெரிந்து மூன்றுமுறை பதிப்பிக்கக்கருதிப் பாண்டித்துரைத் தேவரவர்கட்கு நண்பரும் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் உப அக்கிராசனாதிபதியாயுமுள்ள ஆண்டிப்பட்டி ஜமீந்தார் மகாராஜராஜஸ்ரீ, சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியாரவர்கள் மனமுவந்துதவிய பொருளுதவியால் மதுரைத்தமிழ்ச்சங்கத்துக்குரியதாக இப்பதிப்புப் பதிப்பிக்கப்பட்டது.

இப்பதிப்பு, பெரும்பாலும் இரண்டாம்பதிப்பைத்தழுவியதே யாயினும் அச்சுப்பிழைகளைத்திருத்தியும் மறித்தும்வந்த சிலபாடல்களை அகற்றியும் இன்பச்சிறப்பென்னும் அதிகாரத்தை விலக்கியும் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.

இப்பதிப்புக்குவேண்டும் பொருளுதவிபுரிந்த ஸ்ரீமான் பெத்தாச்சி செட்டியாரவர்கள் தமிழபிமானமும் உதாரசீலமும் தமிழ்மக்களால் மிகவும் பாராட்டற்பாலன.

தமிழ்ச்சங்கக்கலாசாலை உதவியுபாத்தியாயர் நல்லசிவன்பிள்ளை இதனை அச்சிடுதற்கு அச்சுப்பதிப்பொப்புநோக்கிக்கொடுத் துபகரித்த வுதவி பாராட்டற்பாலது.

திரு. நாராயணையங்கார்,

செந்தமிழ்ப்பத்திராதிபர்.



திருச்சிற்றம்பலம்.

# இரண்டாம்பதிப்பின் முகவுரை.

உலகத்திற்றோன்றிய ஆன்மகோடிகள் பலவற்றுள்ளும் கிடைத்தற்கரிய இம்மானிடப்பிறப்பெய்தியார்க்கு உறுதிப்பொருளாகவுள்ளன அறம் பொருள் இன்பம் வீடென நான்கே என்பதூஉம், அவற்றினியல்பை அறிந்துய்தற்கு நூலுணர்ச்சி இன்றியமையாக் கருவி என்பதூஉம் பலருந் தெளிந்த வுண்மைகளாம். நூலென்பன பிறபாஷைகளிலுமுள்ளனவேனும், அவையெல்லாம் வடமொழி, தென்மொழிகளில் உள்ள நூல்கள்போல அப்புருஷார்த்தங்களைச் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராய மக்கட்கேற்பத் தெளியவுணர்த்துவன ஆகா. நம்முன்னோர் மானிடர்க்கு வேண்டப்படும் உறுதிப்பொருள்கள் நான்கேயெனத் தமது நுட்பமதியாற் கண்டுணர்த்தியவாறு, பிறநாட்டார் உணர்ந்திலரன்றோ? "அறம்பொரு ளின்பம் வீடடைதல் நூற்பயனே" என, உறுதிப்பொருணான்கையும் உணர்த்துவனவற்றையே நூலிலக்கணமாக நம்மவர் வழங்கினமையுங் காண்க. நம் தமிழ்மொழிகளிலுள்ள அரும் பெரும்பொருள்களைப் பிறநாட்டுமொழிகள் அவாவியேற்று இப்போது கமழவாரம்பிக்கின்றன; இது நமக்கு ஏற்றந்தருவதென்பது உண்மையாயினும், இப்பெருமைக்கு மூலமாயுள்ள நம்தமிழ்மொழியை ஆதரித்து அபிவிருத்தி செய்யினன்றோ, அவ்வேற்றம் நமக்குச்சித்திக்கும்! தற்காலத்தே, நம்மவரது பாஷாபிமானத்தின்மை மிகவும் பரிதபிக்கத்தக்கதே. சுருங்கச்சொல்லின், தேசபாஷையின் வளர்ச்சியின்றி, நம் பெருமையை எதிர்பார்த்தல் ஆடையின்றி அலங்கரித்தலை யொக்குமன்றோ? இவ்வாறு, நூற்பெருக்கும், பழமை, பெருமைகளுமுடைய தெய்வமொழியாய, நம் தமிழ்ப்பாஷை, கற்பாருமாதரிப்பாருமில்லாது சுருங்கிவரும் இக்காலத்தே, அதன்கண் இலைமறைகாய்போல மறைந்துகிடக்கும் உறுதிப்பொருணுட்பங்களைப் பன்னூலோதிப் பயனொருங்கறிதல் கூடாமையால், அவற்றைப் பலரும் எளிதினுணர்தற்கும், ஒவ்வொரு விஷயத்தைக் குறித்துப் பன்னூலாசிரியருங்கொண்ட அருங்கருத்துக்களை ஒரிடத்தில் ஒருசேர அறிந்து மகிழ்தற்கும் அநுகூலமாக ஒருநூல் தொகுக்க

வேண்டுமென யான் நெடுநாட்கொண்டிருந்த அவா, இற்றைக்கு எட்டு வருஷங்கட்கு முன்னர் (1898வரு) "பன்னூற்றிரட்டு" என்னும் நூலாகப் பரிணமித்தசெய்தி பலரும் நன்கறிந்தது. அந்நூல் வெளியேறியகாலத்தே, அதனைத் தமிழ்மக்கள்பலர் விரும்பி யேற்றுக்கொண்டதுபோலவே, கனந்தங்கிய சென்னைச் சருவகலாசங்கத்தாரும் அதிற் சிலபகுதிகளைப் பரீக்ஷைகட்குப் பாடமாகவைத்து அபிமானித்தனர். அப்போது அச்சிடப்பட்ட பன்னூற்றிரட்டுப் பிரதிகள் அதிகமின்மையால், அவை பெரும்பாலும் என்னிஷ்டர்கட்கு விநியோகிக்கப்பெற்று ஜனசமூகத்திற்குக் காணாவாயின. பின்னரும் தமிழ்நாட்டார்பலரும் அதனைப் பெரிதும் விரும்பினமையால் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் தலைமைகருதி அச்சியந்திரசாலைப் பிரசுரமாகப் பன்னூற்றிரட்டினிரண்டாம்பதிப்பை வெளியிடத் துணிந்தேன். இவ்விரண்டாம்பதிப்பில், முற்பதிப்பிற் சேராத நூல்கள் பலவற்றினின்று ௪௮௫-பாடல்கள் அதிகமாகத் திரட்டப்பட்டு வேற்றிடங்களிற் சேர்க்கப்பெற்றுள்ளன. அஃதாவது:—முற்பதிப்புச் செய்யுட்களின் தொகை 1647; இப்பதிப்புப் பாடல்கள் 2132 இவ்வாறு புதியனவாகச்சேர்த்த செய்யுட்களைப் பிரித்துக்காட்டுதற்கு நக்ஷத்திரக்குறிகள் ஆங்காங்கு அமைக்கப்பட்டிருக்கின்றன. இப்பதிப்பின்பொருட்டு ஆராயப்பெற்ற புதியநூல்களுள், சிவப்பிரகாசப்பெருந்திரட்டென்பது ஒரு சிறந்த பழைய நூல்; இதனுட் கண்ட நூல்கள் பல இக்காலத்து இறந்தனவேபோலவே தோற்றுகின்றன; இப்பெருந்திரட்டினின்று எடுக்கப்பட்ட பாடல்கட்கு அதிற் கண்ட நூற்பெயருடன் "சிவ-" என்னுங் குறிப்பை (சிவப்பிரகாசப் பெருந்திரட்டு என்பதன் சுருக்கமாக) முன் அமைத்துக்காட்டியுள்ளேன்.

மிக்க கல்விமான்கள் செய்தற்குரிய இவ்வருங்காரியத்தை, அற்பக் கல்வியுஞ் சிற்றறிவுமுடைய யான் இயற்றத்துணிந்தமையையும் அதனால் உளவாகக்கூடிய குற்றங்களையும் நல்லறிஞர் பொறுத்தருளுமாறு அவரைப் பிரார்த்திக்கின்றேன்.

இந்நூலின் இரண்டாம்பதிப்பு முடிவுபெறுமளவும் உடனிருந்து எனக்கு மிக்கவுதவிபுரிந்துவந்த—மதுரைத்தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகர்: ஸ்ரீமத்- மு. ரா. அருணாசலகவிராயரவர்கட்குப் பெரிதும் நன்றியறிதலுடையேனாவேன்.

எடுத்துக்கொண்ட பன்னூற்றிரட்டிரண்டாம்பதிப்பு முயற்சி இனிது முடியத் திருவருள்புரிந்த எல்லாம்வல்ல எம்மிறைவனது இணையடிகளை இறைஞ்சுகின்றேன்.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,
மதுரை.
27—8—1906.

இங்ஙனம்,
பொ. பாண்டித்துரை.



திருச்சிற்றம்பலம்.

# முதற்பதிப்பின் முகவுரை.



உலகத்தில் தோன்றிய ஆன்மகோடிகள் பலவற்றுள்ளும் கிடைத்தற்கரிய இம்மானிடப்பிறப்பெய்தியார்க்கு உறுதிப்பொருளாயுள்ளன அறம், பொருள், இன்பம், வீடெனநான்கே. அவற்றினியல்பை நூலுணர்ச்சியானல்லது அறிதல்கூடாமை தெள்ளிதிற்றெளிந்த தொன்றேயாம். நூல்கள் பல பிறபாஷைகளிலும் உளவேனும் அவையெல்லாம் வடமொழி, தென்மொழியென்னும் இவ்விருபாஷைகளினுமுள்ள நூல்கள்போற் புருஷார்த்தங்களை புணர்த்தாவென்பது திண்ணமே. உலகின்கண் வழங்கிவரும் பலபாஷைகளினும் மிகச்சிறந்துள்ளன வடமொழி தென்மொழி என இவ்விரண்டேயென்பது பலரும் நன்கறிந்த விஷயமாதலால் அதற்குப் பிரமாணங்கள் எடுத்துக்காட்டல் மிகையாம். இவையிரண்டும் தம்மில் ஒன்றற்கொன்று ஒத்துப் பயில்வோர்க்கு உறுதிப்பொருளைப் பயப்பவே எனினும் வடமொழியினுந் தென்மொழி சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடையோராய மானிடர்கட்கு எளிதினுணர்தற்பாலதாகிய தன்னிடத்துள்ள மிக்க இனிமை பற்றியே தமிழ் எனக்காரணப்பெயர் பூண்டுள்ளது. இத்தகைச் சிறப்புவாய்ந்த தமிழ்மொழி ஆதரவற்றுக் கற்போரின்றி மிக்கமெலிவையடைந்துவருதல்பற்றி யாவரும் விசனிக்கத்தக்க இக்காலத்து, அதன்கண் புல்லறைக் காய்போன்று கலவிக்கிடக்கும் பலவிஷயங்களுள்ள பலநூலோதிப் பயன்றெரிந்தறிதல் கூடாமையால் அவற்றையொருங்கே எளிதினுணரவும், ஒவ்வொரு விஷயத்தையுங் குறித்துச் சொல்லும் பன்னூலாசிரியர் கருத்தையும் ஒருங்கேயறிந்து கொள்ளவும் ஒரு நூல் தொகுக்கச் சின்னாள் முன் கொண்டிருந்த எண்ணத்தை என்னுடைய பிரிய நண்பரும் வைசியகுலமணியும் வித்வன்மணியும் சைவமணியும் எனதிருகண்மணியுமாகிய தேவகோட்டை வீர. லெ. மகா-ள-ள-ஸ்ரீ சிங்கயசசெட்டியாரவர்களுக்குத் தெரிவித்தேன். அவர்கள் இது மிகச்சிறந்த விஷயமாயும் லோகோபகாரமாயுமுள்ளதாதலால் இனிக் காலநீட்டியாது உடனே முயன்று முடித்தல் வேண்டுமென

எனக்கு வேண்டிய உறுதிகூறி இதில் முயலும்படி செய்தார்கள். அவ்வாறே முயன்று அதற்கு வேண்டிய நூல்களை ஆராய்ச்சிசெய்துகொண்டு வருமிடையே யான் மகாமகத்திற்குக் கும்பகோணஞ் சென்றிருந்த காலத்தில் அவ்விடத்துள்ள காலேஜ் தமிழ்ப்பண்டிதரும், லோகோபகாரமே பொருளாகக்கொண்டு தமது தேகத்தின் எய்ப்பினைப்பையுமறியாது அரிய சங்கச்செய்யுள்கள் புராதனகாவியங்கள் முதலியன அச்சிட்டு வெளியிடுவதே தமது பொழுதுபோக்காகவுடைய மகாவித்வானும் எனதின்னுயிரினைய நண்பருமான மகா-ள-ள-ஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களிடத்தும் யான்செய்துபோதரும் இக்காரியத்தையறிவித்தேன். அவர்கள், இவ்வாறு ஒரு நூல் தொகுக்கும் வண்ணம் பலகனவான்கள் நம்மையே வேண்டிக்கொண்டார்களென்றும், தமக்குப் போதுமான அவகாசமில்லாமையால் தாம் அதில் முயல நேரவில்லையென்றும், யான் அதனை இடையறாது முயன்று விரைவில் முடித்தல் வேண்டுமென்றுங் கூறியதுடன், இவ்வாறே ஆதிகாவியங்களுட் சிலவும் சங்கச்செய்யுள்களுட் சிலவுமாய நூல்களினின்றும் திரட்டிய புறத்திரட்டென்னும் ஓர் நூல் இன்னார் தொகுத்ததென அறியக்கூடாமற் கையெழுத்துப் பிரதியிலிருந்ததை அன்போடும் என்னிடம் அளித்தார்கள். அங்ஙனம்பெற்ற அந்நூலுள் வளையாபதி குண்டலகேசி நாரதசரிதை மேருமந்தரபுராணம் பெருந்தேவனார்பாரதம் சாந்திபுராணம் பெரும்பொருள் விளக்கம் முதலிய நூல்களினின்றும் சேர்க்கப்பட்டுள்ள செய்யுட்களுள் சிலவற்றை இதிற்சேர்த்திருக்கின்றேன். யான் இதில் முயன்றிருப்பதையறிந்த என்னண்பர்கள்பலரும் இதனை விரைவில் முடிக்கவேண்டுமென்று என்னை அடிக்கடி தூண்டினார்கள். அன்புடன் கூறிய அவர்கள்சொல்லை மேற்கொண்டு யான் விடாதுமுயன்றும் எடுத்துக்கொண்ட நூல்கள் யாவும் பார்த்து இந்நூல் தொகுத்தற்கு ஒன்றரைவருடகாலமாயிற்று. அதன்மேலும் எனது நேர்பார்வையில் இவ்வூரிலேயே அச்சியற்றச் சற்றேறக்குறைய எட்டு மாதங்களாயின. ஆக இந்நூல்தொகுத்து அச்சிடுதற்கு இரண்டு வருடங்கட்குமேலாயின.

இந்நூற்கு என்னண்பர்களான பலவித்வான்கள் சிறப்புப்பாயிரங்கள் கொடுத்திருப்பினும் அவையெல்லாம் இந்நூலுடன் சேர்த்தச்சிடுவதற்குநேர்ந்த சில அசௌகரியங்களால் இன்னமும் நூல் தாமதியாது வெளிவருவது கருதி இம்மட்டோடு அச்சிட்டு வெளிப்படுத்தினேன்.

இதனையே, இரண்டாம்பதிப்பில் இன்னும் பலநூல்களினின்றும் வேண்டியவற்றைத்திரட்டிச் செவ்வையாக அச்சிடக்கருதியுள்ளேனாதலால் அப்பதிப்பில் அவர்களளித்த சிறப்புப்பாயிரங்களைச்சேர்த்து வெளியிடுகின்றேன். அதற்காக என்னை மன்னிக்க அவர்களை மிகவுங் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் என்னன்பர்களுட் சிலர் இதற்கு எடுத்துக்கொண்ட நூல்களுடையவும் நூலாசிரியர்களுடையவும் வரலாறுகளை இந்நூலுடன்சேர்த்து அச்சிடவேண்டுமென்றுகொண்ட விருப்பத்தை அடுத்த பதிப்பில் நிறைவேற்றுவேன்.

மிக்க கல்விமான்களாற் செய்யவேண்டிய இக்காரியத்தை அற்பக் கல்வியும் சிற்றறிவுமுள்ள யான் இயற்றத் துணிந்தமையையும் அதனாலுண்டாகக்கூடிய விந்நூலிலுள்ள பிழைகளையும் வித்வான்கள் பொறுத்தருளப் பிரார்த்திக்கின்றேன்.

இந்நூலைத் தொகுக்கத்தொடங்கியது முதல் அச்சிட்டு முடியுங்காறும் என்னுடனிருந்து இவ்விஷயத்தில் எனக்கு மிக்கவுதவிபுரிந்து வந்த எதிர்கோட்டை வித்வான் மகா-ள-ள-ஸ்ரீ திரு. நாராயணையங்காரவர்கட்கு யான் மிக்கவந்தனமும் நன்றியும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

எடுத்துக்கொண்ட விந்நூலினிது முடியத் திருவருள்சுரந்த எல்லாம்வல்ல எம்மிறைவனிணையடிகளை யிறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்,

பொ. பாண்டித்துரை.

உ

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

சென்னை பிரஸிடென்ஸிகாலேஜ் தமிழ்ப்பண்டிதர்

மஹாமஹோபாத்தியாயர்

## உ. வே. சாமிநாதையரவர்கள்

இயற்றியது.



பூமலி சந்தக் காமலி வரைவா
ழருந்தவ னன்பிற் புரந்தருண் மேன்மை
பெற்றே யுவமை யற்றே யிலங்கு
நன்மொழி யாய தென்மொழித் துறையி
லற்புமிக் கான்ற பற்பல கவிஞர்
நவையெலாங் குறைத்துச் சுவையெலா மமைத்தே
யாக்கிய வினிமை தேக்கிய பன்னூற்
பாப்பெலா மாயு ணிரப்புறு மாந்தர்க்கு
ஓதுறல் சிறிதுமொல் லாதென நினைந்து
கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல வென்னு
மேலவர் தொடர்பைச் சால மதித்தே
யாழித் தரைபுகழ் காழித் தவப்பயன்
முதலிய பெரியோர் நுதலிய தமிழ்மறை
யென்னும் பெயர்கொடு மன்னுபன் முறைகளுந்
துங்கக் கூடற் சங்கத் தமர்ந்த
தொல்லிசைப் பயனுர் நல்லிசைப் புலவ
ரருளிய மென்மைப் பொருளிய னூல்களும்
பொருவில் பெருமைத் திருவள் ளுவர்முத
லான்றோ ரருள்சுவை சான்றபன் னூல்களு

மருத்திகூர் புலமைத் திருத்தகு தேவ
னாதியா மறிஞ ரோதிய வாய
மங்காச் சுவைசா லைங்காப் பியத்துட்
கிடைப்பன வாய தொடைக்கவி நூல்களுஞ்
செப்பமார் கச்சி யப்ப வாசான்
முன்னாப் பகர்பல செந்நாப் புலவரெம்
மருளிய லகற்ற வருளிய நூல்களு
நலமுறு மகிழ்விற் பலமுறை யாராய்ந்
துட்டெளி வளிக்குங் கட்டெளி வலையவாய்
மன்பதைக் களவா வின்ப நிரப்பி
யிழுக்க மகன்ற வொழுக்க வகைநுவல்
பாடல்க டம்மை நாடல்செய் தெடுத்தே
பாத்தே பால்வகை யாத்தே நிறுவித்
தொன்னூற் றிரட்டெனச் சொல்ல வேசிலர்
தென்னூற் றிரட்டெனச் செப்ப வேசிலர்
நன்னூற் றிரட்டென நவில வேசிலர்
பன்னூற் றிரட்டெனப் பகர்பெயர் நிறீஇ
யளித்தா னம்மவொன றவனு ரெனினே
யுறுஞ்சிறப் பமைந்த குறிஞ்சிமுன் னய
திணைவளம் பழுநிய செம்பிநன் னாடன்
மாசுதுன் னுவணம் பூசுவெண் சாந்தின்
விதுவைநேர் மாடப் புதுவைமா நகரான்
பவஞான மறுத்துயர் சிவஞானத் தேவர்
பவுத்திர னெனவரு பவித்திரக் குரிசில்
ஆரிய முதலாஞ் சீரிய மொழிகளி
னுளவென வுரைக்கும் பளகறு சுவைசால்
பல்கலை களுமிகப் பல்கலை மருவ
வளித்தே புலமைநன் றூக்கிய தேக்கட்
டளித்தார்ப் பொன்னுச் சாமி வரோதயன்
பண்ணிய வளவில் புண்ணியப் பேற்று
லன்னவ னெனவே நன்னர்வந் துதித்தோன்
றிதிகந் தோய்குஞ் சேதுநன் னாட்டுக்
காசா யமல பாசிவ பத்திக்
காகா மாயருட் சாகா மாய்வள

மகவையிற் றழீஇய முகவை மாநகரி
லொண்மைப் பாற்கா ரொத்தொளிர் வெண்குடைத்
தண்மைப் பாற்கர சாமி சுரேந்திரற்
கண்ணிய வன்பன் புண்ணிய வின்பன்
எவ்வயி லருந்தமி ழின்சுவை யோடு
சைவவின் சுவைதெரி வையைமா நதியான்
சால வனத்தர் தருபவை யகற்றிப்
பால வனத்தம் பாலித் திடுவோன்
நேரியன் பரியைக் கோரமா மென்றும்
வீரவெஞ் சிலைக்கைச் சேரலன் பரியைப்
பாடல மென்று நிடுசீர்க் கவிஞர்
செப்புறக் கொட்புறு திட்பவெம் பரியான்
செந்தமிழ்ச் சோம சுந்தர விலாசன
அமிழ்துற ழினிய தமிழ்வலோர் தமக்கு
மருமறை நாவி னந்தணர் தமக்கு
மாறறி காட்சிப் பேறுடை யார்க்குந்
திசைபோம் பெரும்புக ழிசைவல் லவர்க்குஞ்
செயிரிலாத் தேர்ச்சி வயிரியர் தமக்கு
மற்றவை மரபிற் கற்றவர் திரட்கு
மாதுய ரொடுவரு மாதுலர் தமக்கு
மடையா வாயி லகன்கடை யுடையான்
வாய்ந்தநுண் ணூல்பல வாய்ந்து மகிழ்ந்தே
நாவலர் பல்லோர் பாவலர் பல்லோர்
சூழும் படிதழீஇ வாழும் பெருமையன்
அன்னமு மாவு மனைமா ணவர்பலர்க்
கனமுந் தனமு மாடையு மேடையுங்
கொடுத்தே மிடியைக் கெடுத்தே மகிழ்வித்
தருந்தமிழ் பயிற்றிப் புரந்திடு மேன்மையன்
தீயவெம் பிணியா லாயபஃ றுன்பிற்
காற்றா மாந்தர்க் கருந்துணை யானோன்
இருவே றுலகத் தெனுங்குறட் கெதிரா
வருவே றொழுக்க மாண்பினி லதிகன்

குளிரின் சொல்லொடு மிளிர்குலோத் துங்கன்
அகத்தூக் கேழுனர்த் தொகுத்தே மென்னு
மக்குறை யறவரு முக்கிர பாண்டியன்
வருத்த மகற்று திருத்தகு தேவன்
களங்க மிலாது விளங்குபொய் யாமொழி
மெச்சி யடைந்த நச்சினார்க் கினியன்
தீதிய லாதுசெய் நீதிநூல் பலவுந்
தெரிமே லவர்சொல் பரிமே லழகன்
பொடியார்க்கு மேனி யடியார்க்கு நல்லான்
புலவர்க டியர்களைந் திலகு கற்பகம்
வந்தடை வோர்துயர் சிந்துசிந் தாமணி
மண்ணினு மீக்கிளர் விண்ணினு மமைந்த
வண்மைய னெனவே யொண்மையி னுயர்
சீரியர் சொலமிளிர் பாரி சாதம
தால மார்தரின் றலந் துறந்தெனத்
தாலந் துறக்குந் தமிழ்த்தொன் னூல்கள்
பழுதா காவணம் பரிசோ திப்பித்
தெழுதா வெழுத்தி லியைவித் திடுவோன்
தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணை
யாக நினைப்போர் சோக மகற்ற
வானினு மானினும் வழங்குசெங்கரத்தான்
தேனினும் பாலினுந் தித்தித் தோங்குந்
தண்பா மாலை சாற்றுவோன புறப்பொருள்
வெண்பா மாலை வெளிவரச் செய்தோன்
திருந்து கவின்சே ருருதமிழ் மடந்தை
யணிமே கலையா மணிமே கலையை
யாவரும் பெறச்செய் மாவுப காரி
பண்ணமை விழுச்சீர்த் தன்னுமை யொடுங்களத்
தேழிசை யோடும் யாழிசை யோடு
மெழுது மறைக ளிசைத்தே யன்பிற்
றொழுது பல்லோர் சூழ்ந்திருந் தேத்த
வுருத்திர சின்ன மருத்தியிற் றாங்கி

மனமொழி மெய்யிற் றினமொழி வின்றி
யீசனை யன்பிற் பூசனை புரிவோன்
சிவனடி யவரைச் சிவனென மதித்து
வேண்டிற் றுதவும் விழுச்சீர்ப்
பாண்டித் துரைப்பெயர் படைத்தகோ மானே.

---

உ

சிவமயம்.

தேவிகோட்டை

மகா-ள-ள-ஸ்ரீ

## வீர. லெ. சிந்நயச்செட்டியாரவர்கள்

இயற்றியது.

---

பூமகள் கெழீஇய காவரு மார்பக்
கரியவன் செருக்கி விரிநிலங் கீள்பு
தன்னமு மெய்யாப் பொன்னடிக் கடவு
ளருமறை கிளந்த குருமலர் வாயாற்
பொருத்தபு கொங்குதேர் திருத்தகு மதிமலி
யென்றிம் முதலாத் துன்றமுச் செய்யுளோ
டகப்பொரு ளியலை யுகப்பக் கழறியும்
தென்றல்வெற் புறுவற் கன்றறி வுறுத்தும்
அவைக்களத் தமரூஉச் சுவைத்திறன் றெரிந்துங்
குரவர் நால்வர் பாவிசைப் பனுவல்
கேட்டாங் கனையர் வேட்டாங் கருளியும்
விறந்தன மொழியிற் சிறந்தன் றுதுவெனுப்
புலனறை போய கலரு முணர்பாக்
காராக் காதலிற் பாராட் டோவான்
முன்னி வளர்த்த கன்னி நறுந்தமிழ்

மின்பயி றேஎத்து மன்பதை யனைத்து
மிம்மை மறுமை செம்மைவீ டாய
நயன்குலா மும்மைப் பயன்பெறற் பொருட்டுநூல்
பலவற் றுள்ளுங் கலவிக் கிடந்த
வொழுக்க வகைநுவ லிழுக்கறு பாவினங்
கோத்து நிரலே யோர்த்து முறைவகுத்து
இரங்கொலிப் பாற்கடற் பரம்பிய வமிழ்தினை
மாயோன் றிரட்டி மீயோர்க் களித்தெனத்
தெருணனி கொளுத்தும் பொருளொருங் கோருழி
மொண்டுநா வலர்கூட் டுண்டு மகிழிய
வின்னூற் றரூஉப் பன்னூற் றிரட்டெனும்
பெயர்த்தொன் றம்ம வியற்றி யுதவினன்
ஒளிமான் முன்னர்க் களிமயி லகவப்
பருவக் கொண்மூ வருகுலாய்த் தவழ்ச்சி
திருவா னைக்காப் பெருமா னுவப்பத
தோட்டிமைப் பொறியை யாட்டிமா னுழல்வு
கடுக்கு மல்லற் றடுக்கற் குறிஞ்சியும்
வெள்ளிற் றிரள்கனி முள்ளிடைச் சேக்குதல்
தயிர்தக வாடவ ருயிர்கடை தொறுவியர்
பொன்றிணி மலைத்தலை வென்றிகோள் வெஃகி
மூசிய வைந்நுதி யூசி நடுவ
ணுண்பிழைப் புறமுங் கான்பொலி முல்லையும்
செந்தளிர் பொதுளி யுந்துதே மாவின்
மைக்குயிற் றொழுதி தொக்க கூஉம் பெற்றி
பளகுதீர் கடைசியர் கிளவியை வெங்கிட்
டுறந்தெழு மானத் திறந்துபா ளெள்ளிக்
கொழுந்தழ னுப்பண் விழுந்துடல் கருகி
மேற்று வுருப்ப மாற்று தலறலைத்
துணைதரு கிற்கும் பணைகளென் மருதமும்
உமண்டியர் வாள்விழிக் கமண்றதெம் முழுதுங்
கோறு மெண்மரின் வீறுசால் பாதவர்
கயலுடங் கந்தோ மயிலைக் குலத்தை

வலையகப் படுத்து நிலைகுலைத் தட்டுவாய்ப்
பெய்திறு மாக்கு மொய்திரை நெய்தலும்
ஈண்டிச் சிறந்துள பாண்டிப் பாண்டில்வாய்
மாயிரு ஞாலத் தேயிருள் வளாகம்
பெரும்புறப் புணரி மருங்குசூழ் நேமிப்
பொற்றை நணர்ந்தலை மற்றைய விலங்கல்
வேறுபஃ றிறத்த யாறெண விவற்றைப்
படைக்கும் வண்ணமென் னடைத்தனி யோதிமா
ஞய்ந்துகை பழகியர் வேய்ந்தன பொருள்போற்
புடையுடுத் திரம்பா சடைமிடை பொழிலுங்
தடம்பாம் புரியுஞ் சுடர்ந்தோங் கெயிலும்
நீண்மணி மாடமுஞ் சேண்மலி ஞெள்ளலும்
வயங்கா நின்ற வியன்சீர் முகவைப்
பேரு ராளி போரு ராளி
கல்வி யுரத்தன் செல்வி யுரத்தன்
பொன்னுச் சாமி முன்னைப் பிறவிதோ
ரூற்றற லுருக்கொடு தோற்றியாங் கவன்பா
விளைய பசுங்கான் முளையென முளைத்தசேய்
நோக்குமங் கையர்க்குப் போக்குபு கலன்கலை
யலர்பெரி தணிவித் திலகெழிற் செவ்வியன்
விண்ணக் தாங்கி கண்ணென் றிரண்டா
னிமையாப் பார்ப்பினு மமையா தென்ன
வாயிர மெய்துமா மேயதொல் வளந்தான்
அறலே பொழிநீ னிறமுகில் வெள்கக்
காசும் பொலனுந் தூசு நீர்விராயுய்
வறியார்க் கீத்தெதிர் குறியா வள்ளல்
எண்ணில்விம் மிதத்தொழில் பண்ணிவை வல்லுநன்
மன்றமி ழாசான் குன்றிமெய் குழக
வில்லா தல்ல தெல்லா மரபுளி
யோதி யுணித்தோர்ந் தேதிலர்க் கிசைத்துச்
செவ்வே தானு மவ்வா றியங்கியான்
மயற்கையி னீங்கிய வியற்கைநுண் ணறிஞன்

பொறையரு ளின்சொ லுறுதி வாய்மை
யின்னன வுயர்ந்த வெண்ணபண் பிற்கு
நாட்டின ரெடுத்துக் காட்டுதற் கமைந்தகோ
நீறுகண் டிகையுந் தேறுமைந் தெழுத்து
மொருவா துளத்துமெய்ப் பொருளாப் பற்றிச்
செறிவுறு மாவியு மறிவொரூஉம் பண்டமுங்
கண்ணுதற் கடிமையவ் வண்ணல துடைமை
யென்ற வுண்மை நன்று தெள்ளியோன்
கூற்றடர் குரைகழல் போற்றினன் போதுறா
யொழிவொழி யன்பின் வழிபடு குரிசில்
உன்னு போழ்தெனக் கென்னினு மினியன்
தொழூதகை யுக்கிர வழூதிப் போரண்
ஈண்டைத் துறுநர் பாண்டித் துரையென
வழங்கவெண் மாதிர முழங்கிசை யவனே.

உ

திருச்சிற்றம்பலம்.

# பன்னூற்றிரட்டு.

## அறத்துப்பால்.

### முதலதிகாரம் கடவுள்வாழ்த்து.

தேவாரம்.

1 பரிதியானைப்பல்வேறுசமயங்கள்
கருதியானைக்கண்டார்மனமேவிய
பிரிதியானைப்பிறரறியாததோர்
சுருதியானைக்கண்டீர்தொழற்பாலதே.

2 ஆதியானையமரர்தொழப்படு
நீதியானைநியமநெறிகளை
யோதியானையுணர்தற்கரியதோர்
சோதியானைக்கண்டீர்தொழற்பாலதே,

திருவாசகம்.

3 வானாகிமண்ணாகிவளியாகியொளியாகி
யூனாகியுயிராகியுண்மையுமாயின்மையுமாய்க்
கோனாகியானெனதென்றவரவரைக்கூத்தாட்டு
வானாகிநின்றாயையென்சொல்லிவாழ்த்துவனே.

### திருவாய்மொழி.

4 *உயர்வறவுயர்நலமுடையவனெவனவன்
மயர்வறமதிநலமருளினனெவனவன்
அயர்வறுமமரர்களதிபதியெவனவன்
துயரறுசுடரடிதொழுதெழென்மனனே.

### கந்தபுராணம்.

5 திருவந்ததொல்லைப்புவனத்தொடுதேவர்போற்றிப்
பெருவந்தனைசெய்தறிதற்கரும்பெற்றியெய்தி
அருவந்தனையுமுருவத்தையுமன்றிநின்ற
னொருவன்றனதுபதந்தன்னையுளத்துள்வைப்பாம்.

6 பூமலர்மிசைவருபுனிதனாதியோர்
தாமுணர்வரியதோர்தலைமையெய்தியே
மாமறைமுதற்கொருவடிவமாகியோன்
காமருசெய்யபூங்கழல்கள்போற்றுவாம்.

### விநாயகபுராணம்.

7 ஒருப்படுமறத்தினோலையொண்பொருளின்பஞ்செம்பொற்
பருப்பதங்கடல்போல்வந்துபயப்படுமதனைக்கேண்மோ
விருப்பொடுவெறுப்பிலாதமிக்கவெண்குணத்தோடொன்று
யிருப்பவன்யாவனன்றனிணையடிவணங்கல்வேண்டும்.

### காசிகண்டம்.

8 நோக்கின்றிக்கண்டுநனிகையின்றிக்கொடுத்துமறைநுவல்வ
தாய, நாக்கின்றியறுசுவையுமினிதுணர்ந்துங்காலின்றிநடத்
தல்செய்து, மூக்கின்றிமணங்கவர்ந்துஞ்செவியின்றிக்கேட்டு
மறைமுதல்வர்யார்க்கும், வாக்கன்றிமனத்தினுக்குமெட்டாநின்
றுமனைத்தாள்வணங்கல்செய்வாம்.

### இராமாயணம்.

9 உலகம்யாவையுந்தாமுளவாக்கலு
நிலைபெறுத்தலுநீக்கலுநீங்கலா
வலகிலாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கேசரணங்களே.

---

* இவ்வடையாளமிட்டபாடல்கள் இரண்டாம்பதிப்பிற்சேர்க்கப்பட்டவை.

சூளாமணி.

10 வென்றான்வினையின்றொகையாகவிரிந்துதன்க
ணொன்றாய்க்கிடந்தவுணர்வின்றொழியாதுமுற்றுஞ்
சென்றான்றிகழுஞ்சுடர்சூழொளிமூர்த்தியாகி
நின்றானடிக்கீழ்ப்பணிந்தார்வினைநீங்கிநின்றார்.

சீவகசிந்தாமணி.

11 மூவாமுதலாவுலகமொருமூன்றுமேத்தத்
தாவாதவின்பந்தலையாயதுதன்னினெய்தி
யோவாதுநின்றகுணத்தொண்ணிதிச்செல்வனென்ப
தேவாதிதேவனவன்சேவடிசேர்துமன்றே.

திருக்குறள்.

12 தனக்குவமையில்லாதான்றாள்சேர்ந்தார்க்கல்லான்
மனக்கவலைமாற்றலரிது.

13 வேண்டுதல்வேண்டாமையிலானடிசேர்ந்தார்க்
கியாண்டுமிடும்பையில.

ஆகச் செய்யுள் 13. கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

## உ-அதி. பெரியோரியல்பு.

---

விநாயகபுராணம்.

14 ஐதுகுடியிற்பிறந்தருளாலாய்ந்தசெல்வத்துயர்ந்ததனு
லெய்தலரிதுபெருமையதெய்துங்கொடையொப்புரவாதி
செய்தற்கரியசெய்துபிறர்செயிர்கூறுமற்றநுக்காம
லுய்திநெறியிற்பிறழாமலொழுகுவார்க்குள்ளதிமைந்தா.

15 அன்பொப்புரவுகண்ணோட்டமழியாவாய்மைநாணுதி
யின்பம்பெருக்குநற்குணங்களெல்லாநிறைந்தசான்றோர்க
டுன்புற்றவர்க்குமினியனவேகூறுவார்துணையின்வினைமுடிப்பார்
வன்பிற்றளரார்கெட்டார்க்குமடங்கித்தோற்றனுறாரே.

16 ஆன்றகுடியன் †பெண்பதநல்லறநீதிகளின்வழுவாமை
சான்றமக்கட்பண்பாகுந்தன்னையுடையார்நகைபானு
மானமுமிகழார்பகைபிடத்துமதியாரவர்தகற்குணமே
யென்றவுலகம்பாராட்டுமெல்லாப்பயனுமவர்மாட்டாம்.

சேதுபுராணம்.

17 அரியநான்மறையந்தணர்தங்களிற்
பெரியாரவர்பிறர்க்கிடரெண்ணிலார்
தரியலார்தமரென்றிருசார்பினுக்
குரியரோபொருளுண்மையுணர்ந்துளோர்.

திருக்குடந்தைப்புராணம்.

18 *இருவினைப்பயனுள்ளவின்பதுன்பங்கள்வந்து
மருவினுமனபுடற்கமைந்தவளமெனவிருப்புஞ்செய்யார்
பருவரும்வெறுப்புங்கொள்ளார்பவஞ்சத்தேயுறக்கம்வைத்தா
ரொருவருமுயர்செம்பொன்னுமோடெனக்காணுநீரார்.

மாயூரப்புராணம்.

19 *இன்புவந்துற்றபோது மெதிர்மறையுற்றபோது
முன்புடனுறுமுழெழன்றேவிருப்புறார் முனிவுஞ்செய்யா
ரன்புசிற்றுயிரகத்துமமைத்துவாழ்கின்றநீரார்
வன்புமும்மலமுநீங்கத்திருவருண்முழுகுமாண்பார்.

சூதசங்கிதை.

20 நடந்தாலுமிருந்தாலுநவின்றாலுந்துயில்கொண்டு
கிடந்தாலும்விழித்தாலுங்கிளர்முடிமன்னவர்முதலோர்
தொடர்ந்தாலுந்தொழுதாலுந்துதித்தாலுமவமதித்துக்
கடந்தாலுமெய்ஞ்ஞானிகமலவிலைப்புனல்போல்வான்.

பிரபோதசந்திரோதயம்.

21 *பயிறீக்கொடுங்கள்ளாபயமுண்டுபொருளோர்க்
கயில்வாய்த்தபகையச்சமரசாள்பவர்க்குண்
டுயிர்வேட்டவர்க்குண்டுறுங்காலபயநம்
வயிராக்கியர்க்கேதில்வருமங்கோர்பயமே.

---

†எண்பதய—எளிய சமயக்காட்சி.

22 * அறிஞருமறிவிலாருமயலுளோரியற்றலாகு
முறுதுயருழப்பாரொத்து மொத்திலரொன்னலார்மேற்
பிறிதுறமிடர்க்குநோவர்பெருமையோர்மற்றையோர்தம்
வறிதுறமுடலிற்றுக்கும்வன்றுயர்க்கழிவர்மாதோ.

23 *நெஞ்சகமுருகுந்தன்மைநீடறிவுடையார்க்கன்றி
வஞ்சகர்திறத்துமுண்டாமென்னினுமொவ்வார்மாத
ரஞ்சனவிழியாலுள்ளமறிவிலார்குழைவரீசன்
றஞ்செனுமருட்கணோக்காற்றம்முளங்கரைவர்சான்றோர்.

24 *மாசற்றார்செய்பவேண்டுமொதவம்யாதுமில்லை
யாசுற்றார்செய்வதில்லையாதலாலினியசெய்கை
பேசுற்றபெரியோர்க்கில்லைபிறர்க்குமஃதில்லையென்றாலும்
ஓசைத்தெண்டிரைசூழ்பாரிலவர்க்கிவரொவ்வாரொவ்வார்.

ஞானவாசிட்டம்.

25 *எத்திறத்தோரெவ்வனமாயினையூற்றைக்கடந்தெளிதினேற
வல்லோர், ரத்திறத்தோரேபுருடராவர்களேதொழற்குரியோ
ரவரேசான்றோர், மெய்த்திறத்தோர்சேரிடமாய்விநயநிதி
படைத்தருளால்விளங்காநிற்குஞ், சுத்தகுணவெவ்வனமிவ்
வுலகிலுளதோவிசும்பிற்சூழ்காண்டோ.

26 *ஆனதிறத்தாற்கும்பபாரவியாபாரத்திலணுகும்போது
போனபொருட்கிரங்காமற்பொருந்துபொருண்மாத்திரமே
புசித்துவாழ்வாய், தீனமுறவருபொருளைச்சிந்தியார்வந்த
பொருட்டுதென்றெண்ணார், ஞானபரானோர்க்குச்சுபாவ
மாங்குணமிதுவேகளினக்கண்ணாய்.

ஒழிவிலொடுக்கம்.

27 *நாயேறிவீழ்ந்தென்னடாத்துகிலென்ஞானிக்குப்
பேயாமசகமபழிதநெனபேணுகிலென்—றேயார்
பெருமைசிறுமையிலைபின்னுமுன்னுமில்லை
வரைவற்றவேண்டியசெய்வார்.

† சிவ—சமாதி.

28 *யாவனிங்குமெய்யுணர்ந்தவனவனையேயிமயப்
பாவைதன்னையோர்பாகம்வைத்தவன்பாவுவது
நாவின்மங்கையைநயந்தவனவில்வதுமவனைப்
பூவின்மங்கையைப்புணர்ந்தவன்புகழ்வதுமவனே.

29 *கரையின்மெய்ஞ்ஞானவின்பப்பிரமமாங்கடலினுள்ளே
யொருவனதுள்ளமொன்றியொடுங்குமேலவனைப்பெற்றோர்
பெரியபேறெல்லாம்பெற்றார்பேணுமுக்குலமுந்தூய்தாம்
பொருவிலானிருந்ததேயம்புண்ணியபூமிதானே.

சிவ-பூரணப்பிரகாசம்.

30 *மல்லன்ஞால முடிமன்னர் தம்மையும்வழுத்துமாறிலர்மனத்தினு
னல்லர்தீயரெனநாடிடார்பிறரைநாகமேல்விழினும்வேகமாக்
கொல்லவேலர்புடைசூழினுஞ்சிறிதுகூசிடார்மெலிவுகூறிடா
ரல்லவாமெனவிகற்பியார்சமயவாதரோடுமறிவாளரே.

31 *புண்ணியபாவபலன்களுங்கருதார்பூசியார்புனறணின்மூழ்கார்
பண்ணியபதுமைதெய்வமென்றுணரார்பட்டினிவிடார்மகம்
பண்ணார், மண்ணியமணிமந்திரமருந்தறியார்வடிவிலோர்குறி
கொளார்மற்று, மெண்ணியகருமமியாவையும்புரியாரிம்மையு
மறுமையுமிகழ்ந்தார்.

32 *வையமாமணியாதியாகவழங்கினார்மகமேறினார்
துய்யமாநதியாடினார்துணியார்தவங்கடொகுத்துளார்
மெய்யமாதிகளெட்டுமேவினர்மெய்புணர்ந்தவர்கையிலே
யையமாத்திரமிட்டவர்க்குளதானபேறடையார்களே.

† சிவ—சிவப்பிரகாசப்பெருந்திரட்டென்னு நூல். இங்ஙனம வருமிடந்தோறுங் கொள்க.

### சிவ-மெய்ம்மொழி.

33 * † தண்ணிதானசண்டாளர்கள்சாதிவேதியரென்
றெண்ணுமாறிலன் ஞானியிச்செகத்தியாவையுந்தா
னுண்ணுமோதனமாதலானுண்டியாதியினுந்
திண்ணிதாநலன் றீங்குசிந்தித்திடான்சிறிதும்.

34 *ஓசைகேட்டிடுகசெவியறுசுவையுமுண்ணநாவுடலூறறிக
வாசமூக்குயிர்ப்பவுருவுகண்காணமற் றுமெக்கருமமுஞ்செய்க
வாசுடைப்புலன்களனுபவித்திடினுமப்பின்மூழ்கிடினுமம்புயத்
தின், பாசடைநீரிற்பற்றிலாததுபோற்பற்றிலார்பரமயோகிகளே.

### சிவ-தத்துவார்த்திரவளி.

35 *ஒழுக்கமேயினருயர்ந்தவரும்பர்மாமுனிவ
ரிழுக்குசேர்களெண்ணுநான்மறையவரியாரும்
பழிக்கமூர்க்கர்நற்பண்டிதர்பாவியரறவோர்
புழுக்கழியாவையும்போதமென்றிகழ்வுறார்புகழார்.

### சிவ-தோன்றி. ‡

36 *ஆடையுமலநஞ்சாந்துமகிழ்ப்புகைதீபமுன்னுக்
கோடிவேதியரைப்பூசைகுறைவறச்செய்தருளும்
பீடுறஞானிதன்கைபிடித்திடும்பிச்சைதானு
மாடிடிற்சமமாமென்றேநாதனூனவிலுந்தானே.

37 *எவர்தம்மனையின்ஞானியெய்திடுமவனைக்கண்டு
மேவியபிதிரரெல்லாம்விரும்பிநின்றாடாநிற்பர்
பாவியநரகமென்னும்படுகுழியொருவியென்று
மேவிலாவீடுபெறறேமெனவெழுமுவகையாலே.

### சிவ-ஞானசாரம்.

38 *முன்னைமலிதரெல்லாமரிமாசனத்தில்வைத்து
மன்னியவுபசாரத்தால்வந்தனைசெய்யுமாபோற்
பன்னருமறைபினந்தம்பயின்றமெய்ஞ்ஞானிதன்னைப்
பொன்னுலகதனிற்றேவரிருடிகள்பூசைசெய்வார்.

---

† தண்ணிதான சண்டாளர்—தாழ்மையுடையதாகிய சண்டாளத்தன்மையுடையவர். 'தண்மைதாழ்குளிர்ச்சிதாழ்வு' என்பது சூடாமணி நிகண்டு.

‡ இது தொன்னெறியென்றிருக்கவேண்டும்.

## சிவ—பரமார்த்ததரிசனம்.

39 *யாதொருபொருளையெல்லாவுயிர்களுமிருள்போற்காணா
ரோதருஞானியத்தையுளங்கையிற்கனிபோற்காணும்
யாதொருபொருளையெல்லாவுயிர்களுமென்றுங்காண்பார்
காதலின்ஞானியத்தைக்கண்ணினாற்றெரியக்காணான்.

40 *பலங்கள்வேண்டியபரிசெலாம்பலிப்பது பரமதத்துவஞானி
நலங்கொணாமமேமந்திரநாடொறுநயந்தவனீராடுஞ்
சலங்கடீர்த்தமாமவன்றிருமேனியேசகலதெய்வமுஞ்செவ்வாய்
மலர்ந்தவாசகமேமறுபிறப்பெனவருபிணிமருந்தாகும்.

## சிவ—துறுந்திரட்டு.

41 *கண்முதற்புலன்கள்யாவையுமொடுக்கிக்காணவாகுலமறக்
கடிந்தங், குண்மைகாண்விருப்போடுயிர்க்கெலாம்பிரிவுற்
றுற்றசிற்றின்பத்தையுவர்த்து, வண்மையாமுணவுவந்தவா
கண்டுவாட்டமுமகிழ்ச்சியுமின்றித், தண்மையாமுடம்பு
தான்றனதென்னாத்தன்மையோன்றத்துவமுணர்வான்.

## தாயுமானவர்பாடல்.

42 காலமொருமூன்றுங்கருத்திலுணர்ந்தாலுமதை
ஞாலந்தனக்குரையார்நல்லோர்பராபரமே.
43 இல்லாதகாரியத்தையிச்சித்துச்சிந்தைவழி
செல்லாமைநல்லோர்திறங்காண்பராபரமே.

## நன்னெறி.

44 முனிவினுநல்குவர்மூதறிஞருள்ளக்
கனிவினுநல்கார்கயவர்—நனிவிளைவில்
காயினுமாகுங்கதலிதானெட்டிபழுத்
தாயினுமாமோவறை.

45 உடற்குவருமிடர்நெஞ்சோங்குபரத்துற்றோ
ரடுக்குமொருகோடியாக—நடுக்கமுறார்
பண்ணிற்புகலும்பணிமொழியாயஞ்சமோ
மண்ணிற்புலியைமதிமான்.

## நீதிநெறிவிளக்கம்.

46 நல்லாரொழுக்கின்றலைநின்றார்நல்கூர்ந்து
மல்லனசெய்தற்கொருப்படார்—பல்பொறிய
செங்கட்புலியேறறப்பசித்துந்தின்னுவாம்
பைங்கட்புனத்தபைங்கூழ்.

## இராமாயணம்.

47 தீர்வருமின்னறம்மைச்செய்யிலுஞ்செய்யசிந்தைப்
பேரருளாளர்தத்தஞ்செய்கையிற்பிழைப்பதுண்டோ
கார்வரைநிறுத்தித்தன்னைக்கனலெழக்கலக்கக்கண்டு
மார்கலியபாருய்யவமிழ்துபண்டளித்ததன்றே.

## குசேலோபாக்கியானம்.

48 புகழ்ந்துநறுவிரைக்கலவைபூசிடினும்புல்லியரைப்போலநோக்கி
யிகழ்ந்துபலபேசிடினும்விருப்புவெறுப்பென்பதவர்க்கென்று
மில்லை, யகழ்ந்தமலக்கிழங்கினராய்ப்பசிவேளைகிடைத்தவற்றை
யமுதாத்துய்த்துத், திகழ்ந்திடுவர்சிறிதேனுநாளைக்குவேண்டு
மெனச்சிந்தைசெய்யார்.

49 விண்ணிடையேகுதன்மீளப்பாதலத்திற்புகன்மீட்டுப்புவியின்
மேவ, லண்ணியபல்பரகாயப்பிரவேசஞ்செயலுறையுமவ்விட
த்தே, யெண்ணியவெலாம்வரச்செய்திடன்முதற்செய்சித்தி
களையென்றும்வேண்டார், புண்ணியபாதகமிலார்பெருமையிலார்
சிறுமையிலார்பொய்மெய்யில்லார்.

50 ஆடுவாருன்மத்தர்போற்றிரிவார்நகைத்திடுவாரங்கைகொட்டிப்
பாடுவாரின்றிருந்தவிடநாளையிருக்கமனம்பற்றார்சுற்றிக்
கூடுவார்தமிற்கூடார்கந்தையன்றிவேறுடுக்கைகொள்ளாரன்னோர்
நீடுவார்புகழ்ப்பெருமையிதென்றுமதிப்பவராரிகழ்த்துவாரார்.

## புறப்பொருள் வெண்பாமாலை.

51 இம்மூவுலகினிருள்கடியுமாய்கதிர்போ
லம்மூன்றுமுற்றவறிதலாற்—றம்மி
லுறழாமயங்கியுறழினுமென்றும்
பிறழாபெரியோர்வாய்ச்சொல்.

## குண்டலகேசி.

52 வாயுவினைநோக்கியுளமாண்டவயநாவா
டாயுவினைநோக்கியுளடாக்கையவையேபோற்
றியவினைநோக்குமியல்சிந்தனையுமில்லாத்
தூயவனைநோக்கியுளதுப்புரவுமெல்லாம்.

## நாலடியார்.

53 பாவமுமேனைப்பழியும்படவருவ
சாயினுஞ்சான்றவர்செய்கலார்—சாத
லொருநாளொருபொழுதைத்துன்பமவைபோ
லருநவையாற்றுதலின்று.

54 கடையெலாங்காய்பசியஞ்சுமற்றேனை
யிடையெலாமின்னாமையஞ்சும்—புடைபரந்த
விற்புருவவேனெடுங்கண்ணாய்தலையெலாஞ்
சொற்பழியஞ்சிவிடும்.

## பழமொழி.

55 அடர்ந்துவறியராயாற்றுதபோழ்து
மிடங்கண்டறிவாமென்றெண்ணியிராஅர்
மடங்கொண்டசாயன்மயிலன்னாய்சான்றோர்
கடன்கொண்டுஞ்செய்வார்கடன்.

## திரிகடுகம்.

56 ஒல்வதறியும்விருந்தினனுமாருயிரைக்
கொல்வதிடைநீக்கிவாழ்வானும்—வல்லிதிற்
சீலமினிதுடையவாசானுமிம்மூவர்
ஞாலமெனப்படுவார்.

57 இல்லார்க்கொன்றீயுமுடைமையுமிவ்வுலகி
னில்லாமையுள்ளுநெறிப்படுமெவ்வுயிர்க்குந்
துன்புறுவசெய்யாததூய்மையுமிம்மூன்று
நன்றறியுமாந்தர்க்குள.

### ஆசாரக்கோவை.

58 *பழியாரிழியார்பலருள்ளுறங்கா
ரிசையாதநேர்ந்துகாவா—ரிசைவின்றி
யில்லாரையெள்ளியிகழ்ந்துரையார்தள்ளியுந்
தாங்கருங்கேள்வியவர்.

59 *எய்தாதவேண்டாரிரங்காரிழந்ததற்குக்
கைவாராவந்தவிடுக்கண்மனமழுங்கார்
மெய்யாயகாட்சியவர்.

### அறநெறிச்சாரம்.

60 *காய்தலுவத்தலகற்றியொருபொருட்கண்
ணாய்தலறிவுடையார்கண்ணதே—காய்வதன்கண்
ணுற்றகுணந்தோன்றாதாகுமுவப்பதன்கண்
குற்றமுந்தோன்றாக்கெடும்.

### நீதிவெண்பா.

61 *தாமரைபொன்முத்துச்சாமரைகோரோசனைபால்
பூமருதேன்பட்டுப்புழுகுசவ்வா—தாமழுங்மற்
றெங்கேபிறந்தாலுமெள்ளாரேநல்லோர்க
ளெங்கேபிறந்தாலுமென்.

62 *வென்றிவரியுகிரும்வெண்கவரிமானமயிருங்
குன்றுமதயானைச்சுடர்மருப்பு—நின்றநிலை
வேறுபடினுஞ்சிறப்பாமெய்ஞ்ஞானிநின்றநிலை
வேறுபடினுஞ்சிறப்பாமே.

63 *இந்துரவிகீள்கிரணமெய்குறைந்தாலு
மிந்துரவிகாந்தத்திலகுமே—யிந்துரவி
நேத்திரத்தோனெங்குநிறைந்தாலுநித்தனரு
ணேத்திரத்தோர்பாலேநிறையும்.

64 *பொன்னுங்கரும்புங்கமழ்பாலுஞ்சந்தனமுஞ்
சின்னம்படவருத்தஞ்செய்தாலு—முன்னிருந்த
நற்குணமேதோன்றுங்கலிந்தாலுமுத்தமர்பால்
நற்குணமேதோன்றுங்பந்து.

65 *பாலினீர்தீயணுகப்பால்வெகுண்டுதீப்புகுந்து
மேலுநீர்கண்டமையுமேன்மைபோ—னூலினெறி
யுற்றோரிடுக்கணுயிர்கொடுத்துமாற்றுவரே
மற்றோர்புகலமதித்து.

66 *எல்லோர்தமக்குமினிது தவலன்றியே
நல்லோர்தமக்குதவிநாடாரே—வல்லதரு
நாமநிதிமேகநயந்து தவலன்றியே
தாமுதவிநாடுமோசாற்று.

67 *திங்களயிர்தகிரணமிகச்சீதளமே
திங்களினுஞ்சந்தனமேசீதளமா—மிங்கிவற்றி
னன்பறிவுசாந்தமருளுடையார்நல்வசன
மின்பமிகுஞ்சீதளமாமே.

68 *கங்கைநதிபாவஞ்சசிதாபங்கற்பகந்தான்
மங்கலுறும்வறுமைமாற்றுமே—துங்கமிகு
மிக்குணமோர்மூன்றும்பெரியோரிடஞ்சேரி
லக்கணமேபோமென்றறி.

திருக்குறள்.

69 இருமைவகைதெரிந்தீண்டறம்பூண்டார்
பெருமைபிறங்கிற்றுலகு.

70 செயற்கரியசெய்வார்பெரியர்சிறியர்
செயற்கரியசெய்கலாதார்.

71 அந்தணரென்போரறவோர்மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மைபூண்டொழுகலான்.

ஆகச்செய்யுள் 58. பெரியோரியல்புமுற்றிற்று.

———

## ௪-அதி. அறச்சிறப்பு.

—:❖:—

### கந்தபுராணம்.

72 தருமமென்றொருபொருளுளது தாவிலா
விருமையினின்பமுமெளிதினாக்குமா
லருமையில்வரும்பொருளாகுமன்னது
மொருமையினோர்க்கலாலுணர்தற்கொண்ணுமோ.

73 தருமமேபோற்றிடி னன்புசார்ந்திடு
மருளெனுங்குழவியுமணையுமாங்கவை
வருவழித்தவமெனுமாட்சியெய்துமேற்
றெருளுறுமவ்வுயிர்சிவனைச்சேருமால்.

### காஞ்சிப்புராணம்.

74 அறமேமறங்கண்முழுதழிக்குமறமேகடவுளுலகேற்று
மறமேசிவனுக்கொருவடிவமாகுஞ்சிவனைவழிபடுவோர்க்
கறமேயெல்லாப்பெரும்பயனுமளிக்கும்யார்க்குமெவ்விடத்து
மறமேயச்சந்தவிர்ப்பதெனவறைந்தான்சாதாதபமுனிவன்.

### விநாயகபுராணம்.

75 தேங்குமின்பபோகமுஞ்சிறந்தமுத்தியு
மீங்குறுமாக்கமுமினிதுநல்கலா
லோங்கியவறத்தினையுளமுன்மூவறினும்
பாங்குறநிததலும்பரிந்துசெய்தியால்.

76 வழக்கறுமறத்தினைமற்றுச்செய்துமென்
றொழுகிடாதொல்லுறும்வகையினைச்சொலு
மழுக்கெனுமுளத்தழுக்காறவாமுத
லிழுக்கொடுவெகுளியுமின்றிச்செய்கவே.

77 அன்புறுமறத்தினலிக்குமின்பமே
யின்பெனத்தக்கதாலேனையின்பெலாந்
துன்பமும்பழியையுந்தோற்றுமாதலால்
வன்புறுமறத்தினைமறப்பிற்கேடுறும்.

## திருக்குற்றலப்புராணம்.

78 ஆதுலர்சாலைசோலையாவின்வாயுறைகண்ணாடி
யோதுவார்க்குணவுதண்ணீருறுபந்தர்மடந்தடாகங்
கோதிலாவுரிஞ்சிசுண்ணங்கொலையுயிர்விடுத்தலேறு
மாதலைக்கெண்ணெய்கண்ணோய்மருந்துநன்மகப்பால்சோறு

79 அறுசமயத்தோர்க்குண்டியழிந்தோரைநிறுத்தலட்டூண்
பிறாறங்காத்தலையம்பெண்போகமகப்பேறய்த்த
னறியதீன்விலங்கூண்வண்ணானாவிதன்சிறைச்சோறுநி
மறுதலத்தறமெண்ணான்குமனையறத்திவ்வூர்நல்கும்.

80 பூதானம்பரிதேர்யானைபொன்வெள்ளிவிளைவுகன்னி
காதானந்தைலமெள்ளுக்கலைபணியடிமையில்லங்
கோதானமன்னதானங்கூறுமெண்ணிருதானத்தி
னோதானபலனுமன்னமிட்டுண்பார்க்கருளுமிவ்வூர்.

## சேதுபுராணம்.

81 திருவுமின்புஞ்சிறப்பும்புகழுமற்
றொருவராக்கலுநீக்கலுமுள்ளவோ
மருவும்புண்ணியமாந்தர்க்கவையெலாந்
தருமமின்றெனிற்றமேசிதையுமால்.

## திருக்கூவப்புராணம்,

82 தருமமேயிணையில்பொருடாரையிடைத்தகைசா
லொருமையினைபினையுதவியின்றாலகிலுமுடன்போ
யருமையின்பமுய்த்தருதக்கதெனமெனிலறமே
யிருமையுந்துணையாகுவதன்றிமற்றில்லை.

## கூர்மபுராணம்.

83 அறந்திறம்பாதுநாளுமரும்பொருள்காமந்துய்ப்போர்
சிறந்தவிவ்வுலகந்தன்னிலளப்பருஞ்செல்வமெய்தி
மறங்கிளர்வடிவேலுண்கண்வானவர்மகளிரோடு
முறங்கிடாதின்பந்துய்த்துமுலகினிலினிதுவாழ்வர்.

## திருப்பரங்கிரிப்புராணம்.

84 *தருமமேதனித்தன்றுதக்கதோர் துணையதாகுந்
தருமமேபொருள்களையுந்தந்திடும்வருணநாளுந்
தருமமெய்யாகச்செய்யுஞ்சமயமோரட்டணைமற்றுந்
தருமமேகாக்கும்வேந்தர் தடமுடியிடறுந்தாளாய்.

85 *இளமையர்காளையானொழிலறவிருத்தரேனும்
வளர்தருமங்கள்வேண்டுமருவுகண்ணுடிகன்றுமுள்
விளையுமூழ்ந்துநாளும்போதுமேனிமெய்யன்றுகாலன்
வளைவதுமறியாரந்நோமட்டேடிதநிறைக்குந்தாராய்.

## காசிரகசியம்.

86 *சிறுபொருள்கைக்கொண்டோரானசெயத்தகுதருமஞ்செய்
தார், இருபொருள்கைக்கொண்டோர்செயறத்தினுமுயர்ந்து
தோன்று, மூறுபொருள்கைக்கொண்டோருமுயர்வுறுந்தரு
மஞ்செய்யிற், சிறுபொருள்கைக்கொண்டோர்செயயறத்தினுஞ்
சிறிதாகத்திரும்.

87 தருமமேயுலகம்போற்றச்சகலகாரணமதாகுந்
தருமமேயழியாதென்றுந்தாபரமாகிநிற்குந்
தருமமேதனைவேட்டோர்க்குச்சவுக்கியமனைத்துநல்குந்
தருமமேமுத்திசேருஞ்சாதனமென்றுட்கொள்வான்.

88 ஈங்கியற்றறத்தினாலேயெய்திடுஞ்சித்தசுத்தி
யாங்கதுமேவின்யோகமாமதனுவின்பாகும்
பாங்குசேரிதனைத்தேராப்பாதகர்பொருளையீட்டி
நீங்குவர்வறிதேயெல்லாநிரயத்துங்குளிப்பவென்றான்.

89 எண்ணருந்தருமவாஞ்சையெய்தினோர்சாந்தமேவிக்
கண்ணருஞ்சுத்திபெற்றுக்கதிக்காசாகிவாழ்வார்
பண்ணரும்பொருளில்வாஞ்சைப்பட்டவாளவரப்பாவ
நண்ணருங்குணமாக்கொண்டொரெலாந்துணையாநிற்பர்.

### சிவதருமோத்தரம்.

90 *பாம்பழல்வாயினுற்பற்றமண்டுகந்
தேம்பிடுந்துயருறுஞ்சீவன்றேயுநா
ளோம்பிடவல்லரேயுற்றமற்றையார்
போம்பொழுதருந்துணைபுரிந்தபுண்ணியம்.

### பிரபுலிங்கலீலை.

91 எய்தற்கரியயாக்கைதனக்கெய்திற்றென்றாலதுகொண்டு
செய்தற்கரியவறங்கள்பலசெய்துயர்கூர்பிறவியினின்
றுய்தற்கொருமைபெறவெண்ணுதுழல்வோனுடம்புபொற்
கலத்திற், பெய்தற்குரியபால்கமரிற்பெய்தசெதாக்குமென்பரால்.

92 மின்போலழியுமுடல்கொடுநல்வினைசெய்தழியாவுடம்பெய்தி
யின்போடமர்தலாயிருப்பயாக்கைவருந்துமென்றெண்ணி
யன்போடறஞ்செய்திலையாமலருந்திவாளாவிருக்குமவன்
றன்போன்மருளரிலையென்றான்றண்பூம்பொழில்வைத்தளிக்
கின்றான்.

### பிரபோதசந்திரோதயம்.

93 *தருமமாவதுவேயின்பந்தருமலாற்றருமநீக்குங்
கருமமாவதுபோற்றேன்றிக்காட்டினும்பசுமட்பாண்டத்
தருமையாநிரப்புந்தெண்ணீரனைதுமப்பாண்டத்தோடு
மொருமையாக்கெடுதலேபோன்றொருகணத்தழியுமன்றே.

### இராமாயணம்.

94 முன்புநின்றிசைநிறீஇமுடிவுமுற்றிய
பின்புநின்றுறுதியைப்பயக்கும்போற
மின்பம்வந்துறுமெனினினியதாயிடைத்
துன்பம்வருதுறுமெனிற்றுறக்கலாகுமோ.

### சீவகசிந்தாமணி.

95 திருந்தியால்லறச்செம்பொற்கற்பகம்
பொருந்தியபொருளொடுபோகம்பூத்தலால்
வருந்தினுமறத்திறமறத்தலோம்புமின்
கரும்பொனத்திரண்டதோட்காலவெற்கணீர்.

## சிலப்பதிகாரம்.

96 காலைச்செய்குவமறமெனினின்றே
கேள்விநல்லுயிர்நீங்கினுநீங்கு
மிதுவெனவரைந்துவாழுநாளுணர்ந்தோர்
முதுநீருலகின்முழுவதுமில்லை.

## மணிமேகலை.

97 தவத்துறைமாக்கண்மிகப்பெருஞ்செல்வ
ரீற்றிளம்பெண்டிராற்றுப்பாலகர்
முதியோரென்னுனிளையோரென்னான்
†கொடுந்தொழிலாளனைகொன்றனன்குவிப்பவிவ்
வழல்வாய்ச்சுடலைதின்னக்கண்டுங்
கழிபெருஞ்செல்வக்கள்ளாட்டயர்ந்து
மிக்கநல்லறம்விரும்பாதுவாழு
மக்களிற்சிறந்தமடவோருண்டோ.

98 *இளமையுநில்லாயாக்கையுநில்லா
வளவியவானபெருஞ்செல்வமுநில்லா
புத்தேளுலகம்புதல்வருந்தாரார்
மிக்கவறமேவிழுத்துணையாவது.

## வளையாபதி.

99 *பொருளைப்பொருளாப்பொதிந்தோம்பல்செல்லா
தருளைப்பொருளாவறஞ்செய்தல்வேண்டு
மருளைப்பொருளாவறஞ்செய்துவான்கண்
ணிருளில்லியல்பெய்தாததென்னோநமர்காள்.

## நாலடியார்.

100 மற்றறிவாநல்வினையாமிளையமென்னாது
கைத்துண்டாம்போழ்தேகரவாதறஞ்செய்மின்
முற்றியிருந்தகனியொழியத்தீவளியா
னற்காயுதிர்தலுமுண்டு.

---

† கொடுந்தொழிலாளன் - யமன்.

101 இன்றுகொலன்றுகொலென்றுகொலென்னாது
பின்றையேநின்றதுகூற்றமென்றெண்ணி
யொருவுமின்றீயவையொல்லும்வகையான்
மருவுமின்மாண்டாரறம்.

102 என்னைமற்றிவ்வுடம்புபெற்றுமறநினையார்
கொன்னேகழிப்பர்தம்வாழ்நாளை—யன்னோ
வளவிறந்தகாதற்றமாருயிரன்னார்க்
கொளவிழைக்குங்கூற்றமுங்கண்டு.

103 பெருங்கடலாடியசென்றாரொருங்குட
னோசையவிந்தபின்னாடுதுமென்றற்றா
லிற்செய்குறைவினைநீக்கியறவினை
மற்றறிவாமென்றிருப்பார்மாண்பு.

### நான்மணிக்கடிகை.

104 *நிலத்துக்கணியென்பநெல்லுங்கரும்புங்
குளத்துக்கணியென்பதாமரைபெண்மை
நலத்துக்கணியென்பநாணந்தனக்கணி
தான்செல்லுலகத்தறம்.

### அறநெறிச்சாரம்.

105 *தனக்குத்துணையாகித்தன்னைவிளக்கி
யினத்துளிறைமையுஞ்செய்து—மனக்கினிய
போகந்தருதலாற்பொன்னேயறத்துணையோ
டேகமாநண்பொன்றுமில்.

106 *ஈட்டியவொண்பொருளுமில்லொழியுஞ்சுற்றத்தார்
†காட்டுவாய்நேரேகலுழ்ந்தொழிவர்—மூட்டு
மெரியினுடம்பொழியுமீதென்றநாட
தெரியினறமேதுணை.

† காட்டுவாய் - இடுகாட்டில்.

107 *இன்சொல்விளைநிலமா வீதலே வித்தாக
வன்சொற்களைகட்டு வாய்மையெருவட்டி
யன்புநீர்பாய்ச்சி †யறக்கதிரீனுமோர்
பைங்கூழ்சிறுகாலைச்செய்.

108 *காலைச்செய்வோமென்றறத்தைக்கடைப்பிடித்துச்
சாலச்செய்வாரே தலைப்படுவார் — மாலை
கிடந்தானெழுதலரிதான்மற்றென்கொ
லறங்காலைச்செய்யாதவாறு.

109 *சென்றநாளெல்லாஞ்சிறுவிரல்வைத்தெண்ணலா
நின்றநாள்யார்க்குமுணர்வரி — தென்றொருவ
னன்மைபுரியாதுநாளுலப்பவிட்டிருக்கும்
புன்மைபெரிதுபுறம்.

110 *இன்றுளாரின்றேயுமாய்வாரவருடைமை
யன்றேபிறருடைமையாயிருக்கு — நின்ற
கருமத்தாலல்லாதகூற்றின்கீழ்வாழ்வார்
தருமந்தலைநிற்றனன்று.

111 *பின்னுமிளமையுளதாமெனமகிழ்ந்து
பின்னையறிவென்றல்பேதைமை — தன்னைத்
துணித்தானுந்தூங்காதறஞ்செய்ககூற்ற
மணித்தாய்வருதலுமுண்டு.

112 *அம்மைத்தாஞ்செய்தவறத்தின்வருபயனை
யிம்மைத்துய்த்தின்புறுநிறைவ — ரும்மைக்
கறஞ்செய்யாமையுமுலனுமாற்றாதனல்லாக்
கறந்துண்டலோம்பாமையாம்.

---

† "அறப்பைங்கூழாக்குவார்க, ளென்றுமிம்மை யில்" என்பது புறத்திரட்டிற்கண்ட பாடபேதம்.

113 *செல்வத்தைப்பெற்றார்சினங்கடிந்துசெவ்வியராய்ப்
பல்கிளையும்வாடாமற்பாத்துண்டு—நல்லவாந்
தானமறவாததன்மையரேலஃதென்பார்
வானகத்துவைப்பதோர்வைப்பு.

## நன்னெறி.

114 கொள்ளுங்கொடுங்கூற்றங்கொல்வான்குறுகுதன்மு
னுள்ளங்கனிந்தறஞ்செய்துய்கவே—வெள்ளம்
வருவதற்குமுன்னரணைகோலிவையார்
பெருகுதற்கண்ணென்செய்வார்பேசு.

## நல்வழி.

115 *ஆறிடுமேடுமடுவும்போலாஞ்செல்வ
மாறிடுமேறிடுமாநிலத்தீர்—சோறிடுந்
தண்ணீரும்வாருந்தருமமேசார்பாக
வுண்ணீர்மைவீறுமுயர்ந்து.

## திருக்குறள்.

116 சிறப்பீனுஞ்செல்வமுமீனுமறத்தினூஉங்
காக்கமெவனோவுயிர்க்கு.

117 அறத்தினூஉங்காக்கமுமில்லையதனை
மறத்தலினூங்கில்லைகேடு.

118 ஒல்லும்வகையானறவினையோவாதே
செல்லும்வாயெல்லாஞ்செயல்.

119 அன்றறிவாமென்னாதறஞ்செய்கமற்றது
பொன்றுங்காற்பொன்றாத்துணை.

120 அறத்தான்வருவதேயின்பமற்றெல்லாம்
புறத்தபுகழுமில.

ஆகச்செய்யுள் 49. அறச்சிறப்பு முற்றிற்று.

---

### கந்தபுராணம்.

121 துறந்தவர்கள்வேண்டியதொர்துப்புரவுநல்கி
யிறந்தவர்கள்காமுறுமிருங்கடனியற்றி
யறம்பலவுமாற்றிவிருந்தோம்புமுறையல்லாற்
பிறந்தநெறியாலுளதொர்பேருதவியாதோ.

### விநாயகபுராணம்.

122 வருவாய்க்கியையவாழ்தலுறுமறுவில்கற்பின்மனையாள்போற்
பொருள்யாவுளவாமதுவன்றிப்புகழும்பயனுமிகவுண்டாங்
கருதாரெதிரேயிமிலேற்றுக்காமர்நடையுமுறுமதனா
லொருவாதவளோடொப்புறவேயுற்றுவாழ்தலறனாகும்.

### பேரூர்ப்புராணம்.

123 உரம்பெறுபிரமசாரிவனத்துறைவோருலகனைத்தையுமறநீத்
தோர், பரம்பரன்றெனாதுபுலத்தவர்விருந்துபசையுடை
யொக்கன்மன்றுறந்தோர், ரரம்புசெயிலம்பாட்டினரிறந்தாரென்
றையிருவரையுநன்றோம்பி, வரம்பெறுதமைப்பி
னோம்புநரல்லாதவர்மனையறத்தவணிலரே.

### திருக்குற்றாலப்புராணம்.

124 இத்தகையநால்வர்களின்மூவருக்குமிறந்தார்க்கு
மத்தமுதலற்றார்க்குமாதாரமாதலினா
லுத்தமமாமில்லறமேவாழ்வினுக்குமுயாகநிக்கும்
வித்துமாந்துறவறத்தின்வேருமாமெனும்வேதம்.

125 தருமமெனும்பண்டமிடுஞ்சகடமாமனைவாழ்க்கை
கருமநுகம்பிணித்துமனைக்காதலியுந்தானுமென
விருவராய்முறைசெலுத்தினெத்துணைத்தூரமுஞ்செல்லு
மொருவராய்ப்பூண்டிழுப்பினோரிறையுஞ்செல்லாதால்.

### கூர்மபுராணம்.

126 தருமமாற்றனன்னெறியிற்பொருள்களீட்டறம்மொழுக்கின்
மருவுகாமந்துய்த்தறம்மூர்வாழ்த்தவாழ்தலிகழ்வனகள்
புரிதல்செய்யாதுவப்பனவேபுரிதலுலகத்தொடுமொழுகல்
கருணையொடுமில்லறம்புரிவோர்கடனென்றெவருங்கட்டு
ரைத்தார்.

### மாயூரப்புராணம்.

127 *தருகுணந்தவிரில்லாளைச்சார்ந்துலகுள்ளோர்யாரு
மருமுகத்தினரேயாகயந்துவாழ்வதினுஞ்சீவ
னுருதிறமெதனாலேனுமுடம்பினையொறுத்தனன்றுஞ்
செகுதிறற்றுன்பம்யாவுஞ்சேராதுன்மரணமென்றே.

### சிவ-பரமார்த்ததரிசனம்.

128 *துறந்தவர்மூவர்தேவர்துளக்கமில்பிதிரர்நோய
ரறந்திகழ்விருந்தர்பாலரந்தணர்நல்விருந்தர்
சிறந்ததாய்தந்தைசுற்றநதிருத்தமுற்றதற்பின்மிக்க
வறந்தருமில்லாளோடுமருந்தலில்லறமதன்றே.†

129 *கொலையொடுகளவுகட்காமங்கோபமென்
புலைகடிந்தைதவகைப்புலனுமோம்பின
னிலையினிலனுவதுவழுவினில்லற
மலைவுறாநாகிடையடைக்குமல்லவே.

### நன்னெறி.

130 காதன்மனையாளுங்காதலனுமாறின்றித்
தீதிலொருகருமஞ்செய்பவே—யோதுகலை
யெண்ணிரண்டுமொன்றுமதியென்முகத்தாய்நோக்குறுன்
கண்ணிரண்டுமொன்றையேகாண்.

### சிதம்பரமும்மணிக்கோவை.

131 நல்லறநூல்களிற்சொல்லறம்பலசில
வில்லறந்துறவறமெனச்சிறந்தனவே

---

† அன்று, ஏ - அசைகள்.

யந்நிலையிரண்டினுண் முன்னதுகிளப்பிற்
கற்றநூற்றுறைபோய்க்கடிமனைக்கிழவ
னற்குணநிறைந்தகற்புடைமனைவியோ
டன்புமருளுந்தாங்கியின்சொலின்
விருந்துபுறந்தந்தருந்தவர்ப்பேணி
யைவகைவேள்வியுமாற்றியிவ்வகை
நல்லறநிரப்பிப்பல்புகழ்நிறீஇப்
பிறன்மனைநயவான்றன்மனைவாழ்க்கைக்கு
வரையாநாளிடை மகப்பேறுகுறித்துப்
பெருநலந்துய்க்கும்பெற்றித்தன்றே.

வளையாபதி.

132 *தாரநல்விதந்தாங்கித்தலைநின்மி
ஞருநாடுமூவதநலொருதலை
வீரவென்றிவிறன்மிகுவிண்ணவர்
சீரினைத்திச்சிறப்பெதிர்கொள்பவே.

நாலடியார்.

133 மறைநிலைக்குமாடமாய்மாண்பமைந்தகாப்பா
யிறைஞ்சிளக்குநிறைமைப்பினென்னும்—விறைமதக்க
மாண்டமனையாளையில்லாதானில்லகங்
காண்டற்கரியதோர்காடு.

நான்மணிக்கடிகை.

134 *கல்லாவொருவர்க்குத்தம்வாயிற்சொற்கூற்ற
மெல்லிலைவாழைக்குத்தானீன்றகாய்கூற்ற
மல்லவைசெய்வார்க்கறங்கூற்றங்கூற்றமே
யில்லத்துத்தீங்கொழுகுவாள்.

135 மழையின்றிமாநிலத்தார்க்கில்லைமழையுந்
தவமிலாரில்வழியில்லைதவமு
மரசியலில்வழியில்லையரசனு
மில்வாழ்வானில்வழியில்.

136 *எண்ணெணக்குஞ்சான்றோர்மரீஇயாரிற்றீராமை
புண்ணெணக்கும்போற்றாருட னுறைவு—பண்ணிய
யாழொக்குநட்டார்கழறுஞ்சொல்பாழொக்கும்
பண்புடையாளில்லாமனை.

## அறநெறிச்சாரம்.

137 பிச்சையுமையமுமிட்டுப்பிறன்றார
நிச்சலுநோக்காது பொய்யொரீஇ—நிச்சலுங்
கொல்லாமைகாத்துக்கொடுத்துண்டுவாழ்வதே
யில்வாழ்க்கையென்னுமியல்பு.

138 விருந்துபுறந்தரான்வேளாண்மைசெய்யான்
பெருந்தக்கவரையும்பேணன்—பிரிந்துபோய்க்
கல்லான்கடுவினைமேற்கொண்டொழுகுமே
லில்வாழ்க்கையென்பதிருள்.

139 மருவியகாதன்மனையாளுந்தானு
மிருவரும்பூண்டேர்ப்பினல்லா—லொருவரா
லில்வாழ்க்கையென்னுமியல்புடையவான்சகடஞ்
செல்லாதுதெற்றிற்றுநின்று.

140 வினைகாத்துவந்தவிருந்தோம்பிநின்றான்
மனைவாழ்க்கைநன்றுதவத்திற்—புனைகோதை
மெல்லியனல்லாளுநல்லள்விருந்தோம்பிச்
சொல்லெதிர்சொல்லாளேனில்.

141 *கொண்டானைகுறிப்பொழுகல்கூறியகானுடைமை
கண்டது கண்டுவிழையாமை—விண்டு
வெறுப்பனசெய்யாமைவெஃகாமைநீக்கி
யுறுப்போடுணர்வுடையாள்பெண்.

142 *படைப்பதூஉமக்கட்பெறுவதூஉம்பெண்பாலன்
முடிப்பதூஉமெல்லாருஞ்செய்வர்—படைத்ததனை
விட்டுண்டில்வாழ்க்கைபுரிந்துதாநல்லறத்தே
நிற்பாரேபெண்டிரென்பார்.

143 *வழிபாடுடையளாய்வாழ்க்கைகடாவாய்
முனியாதுசொல்லிற்றுச்செய்தாங்—கெதிருரையா
தேத்திப்பணியுமேலில்லாளையாண்மகன்
போற்றிப்புணையும்பரிந்து.

144 *அட்டுண்டுவாழ்வார்க்கதிதிகளென்ஞான்று
மட்டுண்ணுமாட்சியுடையவ—ரட்டுண்டு
வாழ்வார்க்குவாழ்வாரதிதிகளென்றுரைத்தல்
வீழ்வார்க்குவீழ்வார்துணை.

## மூதுரை.

145 *இல்லாளகத்திருக்கவில்லாததொன்றில்லை
யில்லாளுமில்லாளேயாமாயி—னில்லாள்
வலிகிடந்தமாற்றமுரைக்குமேலவ்வில்
புலிகிடந்ததூறாய்விடும்.

## திருக்குறள்.

146 அன்புமறனுமுடைத்தாயினில்வாழ்க்கை
பண்பும்பயனுமது.

147 அறத்தாற்றினில்வாழ்க்கையாற்றிற்புறத்தாற்றிற்
போஒய்ப்பெறுவதெவன்.

148 அறனெனப்பட்டதேயில்வாழ்க்கையஃதும்
பிறன்பழிப்பதில்லாயினன்று.

ஆகச் செய்யுள் 28 இல்லறம் முற்றிற்று.

---

## ரு-அதி. கற்பு

---

## கந்தபுராணம்.

149 காண்டகையதங்கணவரைக்கடவுளார்போல்
வேண்டலுறுகற்பினர்தமெய்யுரையினிற்கு
மீண்டையுளதெய்வதமுமாமுகிலுமென்றா
லாண்டகைமையோர்தனுமவர்க்குநிகரன்றே.

150 மேனவியல்பான்வரையுமெல்லியலைமேவிற்
றானமுளதாகுமரிதானதவமாகும்
வானமுளதாகுமிவண்மண்ணுமுளதாகு
மூனமிலதாருமரிதொன்றுமிலையன்றே.

151 காவன்மன்னவனிறந்தனனெனுமுரைகன்னத்துண்
மேவுமெல்லையிலசனியேறுண்டவெம்பணியேபோற்
றேவியாகிய†பதுமகோமளையெனுந்திருமங்கை
யாவிநீங்கினடலையளியாகியததுவன்றே.

### திருக்குற்றலப்புராணம்.

152 சிறுகாலையட்டில்புகலருத்தியுறச்சமைத்தல்சுவைதிருத்தி
யூட்டன், மறுகாலையொண்ணாது விருந்தழைத்தன்மகப்பெறு
தன்மடநாணச்சம், பெறுகாலையின்புறுதன்முன்னுறங்கப்
பின்னுறங்கல்பின்னெழாத, லுறுகாலைதொழுதெழுதல்
பன்னிரண்டுமங்கைர்க்கற்புடையோர்செய்கை.

### திருக்கூவப்புராணம்.

153 மிடியினர்குணமிலர்விருத்தர்நோயினர்
வடிவிலருறுப்பிலர்வஞ்சர்மூடர்வெங்
கொடியவராயினுங்கொழுநர்தம்மிடை
மடிவிலரன்புகற்புடையமாதரே.

### திருக்குடந்தைப்புராணம்.

154 *கொழுநனமுதுண்டதன்பின்றாமுண்பார்குலவுபணி
யொழுகியவன்றுயின்றதன்பின்றாந்துயில்வாருறங்கியவ
னெழுவதன்முனெழுந்திருப்பாரில்லறத்திற்குரியவாய்ப்
பழுதகல்கற்புயர்நெறிகொள்பண்புமிகுபாவையரே.

155 *வினைதருபொற்கலனனைத்துமாற்றவளுக்கிதரினுந்
தினையளவுமுனியார்கடனிவழியுஞ்செல்லார்க
ளனையினுமோர்முதுமாதர்தனையன்றியயலகத்து
நினைதரார்புகுதல்செயநீடியகற்புடைமாதர்.

† பதுமகோமளை - குசபதுமன்மனைவி.

156 *ஆயகறைமேற்கிடக்கும்படியின்மேலுலக்கையின்மேற்
பாயவெழினிறைவாயிற்படியின்மேன்மரீஇயமரிற்
றாயதிருவகலுமெனத்துணிந்திராசெஞ்ஞான்று
நேயமிகுபெருங்கற்புநிறைந்தகுலமடமாதர்.

157 *புறமாகுழுந்நாளுநோக்குற்றார்புருடன்முக
மறமாகும்விரைந்தென்றோர்மொழிபேசும்வசனியா
ரறமாகும்படிபுனலிற்றோய்ந்தனையன்முகம்பார்ப்பார்
திறமாருங்கற்புநெறிதிறம்பாதசேயிழையார்.

158 *புண்ணியநன்னீராடல்போற்றுமொருநோன்புகொள
லெண்ணியநான்முகன்முதலோரிமையவரைத்தொழுதேத்த
லண்ணியநாயகனனுஞ்ஞையல்லாதுசெயத்துணியார்
கண்ணியவான்பெருங்கற்புக்கடப்பாட்டுக்காரிகையார்.

159 *கடவுளரியனீன்றான்காமநுறப்பெற்றெடுத்தா
ளுடனுதித்தார்மற்றுமுளவுற்றார்களெல்லோரு
மடமகளுயகனேயென்றருநப்பாட்டின்வாழ்தருவார்
திடமிகுவண்பெருங்கற்பிற்சிறந்தவளர்சேயிழையார்.

வாயுசங்கிதை.

160 கணவர்தம்மேவல்பூண்டுகற்பினிலொழுகிடாதா
ரணுகருங்கொடியவெய்யநரகினுளழுந்துவாராற்
பணிவுறுங்கணவர்தம்மையிழந்தநற்பான்மையின்றி
யணிகலன்றுறந்தமாதர்தன்மையையறைதுவாமே.

161 தரையினிற்கிடத்தறுணலகிடறயங்குசீ
லரியவெண்ணீற்றின்மூழ்கலண்ணலைப்பூசைசெய்த
லொருபகலுண்டிமையகலட்டமியதிறுண்கோடு
மருவுபூரணையிலுண்டியொழிந்திடல்வழக்கதாயால்.

காசிகண்டம்.

162 கொழுநனுண்டபின்றானுகர்கொள்கையும்
விழிதுயின்றபினாறுஞ்சலுமென்றுயி
லெழுதனமுன்னமெழுதலுமேயன்றே
பழுதில்கற்புடைப்பாவையர்செய்கையே.

163 எரிமணிப்பொலம்பூண்சுமந்தின்னுயிர்க்
குரியகேள்வருவப்பமுனைய்துவார்
பிரியுங்காலையிற்பெய்கலன்யாவையு
மொருவிமாசுடலுண்டிடவைதுவார்.

164 இனியகேள்வர்முனியினெதிர்நின்று
துனிகொணெஞ்சொடெதிர்மொழிசொல்கிலா
ரனையகேள்வரெறியினுமன்பொடு
கனிவர்நெஞ்சகங்கற்புடைமாதரே.

165 எய்துமிற்றுறந்தேகலரில்லக
றையலார்முகங்காணினுஞ்சாய்புவார்
மையில்காதலர்வந்தெவையாயினுஞ்
செய்திரென்றலுஞ்செய்தனமென்பரால்.

166 விழவுகண்ணுறன்மேதருநேண்புறல்
பழுதிறாநதியாடுதல்பண்ணவர்த்
தொழுதுவாழ்த்துதறேமமுகற்பினோர்
கொழுநரேவலினன்றிக்குறிக்கொளார்.

167 வலையுந்தங்கலன்மாற்றவட்கியினு
முனிவுசெய்கலர்மூப்பினர்சேர்வுறுந்
தனியிற்சேர்கலர்தாம்பிறரிற்புகார்
புனிதநெஞ்சுடைப்புண்ணியமாதரே.

168 திருந்துமாயுள்சிதையுமென்றெண்ணித்தம்
பொருந்துகாதலர்நாமம்புகன்றிடா
ரிருந்தபோதன்றித்தாமுனிருந்திடா
ரருந்துமிச்சிலமிழ்தினுகர்வரால்.

169 அறந்தவாத்தமதன்பருளிறைற்
றுறந்துளோர்பிறப்போர்தொழில்செய்குநர்
சிறந்ததொல்குலத்தெய்வம்பசுவிருந
திறந்துளோர்க்கும்பகுத்தினிதுண்பரால்.

170 மேவுகாதலருள்ளம்விழைந்தன
வேவுமுன்னர்க்குறிப்பினியற்றுவார்
தாவிலன்பர்தமையலர்தூற்றிடும்
பூவையன்னவர்புன்முகநோக்கிலார்.

171 இல்லறத்திற்கியைவனவீட்டுவா
ரல்லசெய்தவறிதினழித்திடார்
புல்லுகாதலராயுள்பொலிவுற
மல்லலோங்கணிமஞ்சளணிவரால்

172 கொழுநன்சொற்கடவாதுறைகொள்கையே
வழுவினல்லறம்வான்றவமாற்றுத
றொழுதுதெய்வம்பாய்மலர்தூவுதல்
பழுதில்கற்புடைப்பத்தினிக்கென்பவே.

173 அழகின்வீக்கஞ்சிறிதலராயினு
†மொழிவினோய்நிரப்புற்றனராயினுங்
கிழவுத்தன்மையராயினுங்கேள்வரைப்
பழுதுசொல்கலர்பண்பின்முயங்குவார்.

174 அன்பர்தாஞ்சிடிற்றஞ்சுதலாங்கவர்
துன்பமெய்திடிற்றுழமத்துன்புற
வினைபழுற்றிடிவினைபுற்றிருத்தலே
மன்பெருந்தவங்கற்புடைமாதர்க்கே.

175 வாள்விழிக்குலமங்கையரன்பர்பொற்
றாள்விளக்கியதண்புனல்கங்கையக
கேள்வரேகினர்தேவர்கண்மூவரி
லாளுமெய்ம்மைபடிகளென்றெண்ணுவார்.

176 ஆன்றகற்பினர்பூப்பினகன்றுறை
மூன்றுநாளுமுகமலர்காட்டலர்
தோன்றயாதுஞ்சொல்லலர்புனறோய்ந்தபின்
சான்றகாதலர்தம்முகநோக்குவார்.

† ஒழிவினோய - தொழுநோய்முதலியன.

177 புனிதமாநதிப்பூம்புனலாடுநா
ளினியகாதலர்வேற்றிடமெய்திடி
லனையகேள்வரையன்பின்மனக்கொடு
பனிவிசும்பிற்பரிதியைநோக்குவார்.

178 வசையில்காதலர்தாய்தந்தையைவந்தறி
†லசதியாடிலரன்பாழைத்திடின்
மிசையுநல்லமுதேனும்விடுத்துள
நசையினோடும்பொருக்கெனநண்ணுவார்.

179 தாதைதன்னினுந்தன்னையர்தம்மினு
மாதர்மென்மொழிமைந்தர்கடம்மினுங்
கோதில்கற்புடையார்தங்கொழுநர்பாற்
காதல்கூர்ந்துகளிமகிழ்வெய்துவார்.

180 உரவிலம்மியிலோங்குமுலக்கையிற்
பரவும்வாயிற்படியின்முறத்தினிற்
றிருவகன்றிடுமாலெனச்சேர்ந்திரார்
பொருவில்கற்புடைப்புண்ணியமாதரே.

181 உரியகேள்வருவந்துபணிந்திடா
தரியநோன்பொடுபூசனையாற்றுவார்
கரியகூற்றுவன்றூதர்கடிந்திட
வெரியுந்நீரகத்திடையெய்துவார்.

182 கடிமணஞ்செயுங்காதலர்தம்பழி
மடமையோடுமொழிபவர்மற்றவ
ருடனவெதுண்டுரையாநிநரோரியாய்
‡முடுவலாகப்பிறப்பர்முடிவினே.

183 கொழுநர்சீறிற்குறுகிமுன்வைபவ
ருழுவையாகப்பிறப்பருருத்துநெஞ்
சழலமாறறவடசீறுமறிவிலோர்
கழல்கட்கூகைப்பிறப்பிற்கழிவரால்.

† அசதி - சிரித்துப்பேசுதல்.
‡ முடுவல் - பெண்நாய்.

184 ஏதிலான்றனெழில்கண்டுவெப்பவர்
பேதுசெய்துழல்பேயுருவெய்துவார்
காதலனைபசிக்கக்களித்துண்பவர்
பாதகஞ்செயும்பன்றியிற்றோன்றுவார்.

185 மருவுகாதலராருயிர்மாய்ந்திடி
லெரியின்மூழ்கியிறந்துபடுவதற்
கருநெறித்தலைவைகுமரிவையர்
புரவிநன்மகப்பேறுபொருந்துவார்.

186 முற்றுசெந்தழலுண்மூழ்கியகற்பினோர்
புற்றராக்கொடுபுள்ளரசேகல்போ
லெற்றுகாலபடர்கைப்பறித்தினி
சுற்றகேள்வரோடும்பரினேகுவார்.

187 கொழுநன்பாவியெனினுங்கொழுநனோ
டழலின்மூழ்கினள்கற்புடையாளெனின்
விழியிலன்னவட்காணின்வெங்கூற்றுவ
னுழுவலன்புனைக்கைவிடுத்தோடுமே.

188 வடபுலத்துவயங்குமருந்ததிக்
கடவுட்கற்பினர்காந்திதங்கண்ணுறிற்
படர்சிகைக்கனல்வெங்கதிர்பான்மதி
சுடர்மழுங்கிப்பொலிவிலதோன்றுமால்.

189 தீகாதலனோடுயிர்நீத்திடும்
வீடில்கற்பினண்மெய்ம்மையிரொன்றினாஞ்
தாடகப்பசும்பொன்னிலத்தாயிரங்
கோடிகாலங்கொழுநனோடின்புறும்.

190 கற்புமேயகனங்குழைமாதரைப்
பெற்றவோர்தம்மரபும்பெருந்தவக்
கற்பினுட்கொண்டகாதலனாருயிர்ச்
சுற்றம்யாவுந்துறக்கத்தினெய்துமால்,

191 பொருவில்கற்பின்வழீஇயபுன்மங்கைய
ருரியமூன்றுமாயினுள்ளோரையும்
வெருவந்தேங்கிவிழுங்கியுமிழ்கலா
வெரியுந்தீநரகிற்குடியேற்றுவார்.

192 நண்ணுகற்புடைநங்கையர்சீறடி
மண்ணினெவ்விடந்தோயினுமற்றஃ
தெண்ணுகின்றதலங்களெவற்றினும்
புண்ணியத்தலமென்றுபுகல்வரால்.

பிரபுலிங்கலீலை.

193 குரவர்தாமியைந்துகொடுத்திலராயிற்குமாரவேளனையவரேனு
மருவாநிற்பர்தந்தைதாய்தங்களாணையின்றொழுதுகன்னியர்தா
முருவிலாரெனினுங்குரவருண்மகிழ்வுற்றுதவுறினனையவர்தம்
மைப், பரவுவான்கடவுளாகவேநினைந்துபண்பொடும்பாரிலுவ
ரன்றே.

பிரபோதசந்திரோதயம்.

194 *இற்பிறப்புடையமாதர்யாதுரைசெயினுங்கேள்வன்
சொற்பணிபுரிந்துதெய்வந்தொழாதவற்றொழுதுபேணிப்
பிற்படநுகர்ந்துதுஞ்சிப்பிறர்பழிப்பகற்றிமுற்றுங்
கற்பினில்வழாதுநிற்றல்கடனவர்க்காகுமன்றே.

நீதிநெறிவிளக்கம்.

195 கற்பின்மகளினலம்விற்றுணவுகொளும்
பொற்றொடிநல்லார்நனிநல்லர் — மற்றுத்தங்
கேள்வர்க்குமேதிலர்க்குந்தங்கட்குந்தங்கிளைஞர்
யாவர்க்குங்கேடுசூழார்.

இராமாயணம்.

196 மெய்க்கொண்டவுள்ளத்துமேலோரேயாயிடினும்
பொய்க்கொண்டசிந்தையாரேனும்பொதுவாய
மைக்கொண்டகண்ணார்மனைவியாகத்தம்மைக்
கைக்கொண்டிருந்தார்க்குத்தப்பக்கடனன்றால்.

### நளவெண்பா.

197 குற்றமில்காட்சிக்குதலைவாய்மைந்தரையும்
பெற்றுக்கொளலாம்பெறலாமோ—சொற்றவனே
கோக்காதலனைக்குலமகளுக்கென்றுரைத்தா
னோக்கான்மழைபொழியாநோக்கு.

### சீவகசிந்தாமணி.

198 சாமெனிற்சாதலோதன்னவன்றணந்தகாலைப்
பூமனும்புனைதலின்றிப்பொற்புடன்புலம்பவைகிக்
காமனையொன்றுஞ்சொல்லார்கணவற்கைதொழுதுவாழ்வார்
தேமலர்த்திருவோடொப்பார்சேர்ந்தவன்செல்லறீர்ப்பார்.

### சிலப்பதிகாரம்.

199 கடுங்கதிர்வெம்மையிற்காதலன்றனக்கு
நடுங்குதுயரெய்திநாப்புலரவாடித்
தன்றுயர்காணாத்தகைசால்பூங்கொடி
யின்றுணைமகளிர்க்கின்றியமையாக்
கற்புக்கடன்பூண்டவித்தெய்வமல்லது
பொற்புடைதெய்வம்யாங்கண்டிலமால்
வானம்பொய்யாதுவளம்பிழைப்பறியாது
நீணிலவேந்தன்கொற்றஞ்சிதையாது
பத்தினிப்பெண்டிரிருந்தநாடென்னு
மத்தகுநல்லுரையறியாயோநீ

### மணிமேகலை.

200 காதலரிறப்பிற்கனையெரிபொத்தி
யூதுலைக்குருகினுயிர்த்தகத்தடங்கா
தின்னுயிரீவரீயாராயி
னன்னீர்ப்பொய்கையினளியெரிபுகுவர்
நளியெரிபுகாஅராயினன்பரோ
டுடனுறைவாழ்க்கைக்குநோற்றுடம்படுவர்
பத்தினிப்பெண்டிர்.

### வளையாபதி.

201 நாடுமூருநனிபுகழ்ந்தேத்தலும்
பீடுறும்மழைபெய்கெனப்பெய்தலுங்
கூடலாற்றவர்நல்லது கூறுங்காற்
பாடுசான்மிகுபத்தினிக்காவதே.

### பெருந்தேவனார்பாரதம்.

202 எப்பணியாலின்புறுவர்காதலரக்காதலரை
யப்பணியாலப்பொழுதேயன்புறுத்தி—யொப்ப
மனங்குழையும்வண்ணமகிழ்விப்பதன்றே
கனங்குழையார்தங்கள்கடன்.

### நாலடியார்.

203 அரும்பெறற்கற்பினயிராணியன்ன
பெரும்பெயர்ப்பெண்டிரெனினும்—விரும்பிப்
பெருநசையாற்பின்னிற்பாரின்மையேபேணு
நறுநுதலாணன்மைத்துணை.

204 குடநீரட்டுண்ணுமிடுக்கட்பொழுதுங்
கடனீரறவுண்ணுங்கேளிர்வரினுங்
கடனீர்மைகையாறுக்கொள்ளுமடமொழி
மாதர்மனைமாட்சியாள்.

205 எறியென்றெதிர்நிற்பாள்கூற்றஞ்சிறுகாலை
யட்டில்புகாதாளரும்பிணி—யட்டதனை
யுண்டியுதவாதாளில்வாழ்பேயிம்மூவர்
கொண்டானைக்கொல்லும்படை.

### சிறுபஞ்சமூலம்.

206 வருவாய்க்குத்தக்கவழக்கறிந்து சுற்றம்
வெருவாமைவீழ்விருந்தோம்பித்—திருவாக்குந்
தெய்வதையுமெஞ்ஞான்றுந்தேற்றவழிபாடு
செய்வதேபெண்டிர்சிறப்பு.

அறநெறிச்சாரம்.

207 *தலைமகனிற்றீர்ந்துறைதருஞ்பிறரிற்சேர்தல்
நிலைமையிறீப்பெண்டிர்ச்சேர்தல்—கலனணிந்து
வேற்றூர்ப்புகுதல்விழாக்காண்டலேனும்பிடுதல்
கோற்றொடியாள்கோளழியுமாறு.

208 *அயலூரவன்போகவம்மஞ்சளாடிக்
கயலேர்கண்ணாரவெழுதிப்—புயலைம்பால்
வண்டோச்சிநின்றுலாம்வாளேர்தடங்கண்ணா
டண்டோச்சிப்பின்செல்லுங்கூற்று.

தனிப்பாடல்.

209 கொண்டகணவன்குருபியேயானாலும்
பண்டுதான்செய்தபலனெனவே—கண்டுகொண்டு
குற்றமெனவெண்ணணிமனங்கோணாதவன்பணியைப்
பற்றிமிகச்செய்வார்பரிந்து.

திருக்குறள்.

210 பெண்ணிற்பெருந்தக்கயாவுளகற்பெனுந்
திண்மையுண்டாகப்பெறின்.

211 தெய்வந்தொழாஅள்கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப்பெய்யுமழை.

212 தற்காத்துத்தற்கொண்டாற்பேணித்தகைசான்ற
சொற்காத்துச்சோர்விலாள்பெண்.

213 சிறைகாக்குங்காப்பெவனசெய்யுமகளிர்
நிறைகாக்குங்காப்பேதலை.

ஆகச்செய்யுள்-67. கற்பு முற்றிற்று.

---

௯- அதி. மக்கட்பேறு.

---

கந்தபுராணம்.

214 தந்தையாயினோரினிதுவீற்றிருப்பத்தமது
மைந்தர்தங்குடிபரித்தலினனறிமற்றுண்டோ
வெந்தைவந்துநங்கோன்முறைபோற்றலால்யானு
சிந்தைதன்னிலோரெண்ணமுமின்றியேசிறந்தேன்.

## காஞ்சிப்புராணம்.

215 மகவேமேலாங்கதியாக்குமகவானுலகந்தனைவெல்லு
மகவின்மகவான்முடிவினைமையெய்து மகவின்மகவளித்த
மகவான்மேலைப்பாதமுறுந்தென்புலத்தார்கடனைமாற்றுவது
மகவானன்றியில்லையெனவறுத்தான்றெரித்துக்கண்ணுவனே.

## விநாயகபுராணம்.

216 எழுமைப்பிறப்புந்தீவினைவந்தெய்தாச்சிறப்புந்தென்புலத்தார்
முழுதுமுவக்குங்கடன்சாலமுடிக்குமாண்பும்பெறுதலினாற்
பழுதிறவங்கண்மிகப்புரிந்துமபயந்துமைந்தர்தமையவர்க்குக்
குழுமுமவையின்முந்திருப்பவறிவுகொளுத்தல்வேண்டுமால்.

## சீகாளத்திப்புராணம்.

217 கண்ணில்யாக்கையுந்திங்களில்கங்குலுங்கண்போ
லண்ணன்மந்திரியில்லரசாட்சியுமருளி
றிண்ணெனெஞ்சமும்புலவரிலவையுமொண்மடம்பால்
வண்ணவாயிளமக்களில்லாருமொப்பாமால்.

218 சேறளைந்தமென்சீறடித்தளிரொடுதீம்பாற்
சோறளைந்தகைத்தாமரையோடுசெந்துகிர்வா
யூறுநீர்நனைமார்பினேடிளமகாருந்தி
யேறுமின்பமுள்ளதனையேயுடம்பெனவிசைப்பார்.

219 அரிகொள்பொன்புனைகிண்கிணிதண்டையோடணிந்த
தருணமென்றளிர்ச்சீறடித்தளர்நடைச்சிறுவர்
மருவமுதசெவ்வாம்பல்வாய்மழலையாரமுதம்
பருகிலாச்செவிபாவையின்செவியெனப்படுமால்.

## திருக்கூவப்புராணம்.

220 இல்லொழுக்கமியைந்துபிதிர்க்கட
னெல்லும்வண்ணமுஞற்றிமரபுளோர்
செல்லும்வானிரயத்துயர்சிந்துவான
வல்லமக்கட்பெறற்கிணைமற்றிலை.

221 மெத்துகின்றவிழுமியசீர்த்தியோ
டெய்த்தலின்றியிருமையின்புந்தரும்
புத்திரற்பெறும்புண்ணியவாழ்க்கைதா
னத்தவத்தினுமாற்றச்சிறந்ததே.

### திருக்கழுக்குன்றப்புராணம்.

222 *இறைவர்ஞானமுமேதமிலாமையும்
பொறையும்பூண்டபுதல்வர்ப்பெறுவரேன்
மறவரேனுமவரையவ்வல்வினை
பிறவியேழினும்பின்றொடராதரோ.

### காசிகண்டம்.

223 எத்திருவுடையரேனுமின்கனிமழலைச்செவ்வாய்ப்
புத்திரனிலாதோரென்னும்பொறியிலாயவாற்றான்
மெய்த்தவம்புரிந்துமைந்தர்ப்பெறுவதேவிழைவர்யாரு
மூய்த்தகுமகவுமோரேழ்பான்மையாயுரைப்பர்மேலோர்.

224 மனைவிதன்கொழுநற்கீன்றோன்மற்றவனருளினாலே
யனையவளயலாற்கீன்றோனரும்பொருள்கொடுத்துக்கொண்டோ
னினிதுறுதெத்துமைந்தன்மகவெனப்புகுந்தமைந்தன்
றனையைசெய்தன்னலாவியுய்ந்தவன்றனையராவார்.

225 நெறியிகந்துதப்பாமினிநீரலசெய்பு
மறவின்மைந்தரைப்பெறுதலின்மகப்பெறாதருற்
றுறைதனன்றமற்றொருவனானுபர்குலமுழுதுஞ்
சிறுமையெய்திலாங்கவற்றுறந்துமபழிதீர்ப்பார்.

### பிரமோத்தரகாண்டம்.

226 உந்துநீர்கடலுடுத்தபார்முழுவதுமொருங்கே
வந்துதாடொழுமரசியல்வளமெலாம்பெறினு
மிந்திராதியர்பெரும்பதத்திருக்கையெய்திடினு
மைந்தரின்றியேவாழ்வதுவாழ்வுமற்றன்றே.

### நீதிநெறிவிளக்கம்.

227 கற்புடைத்தன்புமுடைத்தாநாண்மெய்ப்பூசி
நற்குணநற்செய்கைபூண்டாட்கு—மக்கட்பே
றென்பதோர்செல்வமுமுண்டாயினில்லன்றே
கொண்டாற்குச்செய்தவம்வேறு.

### இராமாயணம்.

228 மன்னரானவரல்லர்மேல்வானவர்க்கரசாம
பொன்னின்வார்கழற்புரந்தரன்போலியரல்லர்
பின்னுமாதவந்தொடங்கினோர்பிழைத்தவர்பிறரார்
சொன்மறுமகற்பெற்றவராருந்துயர்துறந்தார்.

### வில்லிபாரதம்.

229 கல்லாமழலைக்கனியூறல்கலந்து கொஞ்சுஞ்
சொல்லாலுருக்கியழுதோடித்தொடர்ந்துபற்றி
மல்லார்புயத்தில்விளையாடிமகிழ்ச்சிமைந்த
ரில்லாதவர்க்குமனைவாழ்வினினிமையென்னும்.

230 மெய்தானம்வண்மைவிரதந்தழல்வேள்விநாளுஞ்
செய்தாலுஞாலத்தவர்நற்கதிசென்றுசேரார்
மைதாழ்தடங்கண்மகவின்முகமன்னுபார்வை
யெய்தாதொழியிற்பெறுமின்பமிவணுமில்லை.

### நளவெண்பா.

231 கைதவந்தானீக்கிக்கருத்திற்கறையகற்றிச்
செய்தவந்தானெத்தனையுஞ்செய்தாலு—மைந்தர்
மகப்பெறாமானிடர்கள்வானவர்தம்மூர்க்குப்
புகப்பெறார்மாதராய்போந்து.

232 பொன்னுடையரேனும்புகழுடையரேனுமற்
றென்னுடையரேனுமுடையரோ—வின்னடிசில்
புக்களையுந்தாமரைக்கைப்பூநாறுஞ்செய்யவாய்
மக்களையிங்கில்லாதவர்.

233 சொன்னகலையின் றுறையனைத்துந்தோய்ந்தாலு
மென்னபயனுடைத்தாமின்முகத்து — முன்னங்
குறுகுதலைக்கிண்கிணிக்காற்கோமக்கள்பால்வாய்ச்
சிறுகுதலைகேளாச்செவி.

புறநானூறு.

334 படைப்புப்பலபடைத்துப்பலரோடுண்ணு
முடைப்பெருஞ்செல்வராயினுமிடைப்படக்
குறுகுறுநடந்துசிறுகைநீட்டி
யிட்டுந்தொட்டுங்கவ்வியுந்துழந்தும்
நெய்யுடையடிசின்மெய்படவிதிர்த்து
மயக்குறுமக்களையில்லோர்க்குப்
பயக்குறையில்லைத்தாம்வாழுநாளே.

சூளாமணி.

235 தொக்கிளமலர்துதைவிலாதசோலையும்
புக்கிளநதாமரைநகாதபொய்கையு
மிக்கிளம்பிறைவிசும்பிலாதவந்தியு
மக்களையிலாதோர்மனையுமொக்குமே.

வளையாபதி.

236 பொறையிலாவறிவுபோகப்புணர்விலாவிளமைமேவத்
துறையிலாவனசவாவிதுகிலிலாக்கோலத்தூய்மை
நறையிலாமாலைகல்விநலமிலாப்புலமைநன்னீர்ச்
சிறையிலாநகரம்போலுஞ்சேயிலாச்செல்வமன்றே.

நாலடியார்.

237 சிதலைதினப்பட்டவாலமரத்தை
மதலையாய்மற்றதன்வீழூன்றியாங்குக்
குதலைமைதந்தைகட்டோன்றிற்றான்பெற்ற
புதல்வன்மறைப்பக்கெடும்.

### நீதிவெண்பா.

238 *பொற்பறிவில்லாதபலபுத்திரரைப்பெற்றதிலோர்
நற்புதல்வரைப்பெறுதனன்றாமே—பொற்கொடியே
பனறிபலகுட்டிபயந்ததினாலேதுபய
னொன்றமையாதோகரிக்கன்றேது.

239 *கண்ணுக்கினியசனைங்கருமணிகற்றோரே
விண்ணுக்கினியமணிவெய்யோனே—வண்ணநறுஞ்
சந்தமூலையாள்சயனத்தினியமணி
மைந்தன்மனைக்குமணி.

### திருக்குறள்.

240 பெறுமவற்றுள்யாமறிவதில்லையறிவறிந்த
மக்கட்பேறல்லபிற.

241 எழுபிறப்புந்தீயவைதீண்டாபழிபிறங்காப்
பண்புடைமக்கட்பெறின்.

242 மக்கண்மெய்தீண்டலுடற்கின்பமற்றவர்
சொற்கேட்டலின்பஞ்செவிக்கு.

ஆகச்செய்யுள் 29. மக்கட்பேறு முற்றிற்று.

---

## எ-அதி. பெற்றோர்ப்பேணல்.

---

### கந்தபுராணம்.

243 மைந்தனைப்பெறுகின்றதுமாசிலாப்
புந்தியன்பொடுபோற்றிவளர்ப்பதுந்
தந்தைமாண்டுழித்தம்முறைக்கேற்றிட
வந்தமில்கடனாற்றுதற்கேயன்றோ.

### கூர்மபுராணம்.

244 தாயினிற்சிறந்ததெய்வமில்லையுயர்தந்தைதன்னி
னேயாற்குருவுமில்லையெனினிம்மற்றிவர்கடாளிற்
றூய்மலர்தூவிநாளுந்தொழுதிடுமறிஞர்தாமே
யுயர்கதிர்பாடும்பொன்னுலகாரரயினிதுவாழ்வார்.

உபதேசகாண்டம்.

245 ஈன்றதாயினையீன்றெடுத்திருபுயத்தனைக்கு
பான்றதந்தையையாந்தைசெய்தகன்றுபோயடவி
தோன்றிமாதவந்தொடங்கினரிவர்களைத்தொல்லை
மூன்றுதேவருமுனிவுறநிரயமுற்றிழிவார்.

காசிகண்டம்.

246 தந்தைதாய்பணித்தல்செய்யுந்தவமலாற்றவம்வேறில்லை
மைந்தருக்கெதிகளேனும்வணங்குவர்தாயைத்தந்தை
யந்தமைந்தனையேபோற்றல்வேண்டுமற்றதறன்னுற்
சிந்தையுற்றுணரிற்றாயேதந்தையிற்சிறந்தாண்மன்றோ.

பிரபோதசந்திரோதயம்.

247 * அன்னையானவடாதைக்குமதிகமன்னையும்பிதாவு
முன்னமோராதெய்வமென்றமொழிக்கெவர்முதன்மைபூண்டார்
பின்னோராச்சிரமத்தேகிப்பிதாவையும்வணக்கங்கொள்ளுஞ்
சந்நியாசிகளுமந்தத்தாயரைத்தொழுவான்றே.

இராமாயணம்.

248 நைந்தடியற்றவாலநடுங்கிவீழ்கின்றதென்று
வந்தவீழூன்றிவீழாவகைநிலைவிளக்குமாபோன்
மைந்தர்கடமக்குநல்லவறிவினன்மகிழ்ந்துசேர்ந்து
தந்தையைத்தளராவண்ணந்தாங்குவர்தவத்தினென்றான்.

249 புத்திரனாவோனீதிபொருந்தித்தன்குலத்திலுள்ளோ
ரத்தனைவரையுந்தீயவருநரகுறாமற்காத்துச்
சுத்தமாங்கதியிலுய்ப்பானென்றுசொல்வார்கடூயோ
ரித்தைநீபுணர்ந்தென்மூப்பாமிடும்பையைத்தீர்த்தியென்றான்.

நான்மணிக்கடிகை.

250 கண்ணிற்சிறந்தவுறுப்பில்லைகொண்டானிற்
றுன்னியகேளிர்பிறரில்லைமக்களி
னொண்மையவாயபொருளில்லையீன்றாளி
னென்னகடவுளுமில்.

### ஆசாரக்கோவை.

251 *வைகறையாமந் துயிலெழுந்து தான்செய்யு
நல்லறமுமொண் பொருளுஞ்சிந்தித்து வாய்வதிற்
றந்தையுந்தாயுந்தொழுதெழுகவென்பதே
முந்தையோர்கண்டமுறை.

### தனிப்பாடல்.

252 ஈன்றுவளர்த்த தாய்தந்தைக்கெவரேனு நம்மாறியற்றிடுவா
ரான்றமதலை நூறுவயதளவுமடிமைத்திறம்பூண்டு
மூன்றுபுவனத் துள்ளபொருண் முற்றுமளித்து முறைமுறையே
யேன்றுவழிபாடியற்றிடினுமொருநாள்வளர்த்தற்கிணையாதே.

### திருக்குறள்.

253 மகன்றந்தைக்காற்று முதவியிவன்றந்தை
யென்னோற்றான்கொல்லென்னுஞ்சொல்.

ஆகச் செய்யுள் 11. பெற்றோர்ப்பேணல் முற்றிற்று.

---

அ॰ அதி. அன்பு.

---

### திருமந்திரம்.

254 *என்பேவிறகாயிறைச்சியறுத்திட்டுப்
பொன்போற்கனலிற்பொரியவறுப்பினு
மன்போடுருகியகங் குழைவார்க்கன்றி
யென்பொன்மணியினையெய்தவொண்ணாதே.

### விநாயகபுராணம்.

255 இடனும்பொருளுமேவலருமிருந்தும் பயனென்னேவர்த
முடலின்பயனாகியவன்பையுறாதவிடத்தொருது மலரும்
படர்செய்பகையுமுறவாக்கும்பற்றுமளிக்குமிணைமைந்தர்
தொடர்பின்வளர்க்கு மன்பதனாற்சேர்ந்து மன்பின்வழுவற்க.

### பிரபுலிங்கலீலை.

256 துறவறமனையறஞ்சீர்தூய்மைநற்கல்விநல்லோ
ருறவொடுமகங்கடானமொண்டவம்விரதம்பூசை
யறிவிவையனைத்துமில்லையாதரவில்லையாயிற்
பெறுவனமெய்வருத்தம்பெரும்பொருளழிவுமாதோ.

257 ஆதரவுடையான்செய்யுமல்லவுநல்லவாகு
மாதரவிலாதான்செய்யுநல்லவுமல்லவாகு
மாதரவதனாலிக்கருந்துணையினைப்பழுதறி
யாதரவலாதுவேறொன்றறிந்திடக்கண்டதுண்டோ.

258 ஆசறுமனத்தெழுமன்பையன்றியே
பூசனையுவக்கிலன்புராரிசென்னிமேல்
வீசறுதிரையினுமிக்கதோசொலா
பூசல்செய்மனமுடையொருவனாட்டுநீர்.

### இராமாயணம்.

259 என்புதோலுடையார்க்குமிலார்க்குந்தம
வன்பகைப்புலன்மாசறமாய்ப்பதென
முன்புபின்பின்றிமூவுலகத்தினு
மன்பினல்லதோராக்கமுண்டாகுமோ.

260 என்பெனபதியாக்கையென்பதுயிரென்பதிவைகளெல்லாம்
பின்பெனபவல்லவேனுந்தம்முடைநிலையிற்பேரா
முன்பெனப†வுளதென்றாலுமுழுவதுந்தெரிந்தவாற்ற
லன்பெனபதொன்றின்றன்மையமரருமறிந்ததன்றால்.

### திருக்குறள்.

261 அன்பிலாரெல்லாந்தமக்குரியரன்புடையா
ரென்புமுரியர்பிறர்க்கு.

262 என்பிலதனைவெயில்போலக்காயுமே
யன்பிலதனையறம்.

† "உளவென்றாலும்" என்றும் பாடம்.

263 அன்பகத்தில்லாவுயிர்வாழ்க்கைவன்பாற்கண்
வற்றன்மரந்தளிர்த்தற்று.

264 புறத்துறுப்பெல்லாமெவன்செய்யும்யாக்கை
யகத்துறுப்பன்பிலவர்க்கு.

265 அன்பின்வழியதுயிர்நிலையஃதிலார்க்
கென்புதோல்போர்த்தவுடம்பு

ஆகச் செய்யுள் 12. அன்பு முற்றிற்று.

## கூ-அ தி. செய்ந்நன்றியறிதல்.

### கந்தபுராணம்.

266 கோற்றிடுதவத்தினைநோக்கியெண்ணிலாப்
பேற்றினையுதவியபிரானோர்தீமையான்
மாற்றிடவுனனுமேல்வணங்கிமாறேனிப்
போற்றுதலனறியேபொரவுஞ்செய்யுமோ.

267 ஒன்றொருபயனறனையுதவினோர்மனங்
கன்றிடவொருவினைகருதிச்செய்வரேற்
புன்றொழிலவர்க்குமுன்புரிந்தநன்றியே
கொனறிடுமல்லதுகூற்றுமுயடவேண்டுமோ.

### விநாயகபுராணம்.

268 பயன்காரணத்தைக்குறியாமற்பரிந்துகாலத்தாற்செய்த
நயஞ்சேர்நன்றிசிறிதேனுஞாடினதற்கோரளவில்லை
பயன்காரணத்தைக்குறித்தினையும்பகத்திற்புரிந்தநன்றியையும்
வியன்பூதலத்திற்பெரிதாகவிநம்பிமதித்தல்வேண்டுமால்.

269 நன்றிபுரிந்தோர்மற்றொருகானவைகள்புரிந்தாராயிடினு
மொனறுமுதவியேமதித்திட்டோம்பாநவையைமறந்தவரை
யென்றமறவாதிருந்திகழ்கப்பிற்கருவான்மறையோரைக்
கொன்றுதிரிவோர்பிழைசிறுசக்குன்றமெனவேபிழைபெருகும்.

## சேதுபுராணம்.

270 யாப்பிலைமன்னியநன்றிதனைவிடுத்ததீமையதற்குயிர்
நீப்பதேபரிகாரமென்றிந்நீதிநூலறைதாதைதாய்
காப்புநேர்கிலர்குரவர்தங்கிளைகாதலோடுவழங்கிலார்
தீப்பவங்களுமாற்றுநன்றயர்தீங்குநீங்குயிர் † தீர்க்குமால்.

## இராமாயணம்.

271 சிதைவகல்காதற்றாயைத்தந்தையைக்குருவைத்தெய்வப்
பதவியந்தணரையாவைப்பாலரைப்பாவைமாரை
வதைபுரிகுநர்க்குமுண்டாமாற்றலாமாற்றன்மாயா
வுதவிகொன்றார்க்கென்றேனுமொழிக்கலாமுபாயமுண்டோ.

272 உதவாமலொருவன்செய்தவுதவிக்குக்கைம்மாறாக
மதயானையனையமைந்தமாறுமுண்டாகவற்றோ
சிதையாதசெருவிலன்றுமுன்சென்றுசெறுநர்மார்பி
லுதையானேலுதைபுண்டாவிபுலையானேலுலகின்மன்றே.

273 நீர்க்கோலவாழ்வைநச்சிநெடிதுநாள்வளர்த்துப்பின்னைப்
போர்க்கோலஞ்செய்துவிட்டார்க்குயிர்கொடாதங்குப்போகேன்
றார்க்கோலமேனிமைந்தவென்றுயர்தவிர்த்தியாகிற்
கார்க்கோலமேனியானைக்கூடுதிகடிதினென்றான்.

## வில்லிபாரதம்.

274 ஆரவமல்கியபதாகையாய்மதியமைச்சராயராசநீதிப்பிறுங்
குரவர்நல்லுரைமறுக்கலுமபிறர்புரிந்தநன்றியதுகொல்லினு
மொருவர்வாழ்மனையிலுண்டுபின்னுமவருடனுறன்றுபொர
வெண்ணினும், பிரவிபுள்ளளவமறியபுள்ளளவுமிவர்களெநரகி
லெய்துவார்.

## புறநானூறு.

275 ஆன்முலையறுத்தவறனிலோர்க்கு
மாணிழைமகளிர்கருச்சிதைத்தோர்க்கும்
பார்ப்பார்த்தப்பியகொடுமையோர்க்கும்
வழுவாய்மருங்கிற்கழுவாயுமுளவென

† தீர்க்கும் - தலையைப்பண்மையினைமுறையும்.

நிலம்புடைபெயர்வதாயினுமொருவன்
செய்திகொன்றோர்க்குய்தியில்லென
வறம்பாடிற்றேயாயிழைகணவ.

சீவகசிந்தாமணி.

276 தன்னையாக்கியதார்ப்பொலிவேந்தனைப்
பின்னைவௌவிற்பிறழ்ந்திடும்பூமக
ளன்னவன்வழிச்செல்லினிம்மண்மிசைப்
பின்னைத்தங்குலம்பேர்க்குநரில்லையே.

277 பிறையதுவளரத்தானும்வளர்ந்துடன்பெருகிப்பின்னாட்
குறைபடுமதியநோயக்குறையுறாய்நீயவனேபோ
லிறைவனுத்தன்னையாக்கியதனவழியொழுகினென்று
நிறைமதியிருளைப்போழ்ந்தெம்புகழ்விளைக்குமென்றான்.

பெருந்தேவனார்பாரதம்.

278 ஒருவாகத்தொருவருண்டுடுத்தூக்கம்மின்
மருவிமனமகிழ்வாராயிற்—செருமுனையின்
மன்னப்போர்செய்யு †மழைமதமால்யானையாய்
‡பின்னைப்போர்தக்கதோபேசு.

நாலடியார்.

279 தினையனைத்தேயாயினுஞ்செய்தநன்றுண்டாற்
பனையனைத்தாவுள்ளுவர்சான்றோர்—பனையனைத்
தென்றுஞ்செயினுமிலங்கருவிநன்றோட
நன்றிலநன்றறியார்மாட்டு.

மூதுரை.

280 *நன்றியொருவற்குச்செய்தக்காலந்நன்றி
யென்றுதருங்கொலெனவேண்டா—நின்று
தளராவளர்தெங்குதாளுண்டநீரைத்
தலையாலேதான்றருதலால்.

† 'மழகளிறுரும் மாங்கலதுப' என்பது பாடபேதம்.

‡ 'பின்னைபோர' என்பது பாடபேதம்.

திருக்குறள்.

281 நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றேமறப்பது நன்று.

282 கொன்றன்னவின்னாசெயினுமவர்செய்த
வொன்றுநன்றுள்ளக்கெடும்.

283 எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாமுய்வில்லை
செய்ந்நன்றிகொன்றமகற்கு.

ஆகச் செய்யுள் 18. செய்ந்நன்றியறிதல் முற்றிற்று.

---

## ௰-அதி. ஒழுக்கம்.

---

திருமந்திரம்.

284 *செல்லுமளவுஞ்செலுத்துமின்சிந்தையை
வல்லபரிசாலுரைமின்கள்வாய்மையை
யில்லையெனினும்பெரிதுளனெம்மிறை
நல்லவரனெறிநாடுமினீரே

விநாயகபுராணம்.

285 தாழ்ந்தவருணத்துதித்தவருந்தக்கோராவரொழுக்கத்தால்
வீழ்ந்தவொழுக்கத்தாரிழிவர்மேலாம்வருணத்துதித்திடினுஞ்
சூழ்ந்துதலையாஞ்சிறப்பின்பஞ்சரக்குமதனாலுயிர்தனினும்
வாழ்ந்தவொழுக்கமோம்புகவழுக்கினிடும்பையேதருமே,

286 எவ்வகையுலகத்துள்ளாரியல்புடனொழுகுகின்றா
ரவ்வகையொழுக்கினின்றேயழிவனவருமுன்காத்துத்
தவ்வெனும்பழியாவங்கடபுதியெய்தாமையஞ்சிச்
செவ்வியநெறியினானுஞ்செலுத்துகபொறிகளோர்த்தும்,

### திருவானைக்காப்புராணம்.

287 எத்தனுறுந்தீக்கையுள்ளாரெவரேயாகவியம்புவருணாச்சிரம
வொழுக்கந்தன்னை, நீத்தனரேற்றீக்கையிலாதவரோடொப்பர்
நீத்தவொழுக்கத்தொருநால்வருமந்நான்மை
பாத்தியமாதருமலியுஞ்செயிற்பிறப்பித்தும்பயில்குருதீமையுந்தீக்
கைக்குரியவாகா, சூத்திரனாமொழுக்காறின்மறையோனொப்பான்
சூத்திரனொப்பான்மறையோனொழுக்கம்விட்டால்.

### திருக்குற்றலப்புராணம்.

288 பதித்துணைவிநீராடிற்பன்னிருநாட்படிகடவார்
விதித்தநலகருமம்விடார்பிறர்மனையைவிரும்பலுறார்
துதிப்பமனையறத்திருந்துந்துறவோரேதுறவோராய்க்
கதித்தமனஞ்சுழிபட்டாரிருவகைக்குங்கழிபட்டார்.

### சேதுபுராணம்.

289 மெய்த்திருத்தவம்விரம்படைக்கினு
மெத்திறத்திடரெய்தியதாயினு
முத்தமக்குலமேன்மையொழுக்கமா
தத்தநீதிபிழைப்பர்கொல்சால்புளோர்.

190 யாரொருவிப்பிரனிணங்காப்பாதகரோடொருதினமுண்
டிணங்கினனேற், பாரமார்குலக்குரியபண்பதனிலொரு
பங்குநீங்கு, மோரிரண்டுதினத்திலதிற்பாதிகெடுநாண்மூன்றி
லொழியுமுக்கா, லீரிரண்டின்முழுதுமறுமீப்படுமேற்பூரிய
ரோடிரண்டிலாறும்.

### கூர்மபுராணம்.

291 பொறைகொடைகருணைதானம்பொய்ம்மொழியழுக்காறின்மை
யுறையுமுட்கரணங்காத்தல்பயில்புறக்கரணமோம்பல்
குறளைசொல்லாமைமாறுமுனிவின்மையுயிர்கொல்லாமை
பிறர்மனைநயத்தலின்மைநன்மொழிபிறழாவாய்மை.

292 புண்ணியநன்னீராடல்கடவுளர்பூசைபாற்ற
லுண்ணிறைமகிழ்ச்சிவேதபாரகர்க்கூட்டீய
கண்ணயவாமைகள்ளாதொழுகுதல்கடுஞ்சொலின்மை
யெண்ணியவிவைகளொன்றுதலத்திற்றமியைந்தவாமால்.

293 புரிந்தபாவமறையாதுபுகறல்வேண்டியியாவருக்கும்
வருந்தின்றுநன்மையவைநன்செய்யவேண்டுமகிழ்தந்தை
திருந்துமொழுக்கந்திறம்பாமனிற்றல்வேண்டுமடகெனினும்
விருந்தினோடிருகர்வைசலால்வளர்நாகர்நல்விடவேண்டும்.

294 சாமம்வெந்துளியமக்கமுதற்றீமைகளெவைபுகழ்ந்திடுக
லோமச்செகதீயுட்டியசாற்றியுண்மைதொழிலுமுய்தந்தை
தோமில்பூசநான்மறைக்கிழவர்ப்போற்றித்தொழுதலாய
பணகள், பாமரண்கிளைஞர்மகிழ்ச்சிறப்புவையாதென்றும்
பாத்தருந்தல்.

295 அல்லல்புரிந்தபொருளீட்டல்சாமந்துய்த்தலிவையாகா
வொல்லும்வகையினறமியற்றுங்காலைத்துன்பமுற்றிடினும்
புல்லுந்தருமம்விடாதொழுகபுகலுமுயிர்களனைத்தினுக்கு
நல்லசெய்ககடவுளரைமறையையிகழ்தலைவையாமால்.

இலிங்கபுராணம்.

296 *கருத்தினுணர்வாலறிந்ததுவுங்கண்ணாற்றெரியக்கண்டனவுந்
தெரிந்தவொலியாற்கேட்டதுவுந்திறப்படவுரைத்தல்பொய்
யாமை, விரித்தமறைநூல்விதித்தவிடத்தன்றியிடாவுயி
ரனைத்து, மருத்திகூறக்கொல்லாமைகொல்லாவிரதமாகுமால்.

297 *எனைத்துப்பொருளுமொருகாலுமிரவாதிருத்தலிரவாமை
மனத்தினாலும்பிறர்பொருளைவெளவவெண்ணுவேசிறிதேனு
நினைத்திடாமைகள்ளாமையாமாணிகழ்த்துமியமமே
வினைப்பற்றறுக்குநியமத்திற்கேதுவாகும்விளம்புங்கால்.

298 *மகளிரைக்கோறலடாது தொன்மறையின்வழியினிடந்தி
டாதொருவி, யிசழ்தருபாசண்டத்துறைவோர்கடமையிரு
கண்ணினானோக்கிற், பகலவன்றன்னைநோக்கிடவேண்டும்
பசர்ந்தபாசண்டரையேனு, மகனுறப்போக்கலன்றிவெஞ்
சொலைசெய்திடுதனன்றன்றெனவுறைவார்.

299 *நிதறுவழியிற்செல்லுதல்வேண்டுந்தீம்புனல்வடித்ததையல்லா
லேதமற்றொழியக்குடித்திடலாகாபடிறொழிந்தியம்பிடலாமாற்
கோதடுவேள்விதன்னிலுஞ்சிராத்தந்தன்னிலுமருந்துதல்கூடா
மாதுயர்செய்யுங்கோறலெல்லாமுமனக்கொளாதகற்றிடல்
வழக்கே.

300 *துயின்றெழுகாலுந்தும்மியபொழுதுஞ்சொன்னவையருந்திய
பொழுதும், பயன்படுத்தாசமனமேபண்ணல்பான்மையா
மனைவியர்முலைமேல், முயங்கியகாலும்வாயசங்கோழி
முதிர்சினைநாய்பன்றிகழுதை, யிபங்குமொட்டகமிவற்றொடு
பதிதற்றொடினுமீராடலேயியையும்.

301 *நெறியலாநெறிசெல்பதிதனும்வானப்பிரத்தனுமீளிடைதன்னி
லுறைதருவோனுமிறந்திடினிகொடாந்திமௌவுளதென்ன
வறைகுவர்தாயத்தார்க்குமாசௌசமிறபவருமறைதன்னை
முறையினிலுரைதகோன்புரவனிக்கிவர்களிறந்திடின்மூன்றுநா
ளுளதால்.

302 *மாதலனிறக்கின்மூன்றுநாளுளதால்வாளமரிடையினிலிறந்
தோர்க், கோதுமாசவுசமிலதெனவுரைப்பாருயர்ந்தநான்
மறையினையுணர்ந்த, வேதியர்தமக்கோர்பத்துநாள்வேந்தர்க்
கீராறுநாண்மிகுவணிகர்க், கேதமிலொன்மூவைந்துபின்னவர்க்கு
முப்பதுநாளெனவிசைப்பார்.

303 *உரைத்திடுபூப்புற்றிருக்குமகளிரொளிநகைவிளக்குதல்
வாசம், விரித்திடுமாலைசந்தனமணிதல்மெய்யினைவிளக்கிடத்
திமிர்தல், இரைத்தெறிபுனலினாடலழுதலூர்தியினிவர்ந்து
சேணகறல், வருத்துகூத்தாடல்புணர்ந்திடலிவற்றையனைத்தினு
நினைத்திடலாகா.

## அறத்துப்பால்.

### காசிகண்டம்.

309 சத்தியந்தானஞ்சமமிதமின்சொற்சாற்றுதலொருவழிப்ப
டுதல், புத்தியேமுதலகரணமோர்நான்குமடக்குதல்புலன்கள்
போய்வழியி, னுய்த்திடாதமைத்தல்பொறைதிடஞான
முயிர்க்கெலாந்தண்ணளிபுரித, லித்திறமனைத்தமானததீர்த்த
மெனவெடுத்தியம்பினர்மேலோர்.

310 அறத்துறைபயிலுமானததீர்த்தமாடலராகிநீராடிற்
புறத்தழுக்கொழிவதல்லதுபுனிதராகிலர்பூந்திரைசுருட்டுஞ்
சிறைப்புனலதனின்முழையுறழ்பகுவாய்த்தீவிழிக்கூரெயிற
றிடங்கர், சுரக்குலமுதலவளப்பருங்காலந்தோய்ந்ததாற்
றுறக்கமுற்றனவோ.

11 இணங்குறுவாய்மைமெய்ம்மையேயெனினுமியப்பொரு
விணங்குவதெனினு, மணங்குநோய்செய்யும்பொய்சொலா
தொழிகவறிஞரோடிணங்குகநாளுங், குணங்களேமொழிக
வுளத்திலெஞ்ஞான்றுநன்மையேகுறிக்கொளல்வேண்டும்,
பிணங்குவெஞ்சூதிற்குறளையிற்றுனிற்பெறுபொருள்கோட
லீங்குறுமால்.

12 பிறர்மனைவிழைதனிலை†பிழைத்தொழுகல்பொய்ம்மொழி
பிதற்றுதல்சீற்ற, மறமிகுவெயிரங்குறளைபேசலாதமொழியினை
நவிலுதன்மாயை, ‡கிறிபகர்ந்தொழுகலாயவொன்பானுங்
கீழ்மைபோமொழுக்கமில்வழியி, னுறைநரேயற்றிழிஞ
ரென்றினிதினுரைத்தனர்நூன்முறையுணர்ந்தோர்.

13 மெய்ம்மைநற்பொறைமெய்கெடாச்செயாதொழுகல்பேதுமெக்
கரணமுமடக்கல், செம்மைசேர்தூய்மைவரைவுறுதளித்தல்
சீற்றநீங்குதல்களவின்மை, யம்மவென்றெவருமாற்றுதல்
பரியாவருள்செயலாயவொன்பானும், வம்பெனவயரோதிர்புறந்
தழைப்பவானிடைவிடுத்தனுதாயமால்.

---

† நிலை - ஆச்சிரமவொழுக்கம். ‡ கிறி - பொய்.

### சிவதருமோத்தரம்.

314 *கன்னிகையையிறப்பார்கள் பரதாரந்தன்னைக்
காமுறுவார்மனைவிதனைக்கண்டறிந்துந்துறவார்
பொன்விலைசெய்கொல்லர்மரக்கொல்லர்பொருட்பெண்டிர்
புலைவிலைஞர்மதுவிலைஞர்புரந்தாரைமறந்தார்
தென்னனவேபாம்பவராமெவர்வாளாற்
சேவிப்பார்பூவிற்பார்செக்கார்சொக்கிடுவா
ரெனவிவ்வெழுவாயானைந்தியநரகதே
விழுக்கானவனமுளத்தையழுக்காக்கிவிடுமே.

### ஞானவாசிட்டம்.

315 *செயலறுத்தயநற்றுஞ்செயத்தகாச்செயல்களாகா
வியல்பலாவழியாலுண்ணாவிராதவைபழுதங்கொன்ற
தயலெல்லாமவசமாயாபதத்தைதந்துபபோயென்றுநன்று
மூபலுநற்குணங்களாலேமெய்புகழ்ப்திதேனேர்க்கே.

### சிவ-மெய்ம்மொழி.

316 *சதுர்விபமுறைக்கநாளுஞ்சகலபல்லுயிர்கட்கெல்லா
நிதநலமிதமேசெய்கவினைமாதுசிவத்தையென்று
மதத்தன்வேதாகமத்தினைநளிமொழிநளிம்முறையு
மெதநிறச்சமயத்தோர்க்குமொழுக்கங்களுக்குமிட்டம்.

317 *தம்பிழ்முத்தாரையெல்லாந்தந்தைதாயெனவேகாண்க
தம்முடற்பிள்ளையோர்தம்மைத்தாதுபுத்திரர்போற்காண்க
வெம்மதமென்னவேண்டாமெங்குநன்றுளதேகொள்க
செய்மையொன்றுணர்ந்திடமைதத்தெரிவுறுநெறியேயின்றே.

### சிவ--தத்துவதரிசனம்.

318 *தீக்கருமமவாவழக்கிலேபழமைமுழுதுங்காண்க
வாக்கினைவருந்திக்காக்கமன்னுயிர்க்கிதமேசெய்க
தாக்கியதனக்கின்னாததான்பிறர்க்கொழிகவென்று
மாக்கமுமறிவுஞ்சேருமழகுறுநெறியிதென்றே.

319 *நற்றவர்தம்மைச்சேர்தினல்லவரஞ்சிற்றஞ்சிப்
பெற்றநிலைமைத்தவாழ்பின்பிறர்பொருள்வெஃகாதேதன்பின்
மற்றவர்நலந்தீங்கும்மில்வந்தனபோலக்காண்பின்
கற்றவரெல்லாம்போனகநற்கருநெறியுமீதால்.

சிவ-மெய்ஞ்ஞானவிளக்கம்,

320 *கூறுகவாய்மைகோறல்களவுகட்காமம்பொய்ம்மை
மாறுகவெவர்க்குந்தம்மால்வல்லவாபருத்தேபுண்க
வாறுகவாசையைந்துமடக்குகவறிஞர்ச்சேர்க
தேறுகவிதுவேமுத்திசெறிவுறுநெறிவேறின்றே.

ஞானமிர்தம்.

321 *பொய்ப்பொறிபுணர்க்குமைப்பொறியுள்ளு
முள்ளச்செய்திதெள்ளிதிற்கிளப்பி
னிருமூர்காட்சியருளொடுபுணர்தல்
பெரும்பொறைதாங்கல்பிறர்பொருள்விழையாமை
செய்நன்றறிதல்கைதவங்கடிதல்
பால்கோடாதுபகலிற்றோன்றன்
மானமதாணியாணிற்றுங்க
லழுக்காறின்மையவாவிற்றீர்த
லருந்துயருயிர்கட்கிருந்தகாலை
யழுதோப்பவன்னாரக்கடாக்
கழலுநெஞ்சிற்கையற்றினைதல்
பன்னருஞ்சிறப்பின்மன்னுயிர்த்தொகைகட்
குரியபொறியுங்கற்பெருங்கிளையும
பெற்றகருத்துறைககூப்பப்பருங்குத்
துப்பிழையாவன்றிவென்றெண்ணரும்பெருந்துணைய
வாகவொப்பிவணியநோக்கின்மீக்கொள
வறம்பெரிதுவைதலைபுறங்கூறாமை
வாய்மைகலவிதீமைசிற்றிறப்ப
வின்மொழியிசைத்தல்வன்மொழிமறத்த
லறிவனூலாய்தலருமறைகழப

நன்றென்றிருநடுநீங்காமலேநமக்கிட்டபடி
யென்றென்றிருமனமேயுனக்கேயுபதேசமிதே.

### சோமேசர்முதுமொழிவெண்பா.

323 தீயனவேசொல்லுஞ்சிசுபாலன்முன்புகண்ணன்
றாயதலாச்சொல்லுரையாயசோமேசா — வாயி
னொழுக்க முடையவர்க்கொல்லாவேதீய
வழுக்கியும்வாயாற்சொலல்

### நீதிநெறிவிளக்கம்.

324 பொய்க்குறளைவன்சொற்பயனிலவென்றிந்நான்கு
மெய்த்தாமைசொல்லின்வழுக்காது — மெய்யிற்
புலமைந்துங்காத்து மனமாசகற்று
நலமன்றேநல்லார்தொழில்

### இராமாயணம்.

325 தக்கவின்னதகாதனவின்னவென்
றொக்கவுணர்வாயினுயர்ந்துள
மக்களுமிலங்கேமனுவின்னெறி
புக்கவேலவ்விலங்கும்புத்தேளிரே.

### புறப்பொருள்வெண்பாமாலை.

326 அந்தணர்சான்றோரருந்தவத்தோர்தம்முன்னோர்
தந்தைதாயென்றிவர்க்குத்தார்வேந்தே — முந்தை
வழிநின்றுபின்னைவயங்குசீர்வேலி
மொழிநின்றுகேட்டன முறை.

327 † குடிப்பிறப்புக்கல்விகுணம்வாய்மைதூய்மை
நடுச்சொல்லுநல்லறிவாக்கம் — கெடுக்கு
மழுக்காறவாவிகலையவ்விரண்டோடெட்டு
மிழுக்காவமைவினைகணெட்டு.

---

† இச்செய்யுள் புறப்பொருள்வெண்பாமாலையுரையினெடுத்துக்காட்டு.

### சூளாமணி.

328 காதலிற்பிழையராய்க்கள்ளுன் †றேன்கடிந்தகற்றி
யீதலோடில்லிருக்குமிளம்பிடியர் முதலாயா
ரோதினமுத்தேவராயுயர்ந்தவர்க்குளுயர்ந்துளாராய்ச்
சோதியும்பேரெண்குணனுங்கடப்பாவுந்துன்னுவரே.

### சீவகசிந்தாமணி.

329 நற்றனஞ்சீலநீங்காத்தவமறிவர்சிறப்பிந்நான்கு
மற்றாங்குச்சொன்னமனைவியரிந்நால்வரவர்வயிற்றுட்டோன்றி
யுற்றானெனுமகனேமேற்கதிக்குக்கொண்டுபோவான்
றன்னைப்பெற்றார்மகப்பெற்றாரல்லாதார்பிறர்மக்கள்பிறரோ
கண்டீர்.

330 உறுவர்ப்பேணலுவர்ப்பின்மைபுலையாவின்பந்தலைநிற்ற
லறிவர்சிறப்பிற்கெதிர்விரும்பலழிந்தோர்நிறுத்தலறம்பகர்தல்
சிறியாரினத்துச்சேர்வின்மைசினங்கைவிடுதல்செருக்கவித்த
லிறைவனறத்துளோர்க்கெல்லாமினியாதவிதுதெளிவே.

### சிலப்பதிகாரம்.

331 பரிவுமிடுக்கணும்பாங்குறநீங்குமின்
றெய்வந்தெளிமின்றெளிந்தோர்ப்பேணுமின்
பொய்யுரையஞ்சுமின்புறஞ்சொற்போற்றுமி
னூனூண்டுறமினுயிர்க்கொலைநீங்குமின்
றானஞ்செய்ம்மின்றவம்பலதாங்குமின்
செய்ந்நன்றிகொல்லன்மின்றீநட்பிகழ்மின்
பொய்க்கரிபோகன்மின்பொருண்மொழிநீங்கன்மி
னறவோரவைக்களமகலாதணுகுமின்
பிறவோரவைக்களம்பிழைத்துப்பெயர்மின்
பிறர்மனையஞ்சுமின்பிழையுயிரோம்புமி
னறமனைகாமினல்லவைகடிமின்
கள்ளுங்களவுங்காமமும்பொய்யும்

† தேன் - மயக்கப்பொருளிலொன்று.

வெள்ளைக்கோட்டியும்விரகினிலொழிமின்
னிளமையுஞ்செல்வமும்யாக்கையுநிலையா
வுளநாள்வரையாதொல்லுவதொழியாது
செல்லுந்தேஎத்துக்குறுதுணைதேடுமின்
மல்லன்மாஞாலத்துவாழ்வீரீங்கென.

### வளையாபதி.

332 ஆற்றுமின்னருளாருயிர்மாட்டெலாந்
தூற்றுமின்னறந்தோநனிதுன்னன்மின்
மாற்றுமின்கழியாயமுமானமும்
போற்றுமின்பொருளாவிவைகொண்டினீர்.

### நாலடியார்.

333 அறிவதறிந்தடங்கியஞ்சுவதஞ்சி
யுறுவதுலகுவப்பச்செய்து — பெறுவதனா
லின்புற்றுவாழுமியல்புடையாரெஞ்ஞான்றுந்
துன்புற்றுவாழ்தலரிது.

334 பிறர்மறையின்கட்செவிடாய்த்திறனறிந்
தேதிலாரிற்கட்குருடனாய்த்தீய
புறங்கூற்றின்மூங்கையாய்நிற்பானேல்யாது
மறங்கூறவேண்டாவவற்கு.

335 அறிமினறநெறியஞ்சுமின்கூற்றம்
பொறுமின்பிறர்கடுஞ்சொற்போற்றுமின்வஞ்சம்
வெறுமின்வினைதீயார்கேண்மையெஞ்ஞான்றும்
பெறுமின்பெரியார்வாய்ச்சொல்.

### நான்மணிக்கடிகை

336 திருவொக்குந்தீதிலொழுக்கம்பெரிய
வறனொக்குமாற்றினொழுகல் — பிறனைக்
கொலையொக்குங்கொண்டுகண்மாறல்புலையொக்கும்
போற்றாதார்முன்னர்ச்செலவு.

337 இன்னாமைவேண்டி னிரவெழுக விந்நிலத்து
மன்னுதல்வேண்டி னிசைநடுக — தன்னொடு
செல்வதுவேண்டி னறஞ்செய்க வெல்வது
வேண்டின் வெகுளிவிடல்.

338 *கன்றாமைவேண்டிற் கடியபிறர்செய்த
நன்றியைநன்றாக்கொளல்வேண்டு — மென்றும்
விடல்வேண்டுந்தங்கண்வெகுளி யடல்வேண்டு
மாக்கஞ்சிதைக்கும்வினை.

339 *கள்ளாமைவேண்டுங்கடியவருதலாற்
றள்ளாமைவேண்டுந்தகுதியுடையன
நள்ளாமைவேண்டுஞ்சிறியரோ டியார்மாட்டுங்
கொள்ளாமைவேண்டும்பகை.

340 *எல்லாவிடத்துங்கொலைதீது மக்களைக்
கல்லாவளரவிடறீது — நல்லார்
நலந்தீதுநாணற்றுநிற்பிற் குலந்தீது
கொள்கையழிந்தக்கடை.

## திரிகடுகம்.

341 பிறர்தன்னைப்பேணுங்கானாணலும் பேணார்
திறன்வேறுகூறிற்பொறையும் — அறவினையைக்
காராண்மையாகவொழுகலு மிம்மூன்று
†மூராண்மையென்னுஞ்செருக்கு.

## சிறுபஞ்சமூலம்.

342 கள்ளான்சூதென்றுங்கழுமான் கரியாரை
நள்ளானுயிரிங்காவாடா — வெள்ளானை
யூனமறுத்துக்கொள்ளானை வானுடம்பெஞ்ஞான்றுந்
தானமறித்துக்கொள்ளான்றளர்ந்து.

† ஊராண்மை - உபகாரியாந்தன்மை.

## ஆசாரக்கோவை.

343 *உடுத்தலானீராடாரொன்றுடுத்துண்ணா
ருடுத்தாடைநீருட்பிழியார்விழுத்தக்கா
ரொன்றுடுத்தென்றுமவைபுகாரென்பதே
முந்தையோர்கண்டமுறை.

344 *தலையுரைத்தவெண்ணெயாலெவ்வுறுப்புந்தீண்டார்
பிறருடுத்த†மாசுணியுந்தீண்டார்செருப்புக்
குறையெனினுங்கொள்ளாரிரந்து.

345 *நீராடும்போழ்தினெறிப்பட்டாரெஞ்ஞான்று
நீந்தாருமியார்திளையார்விளையாடார்
காய்ந்ததெனினுந்தலையொழிந்தாடாரே
யாய்ந்தவறிவினவர்.

346 *அரசனுவாத்தியான்றாய்தந்தைதம்மு
னிகரில்குரவரிவரிவரைத்
தேவரைப்போலத்தொழுதெழுகவென்பதே
யாவருங்கண்டநெறி.

347 *காலினீர்நீங்காமையுண்டிடுகபள்ளியு
ளீரம்புலராமையேறற்கவென்பதே
பேரறிவாளர்துணிவு.

348 *விருந்தினர்மூத்தோர்பசு‡சிறைபிள்ளை
யிவர்க்கூண்கொடுத்தலாலுண்ணாரேயென்று
மொழுக்கம்பிழையாதவர்.

349 *கிடந்துண்ணார்நின்றுண்ணார்வெள்ளிடையுமுண்ணார்
சிறந்துமிகவுண்ணார்கட்டின்மேலுண்ணா
§ரிறந்தொன்றுந்தின்னற்கநின்று

350 *முன்றுவ்வார்முன்னெழார்மிக்குறாரூணின்க
ணென்பெறினுமாற்றவலமரார்தம்மிற்
பெரியார்தம்பாலிருந்தக்கால்

† மாசுணி - அழுக்காடை. ‡ சிறை - பட்சி. § இறந்து - நெறிதவற.

351 *சுடரிடைப்போகார்சுவர்மேலுமியா
ரிடரொனிருமாசுணிகீழ்நம்மேற்கொள்ளார்
பலரிடையாடையுதிராரேயென்றுங்
கடனறிகாட்சியவர்.

352 *பிறர்மனைகட்களவுசூதுகொலையோ
டறனறிந்தாரிவ்வைந்துநோக்கார்திறனிலரென்
றெள்ளப்படுவதூஉமன்றிநிரயத்துச்
செல்வுழியுய்த்திடுதலால்.

353 *பொய்குறளைவெவ்வழுக்காறிவைநான்கு
மையந்தீர்காட்சியார்சிந்தியார்சிந்திப்பி
னையம்புகுவித்தருநிரயத்துய்த்திடுந்
தெய்வமுஞ்செற்றுவிடும்.

354 *தமக்கென்றுலையேற்றார்தம்பொருட்டின்கொல்லா
ரடுக்களையெச்சிற்படாஅர்மனைப்பலி
யூட்டினமைகண்டுண்கவூண்.

355 *படிறும்பயனிலவும்பட்டியுரையும்
வசையும்புறனுமுரையாரேயென்று
மசையாதவுள்ளத்தவர்.

அறநெறிச்சாரம்.

356 *அறங்கூறுநாவென்பநாவுஞ்செவியும்
புறங்கூற்றுக்கேளாதவென்பர்—பிறன்றாரத்
தற்றத்தைநோக்காதகண்ணென்பயார்மாட்டுஞ்
செற்றத்தைநீக்கதுநெஞ்சு.

357 *ஒழுக்கமிலனாகிப்போத்துடையனானும்
புழுப்பொதிந்தபுண்ணிற்கொடிதாங்—கழுக்குரம்பை
யோம்பிமற்றென்னையுறுதிக்கணில்லாக்காற்
றேம்பிவிடுதலேநன்று.

358 *† தண்டாமம்பொய்வெகுளிபொச்சாப்பழுக்காறென்
றைந்தேகெடுவார்க்கியல்பெண்பபண்பாளா
யீதலறிதல்‡வியற்றுதலின்சொற்கற்
றாய்தலறிவார்தொழில்.

359 * இருளேயுலகத்தியற்கையிருளகற்றுங்
கைவிளக்கேகற்றவறிவுடைமைகைவிளக்கி
னெய்யேதன்னெஞ்சத்தருளுடைமைநெய்ப்பயந்த
பால்போலொழுக்கத்தவரேபரிவில்லா
மேலுலகமெய்துபவர்.

திருக்குறள்.

360 ஒழுக்கம்விழுப்பந்தரலானொழுக்க
முயிரினுமோம்பப்படும்.

361 ஒழுக்கமுடைமைகுடிமையிழுக்க
மிழிந்தபிறப்பாய்விடும்.

362 ஒழுக்கத்தினெய்துவர்மேன்மையிழுக்கத்தி
னெய்துவரெய்தாப்பழி.

363 ஒழுக்கமுடையவர்க்கொல்லாவேதீய
வழுக்கியுமவாயாற்சொலல்.

ஆகச் செய்யுள் 89. ஒழுக்கம் முற்றிற்று.

---

கக-ஆம். தீயொழுக்கம்.

---

கந்தபுராணம்.

364 தந்தைசொன்மறுப்பவர்கடாயுரைதடுப்பா
ரந்தமறுதேசிகர்தமாணையையிகந்தோர்
வந்தனைசெய்வேதநெறியாற்றினர்கண்மாறுசு
செந்தழலவாயநிரயத்தினிடைசேர்வார்.

† தண்டாமம் - மானம். ‡ இயற்றுதல் - தருமஞ்செய்தல்.

365 மெய்ம்மைநீங்கியேகொலைகளவியன்றுமேலுள்ள
செம்மையாளரைச்சீறியேயணங்குசெய்தீயோர்
தம்மிலாற்றநும்பழிசுமந்தொல்லைபிற்றமரோ
டிம்மைவீடுவரெழுமையுந்துயரினூடிருப்பார்.

366 இங்ஙனந்தீநெறிநீங்கியேயாயநூற்றிறப்ப
ரங்ஙனம்பெரிதாரிநண்ணுமூழ்குவர்தற்பி
னங்ஙனம்பிறந்தயருவரென்றுமீக்கலவா
ரெங்ஙனுய்வரோபிறர்தமக்கல்லல்செய்திடுவோர்.

367 குரவரைச்சிறுபாலரைமாதரைத்துறைநீர்
விரதநற்றொழில்பூண்டிருப்பார்தம்மைமேலவரை
யருமறைத்தொழிலாளரையொறுத்தரைன்றோ
றிரயமுற்றவெஞ்செயல்புரிசெயலமுநெறியோர்.

## காஞ்சிப்புராணம்.

368 தவத்திறைற்செருக்கல்கண்டதுவிளம்பல்பொய்யுரைசாற்றுத லைந்து, பவித்தவந்தணரையிகழுதல்பாதுமளிக்கதுபுகழ்ந் தெடுத்துரைத்தல், வெற்றினையாலுங்கொலைசெயல்பிறர்பா லிடுக்கணையுறுத்துதல்குறளை, செவிப்புகப்புகறல்பூப்புடை மனையைதீண்டலும்பழுதெனப்படுமால்.

369 முனிவியேர்நின்டலவருடன்றுயிறுமமனைவி யாவித்துழிப் பசிப்பில, வினையிகந்திபலபாவிருப்புழியுண்ணும்வேளையு மாங்கவட்பார்த்தல், கனைகதிர்த்தேவைக்கிழக்கெழுங்காலை மேல்கடற்பால்விழுங்காலைப், பனிவிசும்புச்சியுற்றிடுங்காலைப் பார்த்தலும்பழுதெனப்படுமால்.

370 உடையொழிந்திருநீராடுதலாடையொன்றுடுத்துண்டலிரியக்க நடைவழிச்சாம்பரானிலதின்ர்கள்றெமுயிடுதலாங்குமிழ்த லுடையிலாமாதைநோக்குதலிருகாலொளிர்ந்தசெங்கனலிடைக் காய்ச்ச, லிடைபுகமந்திவேலையினருந்தலிவைகளும்விலக்கெனப் படியால்.

† ஆயுதல் = கொய்யாவிடல்.

371 இந்திரதிருவில்விசும்பிடைநோக்கியேனையர்க்கறிவுறக்காட்ட
னிந்தைபின்வாளாபேரிகல்விளைத்தல்கைவினைக்குவித்துநீருந்
தல், செங்கழற்கடவுள்வான்பசுப்பார்ப்பார்தேவர்கண்ஞாயிறு
குரவ, ரிந்துவின்முன்னரிச்சையாற்றிருத்தலின்னவுந்தீங்கெனப்
படுமால்.

372 கேழுகிரோமந்துணித்திடலுகிராற்பல்லினைக்கிளைத்திட
றனியே, பாழ்மனைத்துயிறல்கண்படைபொழுப்பன்முடிவட
பாலின்வைத்துறங்க, ரூழ்கநுண்பொடிக்கலோட்டினைபடித்த
றனிவழிச்செலல்பிறரணிந்த, காறகந்தைநுப்புழுதவியவணிந்த
வினைபயுங்கடிந்திடப்படுமால்.

## தணிகைப்புராணம்.

373 ஐந்தெனப்படுமாபாதகமவைதாமநுமறைபயந்தவந்தணனைச்
சிந்துறவடர்த்தறேறல்வாய்மடுத்தல்செம்பொனைக்கரந்தனர்
வெளவல், கொந்தெறிற்குரவன்மனையினைக்கலத்தல்கொடியிவ்
வினைஞரைக்கூட, லிந்தவல்வினையின்மருங்கியல்வினைபுரிவற்
றினுளடங்குவமாதோ.

## விநாயகபுராணம்.

374 பாயபல்பகைக்குந்தப்பிப்பாரிடையுய்ப்பலாகு
மேயவக்கதிசென்றாலும்விளிதராதுடங்குசென்றே
யாயகன்றனைத்துங்கொன்றங்கநந்துயர்பலவுநல்குந்
தீயவல்வினையினையாருஞ்செய்யற்கவேமகண்டா.

375 அநந்தவர்தாவர்முன்றோந்தனநயர்ந்தோர்தப்பாற்
றிருந்திபவண்ணந்தின்னைமசெதக்குவேண்டியபக்கத்தும்
பொருந்தியபொருள்கொடாமைபொங்கியவெந்நனிகாமம
விருந்துசெய்கழிகண்டோடபிவைபெலாம்விக்கமைந்தா.

376 குற்றம்புரியாதிருந்தாபிறர்குற்றங்களைகிறிதேனுங்
குற்றம்புரியிற்சிற்றெறிவைக்குவையையபழிக்குமாறேபோற்
பற்றும்பெருவாழ்வினையழிக்கும்பகைவர்க்காக்கம்பெருக்கு
மூற்றும்பெருநோயுமூட்டிக்குமுனியாரானுமுனிவிக்கும்.

## கூர்மபுராணம்.

377 மாதவரைக்குரவன்றனைமேதகுவானோரை
வேதியரைச்சதுமாமறையைப்புகன்மெய்ந்நூலை
யேதமுறைத்தவரிம்மையின்வெந்துயரிடைமூழ்கிப்
பாதகருற்றிடுபாழ்நரகத்திடைபடிவாரால்.

378 தன்றமரிழித்தருன்பிறர்க்குரைத்தறவறிலான்றனைத்தவ
றுரைத்தன், மன்றவேறொருவன்றனையவணூட்டல்களைகணீ
யென்னவந்தடைந்தோர்க், கொன்றியாதுயாமியற்றுதல்பறவை
விலங்கினமொன்றொடொன்றிகலிப், பொன்றிடவிடுத்தல்
பிறர்மனைநயத்தல்பொறிவழியொழுகுதலாகா.

379 உரைநனிபகர்ந்துநகைத்துநின்றலவியுண்குதல்புனலிடை
வாளா, மருவியேகிடத்தன்மகவினைக்குரியால்லரைமகம்புரி
வித்த, லிருளிடையேனுந்தமியனாயேனுந்தொடுகழலின்றியும்
வேடர், தருமமொன்றறியார்தம்மொடுநெறியிற்போதனற்றருமம
மன்றுமால்.

380 அந்தணர்நிழலைச்சினகரத்தோங்குமவிரொளிச்சிகரநன்னிழலை
நிந்தையிற்கடத்தல்யோகியையதியைநிகரறுமுனிவரையிகழ்தல்
வெந்தொழிகரியிற்சாம்பரின்மயிரின்மிதித்திடல்விளக்கியதூளி
வந்துமேலடையநிற்றறோய்த்துகினீர்மேற்படவிருந்திடறீதாம்,

## கருவூர்ப்புராணம்.

381 *அந்தணர்ச்செகுத்தல்கோவையாவைவாம்பரியைக்கோற
றந்தைதாய்மொழிதிறம்பறமார்க்கலக்கண்ணிழைத்தன்
மைந்தரைவதைத்தல்வாதைமருவுதல்விருந்தறக்கோறன்
முந்தையோர்மொழிநூல்பொய்ம்மைமொழியெனமுனிவுகூறல்.

382 *பன்னியைநீத்தல்கூத்தியோர்ப்புணர்படிற்றொழுக்கம்
வன்னியையிகழ்தல்கற்புமகளிரைவலிதிற்றோய்தல்
பொன்னிறலெழிலான்மூத்தபூவையின்போகந்துய்த்த
லன்னியமாதர்நீசமகளிர்பாலன்புபூத்தல்.

383 *பூப்பினள்போகமற்றைவிலக்குநாட்போகந்துய்த்தல்
பார்ப்பனமகளிர்கொங்கைநோக்குவெம்பாவம்வெய்ய
தீப்பதிதொறுமடுத்துச்சிதைத்திடுந்தீயவஞ்சந்
தோப்பலர்த்துடைவைகூவல்சூழியைத்தடிதறார்த்தல்.

384 *உயிர்குறைத்திடலூன்விற்றல்கொண்டுணலூண்ணுமுள்ளச்
செயிர்குறைத்திடவிடுத்தோன்றனையுணச்செப்பல்செப்பும்
பயில்வினைமறுமையுண்டல்பாதகர்சூழவிற்போகித்
தயவறப்பேசல்பேசிநடுவையோர்சார்பிற்கூறல்.

385 *பிறர்மனைவிழைதல்வேறுபுறத்தொழுக்கினையும்பெண்டிர்
திறனொருங்குணர்ந்துமன்னமவளிடவுண்ணுந்தீமை
யறனிலபுரிதல்போரிலரசனைவிடுத்துப்போதல்
கறவைகன்றூட்டுமுன்னர்க்கறந்துபால்களிப்பவுண்டல்.

386 *அதிதியர்க்குணவுநல்காதருந்துதல்பலியிடாமை
முதியகூன்மகளிர்கொங்கைமுயங்குதலவரைக்காய்தல்
கதிர்வெயில்விரிகாலத்திலரிவையர்கலவிவேட்டல்
பொதிகலன்கழித்துமாசுபுனைமடவாரைப்புல்லல்.

387 *நட்பிடைத்திடர்விளைத்தனண்பகற்பசிக்கூட்டாமை
கட்குடித்துழலுந்தீமைபலபொருள்களவிற்கோடல்
புட்குலம்விலங்குசோரக்கண்ணியிற்படுக்கும்புன்மை
கொட்புறவரைவில்லாமேகொலைத்தொழிலாற்றுங்குற்றம்.

383 *நஞ்செனக்குறளைபேசியாரையுநலிவுசெய்த
றஞ்செனவடைந்தோர்க்காற்றும்பாதகந்தாவில்கற்பு
வஞ்சியர்தம்மைவிற்றல்பற்றியில்வாழ்க்கையாற்ற
னெஞ்சிலொன்றினையிருத்திவாக்கிலொன்றினைநிகழ்த்தல்.

389 *விரதமேற்கொடுவிடுத்தல்விரதத்துக்கழிவுசெய்தல்
பரவையிற்கலனிற்போகல்பழிபடக்கோறற்பார்த்த
லரவுகைப்பிடித்தலாட்டனீர்விளையாடலேற்கு
இரவலர்க்கீதலின்மையீதலைவிலக்கும்புன்மை.

390 *உடனிருந்துணவுமாந்திப்புறனுரைத்துழலும்பாவ
மடல்கெழுமமைச்சன்வேந்தைபடக்கிநாடளிக்கும்பாவம்
விடலருமமைச்சைவீணில்விழுந்துவாளரையன்பாவங்
கடலுலகதிற்செங்கோல்வெங்கோன்முறைகாட்டும்பாவம்.

### திருக்கழுக்குன்றப்புராணம்.

391 *குரவரைப்பிழைத்தவர்கொண்டநோன்பரைப்
பருவரச்செய்தவர்பழித்தல்சொற்றவ
ரிரவலர்க்கிதந்தபவிரங்குகிற்றிலாக்
காவடத்தியற்கையர்கதியுங்காண்பரோ.

392 *தேவருக்கெனவிரந்துண்ணுந்தீயவர்
யாவருக்கும்படுநிந்தையேற்றுநர்
காவெனப்பிறர்வைத்தநிதியனைக்கொளும்
பாவமுற்செய்தவப்பழியொழிப்பரோ.

### காசிரகசியம்.

393 *கற்றதற்கியைந்தவொழுக்கமில்லவனுய்க்களவினாற்
பிறர்பொருள்கவர்ந்து, முற்றவிற்றுமுழலுமுலைமடமாதர்முயக்
கிடையழுந்தியுமனக்குஞ், செற்றநிக்காக்குந்தீயகள்ளுண்டுஞ்
செறிபலதுரோகமேபயின்று, முற்றவெங்கொலையும்புரிதாத்
துணிந்தானுரைக்கருங்கொடியமாபாவி.

394 *பாரடிசில்புசித்திடுதல்பரதாரவாஞ்சையுறல்பார்பொன்
வெளவல், பாரவஞாதங்கோடலநாசாரந்துவேசமுறைபடி
றிராகம், பாரிகழப்புலானுண்டல்கள்ளுண்டன்மறையவர்
முற்பலரைக்கோறல், பாருயிர்தன்னுயிர்போற்பேணாமை
யினையாதிபலவுங்குற்றம்.

395 *பார்பொருளபகரித்தல்பரதாரகமனஞ்செய்தல்
வரமிகுபரமனிந்தைவயக்குதல்கடுஞ்சொற்கூறல்
விரவுபொன்றிவாங்கியீட்டுதவாமையின்ன
தாமுளோர்வடிகப் புத்தேடண்டிக்கப்படுவர்மாதோ.

396 *வெஞ்சினம்பொருளாக்கொள்வோர்விடுபடாப்பொறாமை
யாள்வோர், வஞ்சகநட்போர்பாலும்வயக்குவோர்பிறருறஞ்சி
நெஞ்சநெக்குருகாநெங்கணின்மலப்பெருமான்றுளே
தஞ்சமென்றடையாரின்னோர்தண்டிக்கப்படுவர்மாதோ.

சூதசங்கிதை.

397 மறையவற்செகுத்தோன்கடிமதுநுகர்ந்தோன்வயங்குசெம்
பொற்களவுண்டோ, னிறையருட்குரவன்பன்னியைப்புணர்ந்தோ
னிகரிலிக்கொடியரையாரு, மறைவரான்மாபாதகரென
விவரையடுத்தொருவருடனட்டவரு, முறைதருமாபாதகர்களே
யென்னமொழிவதற்கையமொன்றின்றே.

பிரமோத்தரகாண்டம்.

398 கோறற்களவுகளுண்டல்குருவைப்பிழைத்தல்கூட்டென்னத்
தேறும்பஞ்சபாதகத்தையொழியாதியற்றுஞ்சிறியோரு
மாறிலொன்றுதாங்கொள்ளாதநீதியியற்றியறமிகந்த
பாறுபடிவேன்மன்னவரும்பயந்தோர்க்கொன்றபாதகரும்.

399 செய்தநன்றிமறந்தோருந்தீவைத்தில்லஞ்சிதைத்தோருங்
கொய்துபசுவைத்தின்றோருங்கொண்டோர்ப்பிழைத்துத்
திரிந்தோரு, நொய்திற்கரிபொய்த்துரைத்தோருநோன்பை
யிகழ்ந்துநொடித்தோரும், வைதுபழித்துப்பொய்யென்று
முன்னூலிகழ்ந்தவஞ்சகரும்.

400 கருப்பம்வீழ்த்தித்திரிந்தோருங்கலவாதவரைக்கலந்தோரும்
பரித்தவொருதேவினைவழுத்திப்பலதேவரையும்பழித்தோரு
மருத்திவிடத்தாற்கொன்றோருமற்றோர்க்கீயாதிருந்தோரும்
விருத்தர்பாலர்மடவார்கணடுங்கவினைகள்செய்தோரும்.

401 அடைந்தோர்க்கருளாதிருந்தோருமமரிலரசன்படைவெருவி
யிடைந்துவெரிநிட்டோடினரும்வெறியகுறளைபகர்ந்தோரு
மிடைந்தவறியோர்க்கீயாமனிதியமீட்டியிருந்தோருங்
குடைந்துநீருண்கூவல்குளங்குட்டஞ்சிதைத்தகொடியோரும்.

402 ஆராமங்களழித்தோருமதிதிவருந்தவயின்றோருந்
தீராவிடும்பைபனவருக்குந்தவசீலருக்குஞ்செய்தோருஞ்
சோரநிலையைச்சேர்ந்தொழுகித்திவேட்டுண்ணுந்திறன்றிறம்பிப்
பாராவாரங்கலத்தேறிநிதிவேட்டுழன்றபார்ப்பாரும்.

### பிரபுலிங்கலீலை.

403 வந்தநல்விருந்திருப்பமனையினுற்றருந்துவானும
பந்தியினுணவுவேறுபண்ணுபாதகனுந்தாயுந்
தந்தையுமுணவுண்ணாதசமுர்கவூட்சிப்போதி
னைந்தவர்தமைநோக்காமனுகர்ந்திடுகொடியன்றானும்.

404 நிந்தைசெய்யுணவினானுநிருமலன்பூசையின்றி
வந்துணவருந்துவானுமறுத்தவூனுகர்விப்பானுந்
தந்தநல்வினையாற்செல்வஞ்சார்ந்தவர்தம்மைக்கண்டு
சிந்தனைபொறாதழுங்கித்தீர்வினுண்மகிழ்வான்றானும்.

405 கன்றுணவிடாமலான்பால்கறந்துகொள்பவனுஞ்செய்த
நன்றிகொல்பவனுங்கோடிநடுநிலைதவறுவானுங்
கொன்றுயிர்பதைப்பநோக்குங்கொடியனும்போர்க்களத்திற்
றன்றலைவனைவிடுத்துச்சாய்ந்துபோமடமையானும்.

406 அடைக்கலமெனவந்தானையளித்திடாதகற்றுவானுங்
கொடுக்குதுமெனவுரைத்துக்கொடானுமொண்கொடைவிலக்கி
விடுக்குறுமவனும்பாவவினையிடத்துறுதியாகி
நடக்குறுமவனுந்தேர்ந்துநட்டபின்வஞ்சிப்பானும்.

407 குரவர்தம்முரைகடக்குங்கொடியனுந்துறந்துளார்தம
வரவெதிர்கண்டெழாதமறவனுமறிஞர்சான்று
கரவினிலருநூல்கற்குங்கயவனும்புதியராகி
யிரவினில்வந்தநல்லோர்க்கிடங்கொடாதகற்றுவானும்.

408 முன்புகழ்ந்துரைத்துப்பின்னர்முறுவல்செய்திகழ்வான்றானுந்
தன்பெருங்கிளைநல்கூர்ந்துதளர்வுறவாழ்கின்றானு
மன்புகொண்டொருவன்வைத்தவரும்பொருள்கவர்கின்றானுந்
துன்புறத்தொழில்செய்வித்துச்சொல்பொருளிலையென்பானும்.

கொடியோன், பன்னுங்காலவன்றன் றெரிசனம்பரிசம்பழுதற
நிரயவேதுவுமாய், புன்னெஞ்சாலவனூர்போய்நரகெய்திப்
பூமியுள்ளளவுமேறாதல்.

சிவ-ஞானசாரம்.

416 *வேதமாகமங்கணிருதி நூல்புராணமிக்கவெக்கலைகளும்பயின்று
போதமேசொல்லிப்போதமங்குணராப்புலையரங்கவூதையுநிகராங்
கோதிலாவாரந்தக்குமப்பனிதங்கலையயுமுடை †பாணி
யோதமேசமந்தகமுமைய்மீக்கெளிமேனற்றமாம்வஞ்சமின்மையினால்.

சிவ-ஞானசித்தி.

417 *மறைமுதற்கலைகளியாவையுமுணர்ந்துமாசறவுரைத்துமா
சொரிந்தான், கறையறம்விடயக்கடுவெனுங்கடலிற்கருத்தறு
தறிகவிழுமாகி, லறைதருமவனேகன்மசண்டாளனறிவற
விருமையுமிழந்த, பொறியிலிவிலிவனைப்போலும்பாதகரிப்
புவியினிலொருவருமிலையே.

சிவ-தத்துவதரிசனம்.

418 *நற்றவவேடங்கொண்டறமுரைத்துஞானிலத்துணவதின்
பொருட்டாற், பற்றறுமவர்கள்போலவேநடித்துப்பற்றவா
வொடும்பிறர்கடையின், முற்றவேயுழலுமூடருமவரை
யடைந்திடுமூடருமொக்கச், சுற்றியேபாசப்பவக்கடற்பட்டுக்
கறங்கெனச்சுழல்வர்வீழ்வரே.

இராமாயணம்.

419 அறங்கெடமுயன்றவனருளினெஞ்சினன்
பிறன்கடைநின்றவன்பிறனைச்சீறினோன்
மறங்கொடுமன்னுயிர்கொன்றுவாழ்ந்தவன்
றுறந்தமாதவர்க்கருந்துயரஞ்சூழ்ந்துளோன்.

420 குரவரைமகளிரைவாளிற்கொன்றுளோன்
புரவலனுழைபொருள்புரிவில்வாரினோன்
விரவலர்வெரிநிடைவிழிக்கமீண்டுளோ
னிரவலர்க்குநிதியெறிந்துவெளவினோன்

† பாணி - பலபண்டம்.

421 தாய்பசியுழந்துயிர்தளரத்தான்றனி
பாய்பெரும்பாழ்வயிறளிக்கும்பாவியு
நாயகன்படநடந்தவனுநண்ணுமந்
தீயெரிநரகத்துக்கடிதுசெல்கயான்.

422 தாளினிலடைந்தவர்தம்மைத்தற்கொரு
கோளுறவஞ்சினன்கொடுத்தபேதையு
நாளினுமறமறந்தவனுநண்ணுறு
மீளருநரகிடைவிரைவின்வீழ்கயான்.

423 பொய்க்கரிகூறினோன்போருக்கஞ்சினோன்
கைக்கொளுமடைக்கலங்கரந்துவௌவினோ
னெய்த்திடத்திடர்செய்தோனென்றின்னோர்புகு
மெய்க்கொடுநரகிடைவிரைவின்வீழ்கயான்.

424 அந்தணருறையுளையனலியூட்டினோன்
மைந்தரைக்கொன்றுளோன்வழக்கிற்பொய்த்துளோ
னிந்தனைதேவரைநிகழ்த்தினோனபுகும்
வெந்துயர்நரகத்துவீழ்கயானுமே.

425 கன்றுயிரோய்ந்துகக்கறந்துபாலுண்டோன்
மன்றிடைப்பிறர்பொருண்மறைத்துவௌவினோ
னன்றியைமறந்திடுநயமிலனவினோ
னென்றிவருறுநரகென்னதாகவே.

426 ஆறுதன்னூடன்வருமஞ்சொன்மாதரை
யூறுகொண்டலைக்கத்தன்னுயிர்கொண்டேகினோன்
சோறுதன்னையலுளோர்பசிக்கத்துய்த்துளோ
னேறுமக்கதியிடையானுமேறவே.

427 எஃகெறிசெருமுகத்தேற்றதெவ்வருக்
கொஃகினனுயிர்வளர்த்துண்ணுமாசையா
னஃகலிலறநெறியாக்கியோன்பொருள்
வெஃகியவன்னன்வீழ்நரகின்வீழ்கயான்.

428 கன்னியையழிசெயக்கருதினேன்குரு
பன்னியைநோக்கினேன்பருகினேனறை
பொன்னிகழ்களவினிற்பொருந்தினேனென
வின்னவருறுகதியென்னதாகவே.

429 ஊணலவுண்வழிநாயினுண்டவ
னாணலன்பெண்ணலனார்கொலாமென
நாணலனரகமுண்டென்னுநல்லுரை
பேணலன்பிறர்பழிபிதற்றியாகயான்.

430 மறுவிறொல்குலங்களைமாசிட்டேற்றினேன்
சிறுவிலையெளியவருணவுசிந்தினே
னறியனவயலவர்நாவினீர்வர
வுறுபதநுங்கியவொருவனாகயான்.

431 ஏற்றவர்க்கொருபொருளுள்ளதின்றென்று
மாற்றலனுதவலன்வரம்பில்பல்பக
லாற்றினனுழற்றுமோராதனெய்துமக்
கூற்றுறுநரகினோர்கூறுகொள்கயான்.

432 நாரங்கொண்டார்நாடுகவர்ந்தார்நடையல்லா
வாரங்கொண்டார்மற்றொருவர்க்காய்மனைவாழுந்
தாரங்கொண்டாரொன்றிவர்தம்மைத்தருமந்தா
னீருங்கண்டாய்கண்டகருய்ந்தாரெவரையா.

433 உய்யநிற்கபயமென்றானுயிரைத்தன்னுயிரினோம்பாக்
கையனுமொருவன்செய்தவுதவியிற்கருத்திலோனு
மையறநெறியினோக்கிமாமறைநெறியினின்ற
மெய்யினைப்பொய்யென்றானுமீள்கிலாநரகில்வீழ்வார்.

### வில்லிபாரதம்.

434 மீதெடுத்தவஞ்சராகிவெகுளிசெய்தல்பிறர்பெருங்
கோதெடுத்துரைத்தனண்புகொண்டயிர்த்தல்கொடியவெஞ்
சூதெடுத்துவிழைதலுற்றசூள்பிழைத்தலின்னவே
தீதெடுத்தநூலின்முன்புதீயவென்றுசெப்பினார்.

435 இரவலரிளையவரேத்துநாவலர்
விரவியதூதுவர்விருத்தர்வெதிய
ரரிவையர்வெஞ்சமரஞ்சுவோர்பெருங்
குரவரொன்றிவர்களைக்கோறல்பாவமே.

## துசேலோபாக்யானம்.

436 உயிர்க்கொலைபுரிதலுண்ணுமுணவுமாறூட்டஞ்செய்த
லயிர்ப்பிலாநண்பர்மாட்டுமமைதரக்குய்யஞ்செய்தல்
பயிர்ப்புமிக்குறநல்லோரைப்பழித்தல்பொய்க்கரியுரைத்தல்
செயிர்ப்பிலாலயத்திடத்துஞ்சென்றுபட்டிமையியற்றல்.

437 ஓங்குபெருஞானியர்போற்பேசுவாரவருண்மைவேடம்போலப்
பாங்குபெறவுடற்புனைவார்சற்கருமஞ்செய்வார்தம்பக்கமேகி
நீங்குகவென்றொளிப்பாரிந்நிலைமேலாம்பிரமத்தினிலையேயென்ப
ரீங்கிவர்கடாங்கெடுவதன்றிமற்றோரையுங்கெடுக்குமெண்ணம்
பூண்டோர்.

438 பொன்முதலபொருளிடத்துமிச்சையற்றார்போற்றுறவுபூண்டு
பின்னர், வன்மைசெறிமனத்தபக்குவர்க்குபதேசமுநவிற்றி
வருவதெல்லா, நன்மைதருமுன்னோரெண்காறொழுகப்
பள்ளியெனநயந்தோராயன, புன்மையறப்பற்றியஃதுடனழிந்த
னென்றகதைபோலுமாதோ.

439 மிக்கவறிவுடையாரைப்போன்றுமுடற்பற்றனைத்தும்விடுத்தார்
போன்றுந், தக்கவழக்கிடத்தினுயர்திணைவினையஃறிணைவினையாச்
சமையச்சொற்றுந், தொக்கபடர்க்கைப்பெயர்முன்
னிலைப்பெயராகிடவுரைத்துஞ்சூழ்வதெல்லாம், பக்குவமின்
மடவோரைமயக்கியவர்கைப்பொருளைப்பறித்தற்கன்றோ.

## நளவெண்பா.

440 காதல்கவறாடல்கள்ளுண்டல்பொய்மொழித
லீதன்மறுத்தலிவைகண்டாய்—போதிற்
சினையாமைவெருந்திருநாடாசெம்மை
நினையாமைபூண்டார்நெறி.

441 அறம்பிழைத்தார்பொய்த்தாரருள்சிதைத்தார்மானத்
திறம்பிழைத்தார்தெய்வமிகழ்ந்தார் —புறங்கடையிற்
சென்றார்புகுநரகஞ்சேர்வாய்கொலென்றழியா
நின்றாள்விதியைநினைந்து.

புறநானூறு.

442 *பல்சான்றீரேபல்சான்றீரே
கயன்முள்ளன்னநரைமுதிர்திரைகவுட்
பயனின்மூப்பிற்பல்சான்றீரே
கணிச்சிக்கூர்ம்படைக்கடுந்திறலொருவன்
பிணிக்குங்காலையிரங்குவிர்மாதோ
நல்லதுசெய்தலாற்றீராயினு
மல்லதுசெய்தலோம்புமினதுதா
னெல்லாருமுவப்பதன்றியு
நல்லாற்றுப்படூஉநெறியுமாரதுவே.

சீவகசிந்தாமணி.

443 குழற்சிகைக்கோதைசூட்டிக்கொண்டவணிருப்பமற்றோர்
நிழற்றிகழ்வேலினானேநேடியநெடுங்கணாளும்
பிழைப்பிலாட்புலந்தந்தானுங்குரவரைப்பேணல்செய்யா
திழுக்கினாரிவர்கள்கண்டாயிம்மைநோய்க்கிரைகளாவார்.

444 நட்பிடைக்குய்யம்வைத்தான்பிறர்மனைநலத்தைச்சேர்ந்தான்
கட்டழற்காமத்தீயிற்கன்னியைக்கலக்கினானு
மட்டுயிருடலந்தின்றானமைச்சனாய்அரசுகொன்றான்
குட்டநோய்நரகந்தன்னுட்குளிப்பவரிவர்கள்கண்டாய்.

445 கொல்வதேகன்றிநின்றார்கொடியவர்கடியரீரா
ரில்லையேயிம்மையல்லாலும்மையுமுயிருமென்பா
ரல்லதுந்தவமுமில்லைதானமுமிழவென்பாருஞ்
செல்பவநரகந்தன்னுட்டீவினைத்தேர்களூர்ந்தே.

446 மல்லன்மலையனையமாதவரைவைதுரைக்கும்
பல்லவரேயன்றிப்பகுத்துணாப்பாவிகளு

மல்குல்விலைபகருமாய்தொடியாரதியா
வில்பொருதோண்மார்புவிலங்காய்ப்பிறப்பவே.

வளையாபதி.

447 பொய்யன்மின்புறங்கூறன்மின்யாரையும்
வையன்மின்வடிவல்லனசொல்லிநீ
ருய்யன்மின்னுயிர்கொன்றுண்டுவாழுநாள்
செய்யன்மின்சிறியாரொடுதீயன.

448 கள்ளன்மின்களவாயினயாவையுங்
கொள்ளன்மின்கொலைகூடிவருமற
மெள்ளன்மின்னிலரென்றெண்ணியாரையு
நள்ளன்மின்பிறர்பெண்ணொடுநண்ணன்மின்.

449 *பீடில்செய்திகளாற்களவிற்பிறர்
வீடில்பல்பொருள்கொண்டபபனெனக்
கூடிக்காலொடுகைகளைப்பற்றிவைத்
தோடவின்றியுலையக்குறைக்குமே.

பெருந்தேவனார்பாரதம்.

450 தன்னைச்செறுதானைக்காய்வான்றகாக்கொலையன்
பின்னைக்குரவரைப்பேணுதான் — முன்னொருவ
னில்லாளைக்காதலித்தானிந்நால்வர்வெந்நரகத்
தல்லாலழுந்தாதவர்.

451 அற்றங்கள்பார்த்தங்கடைத்திருந்துசொல்வானுங்
குற்றம்பொய்கோவுக்குரைப்பானுஞ் — செற்றத்தே
நின்றானுஞ்செய்ந்நன்றிநீத்தானுமந்தணரைக்
கொன்றாரோடொப்பர்குறித்து.

திரிகடுகம்.

452 தன்னைவியந்துதருக்கலுந்தாழ்வின்றிக்
கொன்னேவெகுளிபெருக்கலு — முன்னிய
பல்பொருள்வெஃகுஞ்சிறுமையுமிம்மூன்றுஞ்
செல்வமுடைக்கும்படை.

453 நன்றிப்பயன்றூக்காநாணிலியுஞ்சான்றோர்முன்
மன்றிற்கொடும்பாடுரைப்பானு—நன்றின்றி
வைத்தவடைக்கலங்கொள்வானுமிம்மூவ
ரெச்சமிழந்துவாழ்வார்.

## நல்வழி.

454 *வேதாளஞ்சேருமேவெள்ளெருக்குப்பூக்குமே
பாதாளமூலிபடருமே—மூதேவி
சென்றிருந்துவாழ்வளோசேடன்குடிபுகுமே
மன்றோரஞ்சொன்னார்மனை.

## திருக்குறள்.

455 தீயவைதீயபயத்தலாற்றீயவை
தீயினுமஞ்சப்படும்.

456 மறந்தும்பிறன்கேடுசூழற்கசூழி
னறஞ்சூழுஞ்சூழ்ந்தவன்கேடு.

457 இலனென்றுதீயவைசெய்யற்கசெய்யி
னிலனாகுமற்றும்பெயர்த்து.

458 தன்னைத்தான்காதலனாயினெனைத்தொன்றுந்
துன்னற்கதீவினைப்பால்.

459 வஞ்சமனத்தான்படிற்றொழுக்கம்பூதங்க
ளைந்துமகத்தேநகும்.

460 தவமறைந்தல்லவைசெய்தல்புதன்மறைந்து
வேட்டுவன்புட்சிமிழ்த்தற்று.

---

ஆகச் செய்யுள் 97. தீயொழுக்கம் முற்றிற்று.

---

## கஉ-அதி. புறங்கூறாமை.

---

### விநாயகபுராணம்.

461 கேளிர்பிரிவர்நட்பினராய்க்கெழுமுவாருமிலராவர்
மூளும்வடுச்சொன்னோராகமொழிவரெவருமாதலினு
ளுமறத்தைக்கொன்றனந்தநவைகள்செயினுமெதிர்நின்று
மாளவுரைசெய்யினுஞ்செய்யேலமைந்தாமறந்துப்புறங்கூறல்

### காசிகண்டம்.

462 வெம்மையோடுபிறர்தப்பழிவிளம்பியுழலுஞ்
செம்மையில்லவர்கடையுமிழும்வாயிலயலார்
தம்மில்வாழ்பவரைநோக்கினர்தடங்கண்மிசையு
மம்மவோவெனவிருப்புமுளைகொண்டுறைதியால்.

463 மின்னுநக்ககதிர்வேல்விகடபத்திரமிகப்
புன்மையில்லவர்தமைப்பழிபுகன்றவிவரைத்
துன்னுமுளைதனைசோரிநிறைபாழ்நரகின்வாய்ச்
சென்னிகீழுறமடுத்தனல்செறித்திடுதியால்.

### நன்னெறி.

464 உண்டுகுணமிங்கொருவர்க்கெனினுங்கீழ்
கொண்டுபுகல்வதவர்குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கைவிரும்புஞ்செழும்பொழில்வாய்வேம்பன்றோ
காக்கைவிரும்புங்கனி.

### சோமேசர்முதுமொழிவெண்பா.

465 கூனியிராமன்பிரிந்துபோமாறேகூறினளே
தூநறும்பூங்கொன்றையணிசோமேசா—தானே
பகச்சொல்லிக்கேளிர்ப்பிரிப்பர்நகச்சொல்லி
நட்பாடலேற்றாதவர்.

### நீதிநெறிவிளக்கம்.

66 பகையின்றுபல்லார்பழியெடுத்தோதி
நகையொன்றேநன்பயனுக்கொள்வான்—பயமின்று
மெய்விதிர்ப்புக்காண்பான்கொடிறுடைத்துக்கொல்வான்போற்
கைவிதிர்த்தஞ்சப்படும்.

### வளையாபதி.

67 ஆக்கப்படுக்குமருந்தளைவாய்ப்பெய்விக்கும்
போக்கப்படுக்கும்புலைநரகத்துய்ப்பிக்குங்
காக்கப்படுவனவிந்திரியமைந்தினு
நாக்கலதில்லைநனிவெல்லுமாறே.

### நாலடியார்.

68 கணமலைநன்னாடகண்ணின்றொருவர்
குணனேயுங்கூறற்கரிதாற்—குணனழுங்கக்
குற்றமுழைநின்றுகூறுஞ்சிறியவர்கட்
கெற்றாலியன்றதோநா.

### பழமொழி.

169 பண்டின்னரென்றுதமரையுந்தம்மையுங்
கொண்டவகையாற்குறைதீரநோக்கியக்கால்
விண்டவரோடொன்றிப்புறனுரைப்பினஃதாத
லுண்டவிற்றீயிடுமாறு.

### அறநெறிச்சாரம்.

170 முன்னின்றொருவன்முகத்தினும்வாயினுங்
கன்னின்றுருகக்கலந்துரைத்துப்—பின்னின்
றிழித்துரைக்குஞ்சான்றோரையஞ்சியேதேவர்
விழித்திமையார்நின்றநிலை.

171 பொல்லாதுசொல்லிமறைந்தொழுகும்பேதைதன்
சொல்லானேதன்னைத்துயர்ப்படுக்கு—நல்லாய்
மணலின்முழுகிமறைந்துகிடக்கு
†நுணலுந்தன்வாயாற்கெடும்.

---

† நுணல் - தவளை.

திருக்குறள்.

472 அறங்கூறானல்லசெயினுமொருவன்
புறங்கூறானென்றலினிது.

473 புறங்கூறிப்பொய்த்துயிர்வாழ்தலிற்சாத
லறங்கூறுமாக்கந்தரும்.

474 கண்ணின்றுகண்ணறச்சொல்லினுஞ்சொல்லற்க
முன்னின்றுபின்னோக்காச்சொல்.

475 அறனோக்கியாற்றுங்கொல்வையம்புறநோக்கிப்
புன்சொல்லுரைப்பான்பொறை.

ஆகச் செய்யுள் 15. புறங்கூறாமை முற்றிற்று.

## கஈ-அதி. பிறனில்விழையாமை.

திருமந்திரம்.

476 *ஆத்தமனையாளகத்திலிருக்கவே
காத்தமனையாளைக்காமுறுங்காளையர்
காய்ச்சபலாவின்கனியுண்ணமாட்டாம
லீச்சம்பழத்துக்கிடருற்றவாறே.

தணிகைப்புராணம்.

477 இந்திரன்பிறனில்காமுற்றிழிகுறிமுழுதும்பெற்றான்
சந்திரன்குரவனில்லாட்டழீஇவெந்துயரத்தாழ்ந்தா
னந்தரத்தவருமண்மேலவருமிவ்வாறுபட்ட
வெந்துயர்க்களவின்றுக்கைநோய்க்கும்வேறவதியின்றே.

விநாயகபுராணம்.

478 காமங்குறித்துப்பாவத்திற்கலந்தபேதையாருள்ளும்
வாமங்கனிந்தபிறன்மனைமதிக்கும்பேதையோர்பயத்தா
ருமங்கிழிக்குமறம்பொருள்போற்சற்றுமின்பமுறாதனுற்
றொமங்குதிப்பப்பிறன்மனைவிதோள்காமுறுதல்சூழலே.

479 பகையேபழியேபாவமேபயமேநாணுந்தினங்கொடுக்குந்
தகைபார்பெருமைமுழுதழிக்குஞ்சார்ந்தபிறனில்விழை
வொழிந்தோர், தொகையாறமேபொருளின்பந்தோலாப்
பெருமையுடன்வாழ்வர், நகையாலதனைக்கனவிடத்துநவிற்றி
யிடினுந்தீங்காமே.

திருக்கூவப்புராணம்.

480 மிக்கமென்றசையிருந்திடவெற்றெனும்பதனைத்
தக்கதென்றுபுன்ஞமலிகள்கறித்தனதளர்ந்து
துக்கமொன்றுமிறம்மனைதுறந்துபோய்ப்பிறரில்
புக்குவெந்துயர்க்கடற்படுமிழுதைகள்போல.

கூர்மபுராணம்.

481 வெற்பெடுத்துயர்ந்ததிண்டோளிராவணன்விரகத்தெய்திப்
பொற்புடைச்சீதைநெஞ்சமெலிவுறப்புன்மைசெய்து
கற்பெனுங்கனலிபற்றக்கிளையொடுங்கரிந்தானென்னி
லற்புடையவர்க்குத்தீமைபுரிவரோனரகினாழ்வார்.

காசிகண்டம்.

482 பிறர்மனைக்குரியபேதையரிடத்துவிழைவார்க்
குறுகுகாலினைகுறைத்திடுதிகொம்மைமுலைமே
லிறுகுறத்தழுவுகையிணையையீர்தியவர்மே
லூறுசினத்தினெடுமூசிகணிறுத்திடுதியால்.

நீதிநெறிவிளக்கம்.

483 பிறன்வரைநின்றாள்கடைத்தலைச்சேற
லறனன்றேயாயினுமாக—சிறுவரையு
நன்னலத்ததாயினுங்கொள்கநலமன்றே
மெய்ந்நடுங்கவுண்ணடுங்குநோய்.

இராமாயணம்.

484 ஈரமாவதுமிற்பிறப்பாவதும்
வீரமாவதுங்கல்வியின்மெய்ந்நெறி
வாரமாவதுமற்றொருவன்புணர்
தாரமாவதைத்தாங்குந்தருக்கதோ,

485 மறந்திறம்பல்வலியமெனுமனம்
புறந்திறம்பலெளியவர்ப்பொங்குத
லறந்திறம்பலருங்கடிமங்கையர்
திறந்திறம்பறெளிவுடையோர்க்கெலாம்.

486 இச்சைத்தன்மையினிற்பிறரில்வினை
நச்சினாருநகையுறநாணிலன்
பச்சைமேனிபுலர்ந்து பழிபடூஉங்
கொச்சையாண்மையுஞ்சீர்மையிற்கூடுமோ.

சீவகசிந்தாமணி.

487 காதலாள்கரிந்துநையக்கடியவேகனைந்துகன்றி
யேதிலான்றாரநம்பியெளிதெனவிறந்தபாவத்
தூதுலையுருகவெந்தவொள்ளழற்செப்புப்பாவை
யாதகாதென்னப்புல்லியலறுமால்யானைவேந்தே.

வளையாபதி.

488 பெண்ணினாகியபேரஞர்ப்பூமியு
ளெண்ணமிக்கவரெண்ணினுமெண்ணிலார்
பின்னிநின்றபெருவினைமேல்வரு
மென்னதாயினுமேதில்பெண்ணீக்குமின்.

நாலடியார்.

489 அச்சம்பெரிதாலதற்கின்பஞ்சிற்றளவா
னிச்சனினையுங்கால்கோக்கொலையா—னிச்சலுங்
கும்பிக்கேகூர்த்தவினையாற்பிறன்றா
நம்பற்கநாணுடையார்,

490 அறம்புகழ்கேண்மைபெருமையிந்நான்கும்
பிறன்றாரநச்சுவார்ச்சேரா—பிறன்றா
நச்சுவார்ச்சேரும்பகைபழிபாவமென்
றச்சத்தோடிந்நாற்பொருள்,

491 புக்கவிடத்தச்சம்போதரும்போதச்சந்
துய்க்குமிடத்தச்சந்தோன்றுமற்காப்பச்ச
மெக்காலுமச்சந்தருமாலெவன்கொலோ
வுட்கான்பிறனில்புகல்.

492 காணிற்குடிப்பழியாங்கையுறிற்கால்குறையு
மாணின்மைசெய்யுங்காலச்சமா—நீணிரயத்
துன்பம்பயக்குமாற்றுச்சாரிநீகண்ட
வின்பமெனக்கெனைத்தாற்கூறு.

493 செம்மையொன்றின்றிச்சிறியாரினத்தராய்க்
கொம்மைவரிமுலையாடோண்மரீஇ—யும்மை
வலியாற்பிறர்மனைமேற்சென்றாரேயிம்மை
யலியாகியாடியுண்பார்.

அறநெறிச்சாரம்.

494 *அறனுமறனறிந்தசெய்கையுஞ்சான்றோர்
திறனுடையனென்னுரைக்குந்தேசும்—பிறனில்
பிழைத்தானெனப்பிறராற்பேசப்படுமே
விழுக்காமொருங்கேயிவை.

திருக்குறள்.

495 அறன்கடைநின்றாருளெல்லாம்பிறன்கடை
நின்றாரிற்பேதையாரில்.

496 எனைத்துணையாராயினுமென்னாந்தினைத்துணையுந்
தேரான்பிறனில்புகல்.

497 பகைபாவமச்சம்பழியெனநான்கு
மிகவாவாமில்லிறப்பான்கண்.

498 பிறன்மனைநோக்காதபேராண்மைசான்றோர்க்
கறனொன்றோவான்றவொழுக்கு.

499 நலக்குரியார்யாரெனினாமநீர்வைப்பிற்
பிறர்க்குரியாடோடோயாதார்.

ஆகச்செய்யுள் 24. பிறனில்விழையாமை முற்றிற்று.

---

## கசு-அதி. பொறை.

### கந்தபுராணம்.

500 பெற்றிடுதிருவினிற்பிறந்தவெஞ்சினங்
கற்றவருணர்வையுங்கடக்குமன்னது
முற்றுறுகின்றதன்முன்னமன்பினோ
ருற்றனகூறியேயுணர்த்தல்வேண்டுமால்.

501 சிறியவரொருபிழைசெய்யின்மேலவர்
பொறையொடும்பின்னரும்போற்றலல்லதை
யிறையதும்வெகுள்வரோயாளுஞ்செய்பிழை
யறிவனீயன்றியேயாரதாற்றுவார்.

### காஞ்சிப்புராணம்.

502 வெகுளியேயுயிர்க்கெலாம்விளைக்குந்தீவினை
வெகுளியேதுணர்ந்தவம்விரதமாய்க்குமால்
வெகுளியேயறிவினைச்சிதைக்கும்வெம்மைசால்
வெகுளியிற்கொடும்பகைவேறொன்றில்லையால்.

### தணிகைப்புராணம்.

503 அறிவினிற்பெரியரோரறிந்தரும்பிழைகள்செய்யா
ரறிவினிற்சிறியரோரறிந்தறியாமைபாலுஞ்
செறிபிழையிழைப்பவவ்வத்திறத்தினதுண்மைநாடிச்
சிறுமையினீங்கினோர்கள்செயிர்த்துளவயிரங்கொள்ளார்.

### விநாயகபுராணம்.

504 வெறுப்பவொருவன்காரணத்தான்மிக்கமடத்தாற்புரிபிழையைப்
பொறுப்பினதுவேபேரறமாம்புகழுநிறையுமிகவளருங்
கறுப்பொன்றறியாவறிவினர்கள்கருத்தின்மகிழ்ச்சியுளவாகு
மொறுப்பின்வருவதொன்றில்லையதனாற்பொறுமையுயிர்த்துணையாம்.

### சேதுபுராணம்.

505 சினத்தினால்வருந்தீமையத்தீமைதீப்பிறப்பு
மனத்தினீடியமருட்கையும்வறுமையுநரகு
மனைத்துநல்கிடுமாதலாலொருபொழுதயர்த்துந்
தனக்குநல்லவன்வளர்ப்பனோசீற்றமாந்தழலை.

### செவ்வந்திப்புராணம்.

506 *சிலையின்பிளவுநிலப்பிளவுமணலின்பிளவுஞ்சிறந்தபுனற்
றலையின்பிளவுமெனநான்குவகையாம்வெகுளிதனையுடையோர்
தொலைவினரகம்புள்விலங்குநராய்ப்பிறந்துதுயருழப்பர்
மலையுந்தகரநிழலுடனேமலையுங்களிற்றுமன்னவனே.

### பிரபுலிங்கலீலை.

507 சிறப்புப்பெற்றநல்யோகிதன்மனத்தெழுசினந்தன்
னறத்தைக்கொன்றிடுமுன்புபஞ்சியிற்படுமழல்போ
லொறுக்கப்பட்டவன்பவம்பினையொழித்திடுமதனாற்
பொறுத்தற்கொப்பிலையென்றுநன்றறிந்தனைபோலும்.

508 வலியவனிடத்துமொத்தான்மாட்டினும்வெகுளிகாத்தல்
பொலிவுசெயறமதென்னப்பொருந்துறுதனையர்தம்பா
னலிவுறுவெகுளிசெல்லாததலானலியலாற்று
மெலியவனிடத்துக்காக்கும்வெகுளியேயறமதென்பர்.

509 வைதவன்றன்னைநன்றுவாழ்த்தினனெனவுந்தீய
செய்தவன்றன்னைநல்லசெய்தவனெனவுங்கொள்வோன்
கைதவமகன்றமுத்திகண்டவனவ்வாறன்றேல்
பொய்தவனென்பதென்றுபுகன்றனர்புலவரன்றே.

510 பெரியவர்தம்மைக்காய்ந்தாற்பிறங்கல்கல்லியகோலொப்பான்
புரிவனபுரியப்பட்டுப்புலம்புவனொத்தார்க்காய்ந்தா
னெரிநரகதனில்வீழ்வனிழிந்தவர்க்காய்ந்தானென்று
லொருவர்தம்மிடத்துஞ்சீற்றமுறாமையேநன்றுமாதோ.

### பகவற்கீதை.

511 *எரிநிகர்வெகுளிபொங்கமயக்கமவந்தெய்துமெய்தத்
தெரிபவைசிதையுமுள்ளந்தெரிந்தவைசிதைந்தபோதே
யுரியதன்னுணர்வுமாயுமுணர்வுமாய்ந்தொழிந்தவாறே
யரியவென்றறிஞர்பேசுமனைத்துமாய்ந்தொழியுமன்றே.

### பிரபோதசந்திரோதயம்.

512 *வலியோர்மேல்வரும்வெகுளிமறித்துடனேதமைக்கெடுக்கும்
வறிதேகோப, மெலியோர்மேல்வரிலிகத்தில்வெம்பழியு
மேனாகும்வினைக்குமல்லா, னலிவோர்தம்முவப்பினுக்கு
நகைக்குமெய்துங்கேடினியநட்புமாற்றும், புலியோகம்பசு
வினம்போற்பல்காமையதன்சினத்தின்பொருட்டாலன்றே.

513 *வந்தவர்வாழ்த்தினும்வசையுரைக்கினுஞ்
சந்தனம்பூசினுந்தசையைக்கொய்யினு
முந்துறுவினையினூண்மூண்டதாமெனச்
சிந்தையிலுன்னியான்சினத்தைவெல்வனே.

### நன்னெறி.

514 உள்ளங்கவர்ந்தெழுந்தோங்குசினங்காத்துக்
கொள்ளுங்குணமேகுணமென்க—வெள்ளந்
தடுத்தலரிதோதடங்கரைதான்பேர்த்து
விடுத்தலரிதோவிளம்பு.

### சோமேசர்முதுமொழிவெண்பா.

515 வன்மைச்சுயோதனற்கும்வானோர்சிறைமீட்டான்
றன்மைநெறித்தநமன்சோமேச—பன்முறையு
மின்னாசெய்தார்க்குமினியவேசெப்பாக்கா
லென்னபயத்ததோசால்பு.

### இராமாயணம்.

516 ஒள்ளியதவத்தாற்கல்வியாலுணர்வாலுண்மையாலுணர்ந்தவ
ருயர்ந்தோ, ரெள்ளியகுற்றமில்லவரெய்தும்வெகுளியா

விப்படிப்பட்டார், தெள்ளியவீரச்சிலையினுய்ப்புறத்துத்திறற் பகைவெல்லலாஞ்சினமா, மூள்ளுறுபகையையறிந்தவருலகத் தொருவரும்வென்றவரில்லை.

517 மூங்கிலிற்பிறந்தமுழங்குதீமூங்கின்முதலறமுறுக்குமாபோலத் தாங்கருஞ்சினத்தீதன்னுளேபிறந்து தன்னுறுகிளையெலாந் தகிக்கு, மாங்கதன்வெம்மையறிந்தவர்கமையாலதனையுள் ளடக்கவுமடங்கா, தோங்கியகோபத்தீயினையொக்குமுட்பகை யுலகில்வேறுண்டோ.

### சிலப்பதிகாரம்.

518 நெறியினீங்கியோர்நீரலகூறினு
மறியாமையென்றறிதல்வேண்டும்.

### பெருந்தேவனார்பாரதம்.

519 அற்றவுறுப்பெல்லாமறவையினுண்மறைப்ப
மற்றொருவர்காணுமறையுமால்—வெற்றி
யறையார்கழலாயவமாயவெல்லாம்
பொறையரண்மறைக்கமேற்போம்.

### நாலடியார்.

520 தம்மையிகழ்ந்தமைதாம்பொறுப்பதன்றிமற்
றெம்மையிகழ்ந்தவினைப்பயத்தா—லும்மை
யெரிவாய்நிரயத்துவீழ்வர்கொலென்று
பரிவதூஉஞ்சான்றோர்கடன்.

521 காவாதொருவன்றன்வாய்திறந்துசொல்லுஞ்சொ
லோவாதேதன்னைச்சுடுதலா—லோவாதே
யாய்ந்தமைந்தகேள்வியறிவுடையாரெஞ்ஞான்றுங்
காய்ந்தமைந்தசொல்லார்கறுத்து.

522 நேர்த்துநிகரல்லார்நீரல்லசொல்லியக்கால்
வேர்த்துவெகுளார்விழுமியோ—ரோர்த்ததனை
யுள்ளத்தானுள்ளியுரைத்துராயூர்கேட்பத்
துள்ளித்தூண்முட்டுமாங்கீழ்.

523 இளையானடக்கமடக்கங்கிளைபொரு
ளில்லான்கொடையேகொடைப்பய—னெல்லா
மொறுக்குமதுகையுரனுடையாளன்
பொறுக்கும்பொறையேபொறை.

524 கல்லெறிந்தன்னகயவர்வாயின்னாச்சொ
லெல்லாருங்காணப்பொறுத்துய்ப்ப—வொல்லை
யிடுநீற்றாற்பையவிந்தநாகம்போற்றத்தங்
குடிமையான்வாதிக்கப்பட்டு.

525 மாற்றாராய்நின்றுதம்மாறேற்பார்க்கேலாமை
யாற்றாமையென்னாரறிவுடையா—ராற்றாமை
நேர்த்தின்னாமற்றவர்செய்தக்காற்றாமவரைப்
பேர்த்தின்னாசெய்யாமைநன்று.

526 நெடுங்காலமோடினுநீசர்வெகுளி
கெடுங்காலமின்றிப்பரக்கு—மடுங்காலை
நீர்கொண்டவெப்பம்போற்றானேதணியுமே
சீர்கொண்டசான்றோர்சினம்.

527 உபகாரஞ்செய்ததனையோராதேதங்க
ணபகாரமாற்றச்செயினு—முபகாரந்
தாஞ்செய்வதல்லாற்றவற்றினாற்றீங்கூக்கல்
வான்றோய்குடிப்பிறந்தார்க்கில்.

528 கூர்த்துநாய்கௌவிக்கொளக்கண்டுந்தம்வாயாற்
பேர்த்துநாய்கௌவினாரீங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ்மக்கள்கீழாயசொல்லியக்காற்சொல்பவோ
மேன்மக்கடம்வாயான்மீட்டு.

529 பாடமேயோதிப்பயன்றெரிதற்றேற்றாத
மூடர்முனிதக்கசொல்லுங்காற்—கேடருஞ்சீர்ச்
சான்றோர்†சமழ்த்தனர்நிற்பவேமற்றவரை
யீன்றாட்கிறப்பப்பரிந்து.

---

† சமழ்த்தல் — வருத்தம்.

530 எய்தியிருந்தவவைமுன்னர்ச்சென்றெள்ளி
வைதானொருவனொருவனை—வைய
வயப்பட்டான்வாளாவிருப்பானேல்வைதான்
வியத்தக்கான்வாழுமெனின்.

### நான்மணிக்கடிகை.

531 கற்றார்முற்றோன்றாகழிவிரக்கங்காதலித்தொன்
றுற்றார்முற்றோன்றாவுசாவுத—லெற்றென
வல்லபுரிந்தார்க்கறந்தோன்றாவெல்லாம்
வெகுண்டார்முற்றோன்றாகெடும்.

532 *கண்டதேசெய்பவாங்கம்மியருண்டெனக்
கேட்டதேசெய்பபுலனாள்வார்—வேட்ட
வினியவேசெய்பவமைந்தார்முனியாதார்
முன்னியசெய்யுந்திரு.

533 *கொடுப்பினசனங்கொடுக்கவிடுப்பி
னுயிரிடையீட்டைவிடுக்கவெடுப்பிற்
கிளையுட்கழிந்தாரெடுக்ககெடுப்பின்
வெகுளிகெடுத்துவிடல்.

### அறநெறிச்சாரம்.

534 தன்னையொருவனிகழ்ந்துரைப்பிற்றானவனைப்
பின்னையுரையாப்பெருமையோர்—முன்னை
வினைப்பயனாயிற்றாலென்றதன்கண்மெய்ம்மை
நினைத்தொழியநெஞ்சினோயில்.

535 *எள்ளிப்பிறருரைக்குமின்னாச்சொறன்னெஞ்சிற்
கொள்ளிவைத்தாற்போற்கொடிதெனினு—மெள்ள
வறிவென்னுநீரால்வித்தொழுகலாற்றிற்
பிறிதெனினும்வேண்டாந்தவம்

### மூதுரை.

536 *கற்பிளவோடொப்பர்கயவர்கடுஞ்சினத்துப்
பொற்பிளவோடொப்பாரும்போல்வரே—விற்பிடித்து

நீர்கிழியவெய்தவடுப்போலமாறுமே
சீரொழுகுசான்றோர்சினம்.

537 *சாந்தனையுந்தீயனவேசெய்திடினுந்தாமவரை
யாந்தனையுங்காப்பரறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந்தனையுங்குளிர்நிழலைத்தந்து
மறைக்குமாங்கண்டீர்மரம்.

### நீதிவெண்பா.

538 *அன்னமனையீர்குயிலுக்கானவழகின்னிசையே
கன்னன்மொழியார்க்கழகு கற்பாமே—மன்னுகலை
கற்றோர்க்கழகுகருணையேயாசைமயக்
கறறோர்க்கழகுபொறையாம்.

### திருக்குறள்.

539 அகழ்வாரைத்தாங்குநிலம்போலத்தம்மை
யிகழ்வார்ப்பொறுத்தறலை.

540 ஒறுத்தார்க்கொருநாளையின்பம்பொறுத்தார்க்குப்
பொன்றுந்துணையும்புகழ்.

541 மிகுதியான்மிக்கவைசெய்தாரைத்தாந்தந்
தகுதியான்வென்றுவிடல்.

542 உண்ணாதுநோற்பார்பெரியர்பிறர்சொல்லு
மின்னாச்சொனோற்பாரிற்பின்.

ஆகச்செய்யுள் 43 பொறை முற்றிற்று.

---

## ௧௩- அதி. இன்சொல்.

---

### விநாயகபுராணம்.

543 வந்தவிருந்துமலராதவதனநோக்குமுன்குழையு
மந்தவுடைவாலகத்தன்மையலர்ந்தமுகத்தால்வெளிப்படுத்திச்

சந்தமணிவாரினுந்தோன்றச்சற்றும்வஞ்சங்கலவாமே
யுந்துஞ்சுவையின்மொழியென்றமுறைத்தல்வேண்டும்
பயன்வேண்டின்.

## நன்னெறி.

544 மாசற்றநெஞ்சுடையார்வன்சொலினிதேனையவர்
பேசுற்றவின்சொல்பிறிதேயாக —வீசற்று
நல்லோனெறிசிலைபோனன்றுதாலொண்கருப்பு
வில்லோன்மலரோவிருப்பு.

545 இன்சொலாலன்றியிருநீர்வியனுலகம்
வன்சொலாலென்றுமகிழாதே—பொன்செ
யதிர்வளையாய்பொங்காதழற்கதிராற்றண்ணென்
கதிர்வரவாற்பொங்குங்கடல்.

## சோமேசர்முதுமொழி வெண்பா.

546 இன்சொலிராமனியம்பவிரேணுகைசேய்
துன்பமொழியேபுகன்றான்சோமேசா—வன்புடைய
வின்சொலினிதீன்றல்காண்பானெவன்கொலோ
வன்சொல்வழங்குவது.

## நீதிநெறிவிளக்கம்.

547 இனியவொன்சொலினுமின்சொல்லேயின்னார்
கனியுமொழியுங்கடுவே—யனல்கொளுந்தும்
வெங்காரம்வெய்தெனினுநோய்தீர்க்குமெய்பொடிப்பச்
சிங்கிகுளிர்ந்துங்கொலும்.

518 ஈகையரிதெனினுமின்சொலினுநல்கூர்த
லோகோகொடிதுகொடிதம்மா—நாகொன்று
தீவினைக்கம்மியனல்வாய்பூட்டிடப்படின்மற
றுவாவிவரென்செய்வார்.

## பழமொழி.

549 புன்சொல்லுநன்சொல்லும்பொய்யென்றுணர்கிற்பார்
வன்சொலவழியாய்வாழ்தலுமுண்டாமோ

புன்சொலிடர்ப்படுப்பதல்லாலொருவனை
யின்சொலிடர்ப்படுப்பதில்.

நீதி வெண்பா.

550 *மென்மதுரவாக்கால்விரும்புஞ்சகங்கடின
வன்மொழியினாலிகழுமன்னுலக—நன்மொழிசே
ரோதுகுயிலேதங்குதவிய துகர்த்தபந்தா
னேதபராதஞ்செய்ததின்று.

551 *நாவினுனியினயமிருக்கிற்பூமாது
நாவினியநல்லோருநண்ணுவார்—நாவினுனி
யாங்கடினமாகிலத்திருவுஞ்சேரார்முன்
றாங்கேவருமரணமாம்.

தனிப்பாடல்.

552 *கெட்டகழுதைக்குரலைத்தென்பர்குயில்கூவி
னட்டவர்கள்போன்மகிழ்வர்நண்பதனுடென்னை
பட்டபொருள்சொல்லலுறனுண்டெனினும்யாரும்
வெட்டனவுரைத்தலைவிடுத்திடுமினென்றான்.

திருக்குறள்.

553 துன்புறூஉந் துவ்வாமையில்லாகும்யார்மாட்டு
மின்புறூஉமின்சொலவர்க்கு.

554 பணிவுடையனின்சொலனாதலொருவற்
கணியல்லமற்றுப்பிற.

555 அல்லவைதேயவறம்பெருகு நல்லவை
நாடியினியசொலின்.

556 சிறுமையுணீங்கியவின்சொன்மறுமையு
மிம்மையுமின்பந்தரும்.

557 இனியவுளவாகவின்னாதகூறல்
கனியிருப்பக்காய்கவர்ந்தற்று.

ஆகச்செய்யுள் 15. இன்சொல் முற்றிற்று.

---

---

**திருமந்திரம்.**

558 *கோலவறட்டைக்குனிந்து குளகிட்டுப்
பாலைக்கறந்து பருகுவதேயொக்குஞ்
சீலமுநோன்புமிலாதவர்க்கீந்தது
காலங்கழிந்தபயிரது வாகுமே.

559 *ஈவதுயோகமியமநியமங்கள்
சார்வதறிந்தன்புதங்குமவர்க்கன்றி
யாவலறிந்தன்புதங்காதவர்களுக்
கீவபெரும்பிழையென்றுகொள்ளீரே.

560 *மண்மலைபத்தனைமாதனமீயினு
மண்ணலிவனென்றஞ்சலியத்தனு
பெண்ணியிறைஞ்சாதார்க்கீந்தவிருவரு
நண்ணுவரேழாநரகக்குழியிலே.

**கந்தபுராணம்.**

561 என்னுனுமோருதவியாதொருவன்யார்க்கெனினுந்
தன்னுன்முடிவதெனிற்றானேமுடித்தறலை
சொன்னுன்முடித்திடையாகுஞ்சொல்லுகினும்
பன்னுண்மறுத்துப்புரிதல்கடைப்பான்மையதே.

**காஞ்சிப்புராணம்.**

562 கொடையேயெவர்க்குமெப்பேறுங்கொடுக்குநெறியிற்பிறழாத
கொடையேயாருநன்வழியிலொழுகச்செய்புங்குறைநீர்த்த
கொடையேபகைமையுறவாக்குங்குலவும்பூதமனைத்தினையுங்
கொடையேபுரக்குமென்றுள்ளங்கொள்ளப்புகன்றான்கவுதமனே.

**தணிகைப்புராணம்.**

563 திரைசெய்நீர்விழுந்தசிலையினைப்புணையன்றிசசிலைகரையேற்று
தாற், புரைசெய்பவத்தினழுந்தினர்தமைப்புரையொழிந்தவர்

தாமன்றி, நிரைசெய்மேற்கறிசெலுத்தவல்லாரலர்நிகழ்கரிசின
ரற்று, னுரைசெய்பாத்திரமபாத்திரமறிந்தளித்தொழிக்கநற்
பயன்வேட்டோர்.

564 தருக்குறுஞ்செல்வமெய்திமறுநக்கிறைற்பிழைகளெல்லாம்
பெருகுநல்கூரினந்தோபிறருழையிரந்துசேறன்
மரித்தலிற்றுயரமீண்டும்வந்தவர்க்கிரக்கமற்றுக்
கரத்தன்மற்றதனினூங்குக்கடுந்துயரறிவிலார்க்கே.

## விநாயகபுராணம்.

565 இரப்பவன்வாளாதேநரியெனுமெவ்வங்கூறு
திரப்பினையிரப்பனன்றுமிதனினன்றுவதாகு
மிரப்பவனிலனென்றாவியம்பியவெவ்வஞ்சொல்லென்
றிரப்பினும்பிறர்பாற்கூறுதிரக்கமோடுதன்மைந்தா.

566 அருத்தியினிலனென்னுமுனளித்தலுமிலனென்றப்பா
லுரைத்திலனகச்சாலவுதவலுமேற்கின்றானும்
வருத்துறவிலனென்றுமைவழங்கிடவரையில்செல்வம்
பொருத்தலுமொன்றின்றென்றுபுகழ்மிகவிளங்கிநிற்கும்.

567 நலமிகுசெல்வப்பேறுநல்குரவினைக்காத்த
லிலனறமாதிசீர்த்தியிலனெனப்பிறர்சொலெவ்வ
வலனுரைக்கஞ்சியேனும்வறியனாயிலனென்றெள்ளா
தலர்புகழ்பயனும்வேண்டியாக்கையுமளிக்கமைந்தா.

568 சாதல்வந்துறித்தாலுந்தனக்கொருசாதலின்றிப்
பூதலமிறக்குங்காறும்புகழுடம்பிருக்குமந்தக்
கோதறுபுகழின்பாக்கைகொடையினிற்செல்வங்கூர
வாழ்தலையுடையாரன்றேவானரும்வணங்குநீரார்.

569 வைத்துப்பொருளைத்தானுகரான்வழங்கானிருந்துஞ்செத்தானே
செத்தபின்னரென்செய்வான்றீயார்கொள்வரீட்டுநலான்
மெத்தும்வருத்தமேயன்றிவேறென்றில்லையாதலினாற்
பொத்துமவெறுக்கைநன்றியுறல்புசித்துவழங்கலேயாகும்.

## திருக்கூவப்புராணம்.

570 மனைகடோறுமுற்றிரந்திடுகபாலியுண்மகிழ
வனைகமால்விடையூர்ந்துவந்தெளிதினிலருளக்
கனைகருங்கடலுலகினிற்செய்வது கருதின்
வினைகடீர்ந்திடுதானமேயன்றிவேறுளதோ.

571 இகத்தினன்கொடைப்பெருமையையறிந்துளோரில்லென்
றகத்தினுமுமுரைசெயாரவரிதாகத்
தொகுத்தவோர்பொருணல்குவரென்பதென்றுணிந்து
மிகுத்தவாவியுங்கொடுப்பரால்வேண்டுமுன்விரும்பி.

## காசிகண்டம்.

572 மூகனெனினோன்றும்பிரிபின்மற்றொன்றுமொழிபவர்விழைவுறு
தூத, ரகன்றகேள்வியிலாருமாகதுவர்களரும்பொருள்
கவருநர்தூர்த்தர், புகலநன்றிமைபுரிபவர்மல்லர்செருக்கினர்
புன்றொழிற்றீயோ, ரிகழ்தருமினையோரொன்பதுபெயர்க்கு
மீந்திடல்பழுதெனவிசைப்பார்.

573 மாண்புடையாளர்கேண்மையர்தத்தம்வழிமுறையொழுக்கினி
லமர்ந்தோர், சேண்படுநிரப்பினெய்தினோர்புரப்போர்த்
தீர்ந்தவர்தந்தைதாய்குரவர், காண்டகுமுதவிபுரிந்துளோ
ரினையோரொன்பதின்மருமுளங்களிப்ப, வேண்டுறுநிதிய
மளிப்பின்மற்றொருவேகோடியாமெனமறைவிளம்பும்.

## பகவற்கீதை.

574 *முன்செய்காரியப்பொருட்டுமின்றியேமுடித்திதனாற்
பின்பொருநற்பொருள்விளையுமென்பதுவும்பேணாதே
நன்குடையகாலத்தேநல்விடத்தேநல்லவர்க்குத்
தன்பொருளைக்கொடுக்குமதுசாத்துவிகதானமே.

575 *கொண்டுசெயத்தகுங்கருமமெனுங்குறிப்பொன்றின்றியே
பண்டுசிலர்செய்ததற்காப்பரிவோடுபண்ணினவு
மூண்டிதனான்மேல்விளைவென்றுணர்வோடிச்செய்வனவு
மீண்டிசையுநிறைபுகழாயிராசதமாந்தானமே,

576 *வாயாததொருபொருளை வழங்காதகாலத்தே
யேயாதநிலத்திடையேயிழிந்தகுலத்தவர்களுக்கே
யாயாதவறிவினொடுமெப்பிரியத்தொடுங்கொடுத்தல்
சாயாதபெருந்திறலோய்தாமதமாந்தானமே.

### பட்டினத்தடிகள்திருப்பாடல்.

577 பிறக்கும்பொழுதுகொடுவந்ததில்லைப்பிறந்துமண்மே
லிறக்கும்பொழுதுகொடுபோவதில்லையிடைநடுவிற்
குறிக்குமிச்செல்வஞ்சிவனறந்ததென்றுகொடுக்கறியா
திறக்குங்குலாமருக்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே.

578 நாயாய்ப்பிறந்திடினல்வேட்டையாடிநயம்புரியுந்
தாயார்வயிற்றினராய்ப்பிறந்துபின்சம்பன்னராய்க்
காயாமரமும்வறளாங்குளமுங்கல்லாவுமென்ன
வீயாமனிதரையேன்படைத்தாய்கச்சியேகம்பனே.

579 முற்றொடர்பிற்செய்தமுறைமையால்வந்தசெல்வ
மிற்றைநாட்பெற்றோமென்றெண்ணுதுபாழ்மனமே
யற்றவர்க்குமீயாமலரன்பூசையோராமற்
கற்றவர்க்குமீயாமற்கண்மறந்துவிட்டனையே.

### நன்னெறி.

580 பிறர்க்குதவிசெய்யார்பெருஞ்செல்வம்வேறு
பிறர்க்குதவியாக்குபவர்பேறும்—பிறர்க்குதவி
செய்யாக்கருங்கடனீர்சென்றுபுயன்முகந்து
பெய்யாக்கொடுக்கும்பிறர்க்கு.

581 எந்தைநல்கூர்ந்தானிரப்பார்க்கீந்தென்றவன்
மைந்தர்தம்மீகைமறுப்பரோ—பைந்தொடீ
நின்றுபயனுதவிநில்லாவரம்பையின்கீழ்க்
கன்றுமுதவுங்கனி.

### நீதிநெறிவிளக்கம்.

582 வள்ளன்மையில்லாதான்செல்வத்தின்மற்றையோ
னல்குரவேபோலுநனிநல்ல—கொள்கொன்னே
யருளிலனன்பிலன்கண்ணறையனென்று
பலராலிகழப்படான்.

### இராமாயணம்.

583 வெள்ளியையாதல்விளம்பினைமேலோர்
வள்ளியாகவழங்குவதல்லா
லெள்ளுவவென்சிலவின்னுயிரேனுங்
கொள்ளுதறீதுகொடுப்பதுநன்றால்.

584 மாய்ந்தவர்மாய்ந்தவரல்லர்கண்மாயா
தேந்தியகைகொடிரந்தவரெந்தாய்
வீந்தவரென்பவர்வீந்தவரேனு
மீந்தவரல்லதிருந்தவர்யாரே.

### குசேலோபாக்கியானம்.

585 ஒருசிறுதருமமேனுமுளுற்றிடாதிரப்போர்வந்து
தருநிகர்கரத்தாயென்றுசாற்றினுங்கொள்ளாராகிக்
கருணைசற்றின்றியெல்லைகடந்திடத்துறந்துமீள்வர்
மருவுபல்கிளையுமோம்பார்வளம்படைத்தென்பெற்றாரால்.

### புறநானூறு.

586 ஒருதிசையொருவனையுள்ளிநாற்றிசைப்
பலரும்வருவர்பரிசின்மாக்கள்
வரிசையறிதலோவரிதேபெரிது
மீதலெளிதேமாவண்டோன்ற
லதுநற்கறிந்தனையாயிற்
பொதுநோக்கொழிமதிபுலவர்மாட்டே.

587 மன்னுவுலகத்துமன்னுதல்குறித்தோர்
தம்புகழ்நிறீஇத்தாமாய்ந்தனரே
துன்னருஞ்சிறப்பினுயர்ந்தசெல்வ
ரின்மையினிரப்போர்க்கீஇயாமையிற்
றொன்மைமாக்களிற்றொடர்பறியலரே,

588 தெண்கடல்வளாகம்பொதுமையின்றி
வெண்குடைநிழற்றியவொருமையோர்க்கு
நடுநாள்யாமத்தும்பகலுந்துஞ்சான்

கடுமாப்பார்க்குங்கல்லாவொருவற்கு
முண்பனநாழியுடுப்பனவிரண்டே
பிறவுமெல்லாமோரொக்குமே
செல்வத்துப்பயனேயீதல்
துய்ப்பேமெனினேதப்புநபலவே.

589* ஒல்லுவதொல்லுமென்றலும்யாவர்க்கு
மொல்லாதில்லெனமறுத்தலுமிரண்டு
மாள்வினைமருங்கிற்கேண்மைப்பாலே
யொல்லாதொல்லுமென்றலுமொல்லுவ
தில்லெனமறுத்தலுமிரண்டும்வல்லே
யிரப்போர்வாட்டலன்றியும்புரப்போர்
புகழ்குறைபடூஉம்வாயிலத்தை.

590 *கடவுளாலத்துத்தடவுச்சினைப்பல்பழ
நெருநலுண்டனமென்றுபின்னுஞ்
செலவானாவேகலிகொள்புள்ளின
மனையர்வாழியோவிரவலரவரைப்
புரவெதிர்கொள்ளும்பெருஞ்செய்யாடவ
ருடைமையாகுமவருடைமை
யின்மையாகுமவரின்மையே.

591 *கழிந்ததுபொழிந்தெனவான்கண்மாறினுந்
தொல்லதுவிளைந்தெனநிலம்வளங்கரப்பினு
மெல்லாவுயிர்க்குமில்லால்வாழ்க்கை
யின்னுந்தம்மெனவெம்மனோரிரப்பின்
முன்னுங்கொண்டிரெனநும்மனோர்மறுத்த
லின்னாதம்மவியறேரண்ண
லில்லதுநிரப்பலாற்றாதோரினு
முள்ளிவருநர்கையிழப்போரே
யனையையுமல்லைநீயேயொன்னா
ராரெயிலவர்கட்டாகவுநுமதெனப்
பாண்கடனிறுக்கும்வள்ளியோய்
பூண்கடனெந்தைநீயிரவலர்புரவே.

592 *ஈயெனவிரத்தலிழிந்தன்றதனெதி
ரீயேனென்றலதனினுமிழிந்தன்று
கொள்ளெனக்கொடுத்தலுயர்ந்தன்றதனெதிர்
கொள்ளேனென்றலதனினுயர்ந்தன்று
தெண்ணீர்ப்பரப்பினிமிழ்திரைப்பெருங்கட
லுண்ணாராகுபநீர்வேட்டோரே
யாவுமாவுஞ்சென்றுணக்கலங்கிச்
சேறொடுபட்டசிறுமைத்தாயினு
முண்ணீர்மருங்கினதர்பலவாகும்
புள்ளும்பொழுதும்பழித்தலல்லதை
யுள்ளிச்சென்றோர்ப்பழியலரதனாற்
புலவேன்வாழியரோரிவிசும்பிற்
கருவிவானம்போல
வரையாதுசுரக்கும்வள்ளியோய்நின்னே.

புறப்பொருள்வெண்பாமாலை.

593 முல்லைக்குத்தேரு மயிலுக்குப்போர்வையு
மெல்லைநீர்ஞாலத்திசைவிளங்கத்—தொல்லை
யிரவாமலீந்தவிறைவர்போனீயுங்
கரவாமலீகைகடன்.

594 ஆயாதறிவயர்ந்தல்லாந்தகலிடத்து
மாயாநிதியமனைச்செறீஇ—யீயா
திறுகப்பொதியன்மினின்றுநாளைக்
குறுகவருமோகூற்று.

சீவகசிந்தாமணி.

595 மாசித்திங்கண்மாசினசின்னத்துணிமுள்ளி
னூசித்துன்னமூசியவாடையுடையாகப்
பேசிப்பாவாய்பிச்சையெனக்கையகலேந்திக்
கூசிக்கூசிநிற்பர்கொடுத்துண்டறியாதார்.

## பெரும்பொருள்விளக்கம்.

596 மின்னூந்தமனியமும்வெற்றிரும்புமோரினமாய்ப்
பொன்னின்பெயர்படைத்தாற்போலதே—கொன்னே
யொளிப்பாருமக்களாயொல்லுவதாங்கே
யளிப்பாருமக்களாமாறு.

## நாலடியார்.

597 உண்ணானொளிநிறானோங்குபுகழ்செய்யான்
றுன்னருங்கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான்பொருள்காத்திருப்பானேல்அஅ
விழந்தானென்றெண்ணப்படும்.

598 உடாஅதுமுண்ணாதுந்தம்முடம்புசெற்றுங்
கெடாஅதநல்லறமுஞ்செய்யார்—கொடாஅது
வைத்தீட்டினாரிழப்பர்வான்றோய்மலைநாட
வுய்த்தீட்டுந்தேனீக்கரி.

599 †உறக்குந்துணையதோராலம்வித்தீண்டி
யிறப்பநிழற்பயந்தாஅங்—கறப்பயனுந்
தான்சிறிதாயினுந்தக்கார்கைப்பட்டக்கால்
வான்சிறிதாப்போர்த்துவிடும்.

600 முன்னரேசாநாண்முனிதக்கமூப்புள
பின்னரும்பீடழிக்குநோயுள—கொன்னே
பரவன்மின்பற்றன்மின்பாத்துண்மின்யாதுங்
கரவன்மின்கைத்துண்டாம்போழ்து.

601 ஏற்றகைமாற்றாமையென்னுந்தாம்வரையா
தாற்றாதார்க்கீவதாமாண்கடன்—ஆற்றின்
மலிகடற்றண்சேர்ப்பமாறீவார்க்கீதல்
பொலிகடனென்னும்பெயர்த்து.

---

† உறக்கல் - விரலாற்கிள்ளுதல்.

602 துய்த்துக்கழியான்றுறவோர்க்கொன்றீகலான்
வைத்துக்கழியுமடவோனை — வைத்த
பொருளுமவனைநகுமேயுலகத்
தருளுமவனைநகும்.

603 கொடுத்தலுந்துய்த்தலுந்தேற்றா விடுக்குடை
யுள்ளத்தான்பெற்றபெருஞ்செல்வ — மில்லத்
துருவுடைக்கன்னியரைப்போலப்பருவத்தா
லேதிலான்றுய்க்கப்படும்.

604 எனதெனதென்றிருக்குமேழைபொருளை
யெனதெனதென்றிருப்பன்யானுந் — தனதாயிற்
றானுமதனைவழங்கான்பயன்றுவ்வான்
யானுமதனையது.

605 வழங்காதசெல்வரினல்கூர்ந்தாருய்ந்தா
ரிழந்தாரெனப்படுதலுய்ந்தா — ருழந்ததனைக்
காப்புய்ந்தார்கல்லுதலுமுய்ந்தார்தங்கைந்நோவ
யாப்புய்ந்தாருய்ந்தபல.

606 தனதாகத்தான்கொடான்றாயத்தவருந்
தமதாயபோழ்தேகொடா அர் — தனதாக
முன்னேகொடுப்பினவர்கடியார்தான்கடியான்
பின்னையவர்கொடுக்கும்போழ்து.

பழமொழி.

607 வழங்கலுந்துய்த்தலுந்தேற்றாதான்பெற்ற
முழங்குமுரசுடைச்செல்வந் — தழங்கருவி
வேய்முற்றிமுத்துதிரும்வெற்பவஃதன்றோ
நாய்பெற்றதெங்கம்பழம்.

சிறுபஞ்சமூலம்.

608 கழிந்தவைதானிரங்கான்கைவாராநச்சா
னிகழ்ந்தவையின்புறானில்லார் — மொழிந்தவை
மென்மொழியாலுண்ணெகிழ்ந்தீவானேல்விண்ணோரா
லின்மொழியாலேத்தப்படும்.

மூதுரை.

609 *நல்லாரொருவர்க்குச்செய்தவுபகாரங்
கன்மேலெழுத்துப்போற்காணுமே—யல்லாத
வீரமில்லாநெஞ்சத் தார்க்கீந்தவுபகார
நீர்மேலெழுத்திற்குநேர்.

நல்வழி.

610 *சாதியிரண்டொழியவேறில்லைசாற்றுங்கா
னீதிவழுவாநெறிமுறையின்—மேதினியி
லிட்டார்பெரியோரிடாதாரிழிகுலத்தோர்
பட்டாங்கிலுள்ளபடி.

611 *ஆற்றுப்பெருக்கற்றடிசுடுமந்நாளுமவ்வா
றூற்றுப்பெருக்காலுலகூட்டு—மேற்றவர்க்கு
நல்லகுடிப்பிறந்தார்நல்கூர்ந்தாரானாலு
மில்லையெனமாட்டாரிசைந்து.

612 *செய்தீவினையிருக்கத்தெய்வத்தைநொந்தக்கா
லெய்தவருமோவிருநிதியம்—வையத்
தறும்பாவமென்னவறிந்தன்றிடார்க்கின்று
வெறும்பானைபொங்குமோமேல்.

613 *மரம்பழுத்தால்வெளவாலைவாவென்றுகூவி
யிரந்தழைப்பார்யாவருமங்கில்லை—சுரந்தமுதங்
கற்றாதரல்போற்கரவாதளிப்பரே
லுற்றாருலகத்தவர்.

நீதிவெண்பா.

614 *தாமுங்கொடார்கொடுப்பார்தம்மையுமீயாதவகை
சேமஞ்செய்வாருஞ்சிலருண்டே—யேமநிழ
லிட்டுமலர்காய்கனிகளீந்தருளுமாமரத்தைக்
கட்டுமுடைமுள்ளெனவேகாண்.

615 *தானறிந்தோருக்குதவிதன்னாலமையுமெனிற்
றானுவந்தீதறலையாமே—யானதனாற்
சொன்னாற்புரிதலிடைசொல்லியும்பண்ணாண்மறுத்துப்
பின்னாட்புரிவதுவேபின்.

†தனிப்பாடல்.

616 *தண்டாமலீவது தாளாண்மைதண்டி
யடுத்தக்காலீவது வண்மையடுத்தடுத்துப்
பின்சென்றாலீவதுகாற்கூலிபின்சென்றும்
பொய்த்தானிவனென்றுபோமேலவன்குடி
யெச்சமிறுமேலிறு.

திருக்குறள்.

617 நல்லாறெனினுங்கொளறீதுமேலுலக
மில்லெனினுமீதலேநன்று.

618 அற்றாரழிபசிதீர்த்தலஃதொருவன்
பெற்றான்பொருள்வைப்புழி.

619 ஈத்துவக்குமின்பமறியார்கொறாமுடைமை
வைத்திழக்கும்வன்கணவர்.

620 சாதலினின்னாததில்லையினிததூஉ
மீதலியையாக்கடை.

ஆகச் செய்யுள் 63. ஈகை முற்றிற்று.

---

## கஎ-அதி. அருள்.

---

சூதசங்கிதை.

621 அத்திரசத்திரமுகிராதிகளினாலடர்ந்தெதிர்ந்து
னெய்ததொருண்ணின்றெழப்புண்ணிறவுதல்கூடாதம்ம
வெய்ததிரங்கப்பிராணிகளுக்கிடையூறுசெய்திடுவோர்
கொதழலார்வெந்நிரயக்குழிவீழ்வதுண்மையே.

---

† தமிழ்நாவலர் சரிதை.

## தாயுமானவர்பாடல்.

622 எவ்வுயிருமென்னுயிர்போலெண்ணியிரங்கவுநின்
றெய்வவருட்கருணைசெய்யாய்பராபரமே.

623 தம்முயிர்போலெவ்வுயிருந்தானென்றுதண்ணருள்கூர்
செம்மையருக்கேவலென்றுசெய்வேன்பராபரமே.

## நன்னெறி.

624 தங்குறைதீர்வுள்ளார்தளர்ந்துபிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க்கிற்பார்விழுமியோர் — திங்கள்
கறையிருளைநீக்கக்கருதாதுலகி
னிறையிருளைநீக்குமேநின்று.

625 பெரியவர்தந்நோய்போற்பிறர்நோய்கண்டுள்ள
மெரியினிழுதாவரென்க—தெரியிழாய்
மண்டுபிணியால்வருந்துபிறவுறுப்பைக்
கண்டுகலுழுமேகண்.

626 பேரறிஞர்தாக்கும்பிறர்துயரந்தாங்கியே
வீரமொடுகாக்கவிரைகுவார்—நேரிழாய்
மெய்சென்றுதாக்கும்வியன்கோலடிதன்மேற்
கைசென்றுதாங்குங்கடிது.

## இராமாயணம்.

627 ஆவுக்காயினுமந்தணர்க்காயினும்
யாவர்க்கேனுமெளியவர்க்காயினுஞ்
சாவப்பெற்றவரேதகைவானுறை
தேவர்க்குந்தொழுந்தேவர்களாகுவார்.

## சூளாமணி.

628 கற்றவர்கடவுட்டானஞ்சேர்ந்தவர்களைகணில்லா
ரற்றவரந்தளுளாரன்றியுமனையரோர்க்
குற்றநேரிடுக்கண்வந்தாலுதவுதற்குரித்தன்றாயிற்
பெற்றவிவ்வுடம்புதன்னாற்பெறுபயனில்லைமன்னோ.

629 ஆருயிர்யாதொன்றிடருறுமாங்கதற்
கோருயிர்போலவுருகியுயக்கொள்ள
நேரினதுமுடியாதெனினெஞ்சகத்
தீரமுடைமையருளினியல்பே.

## சீவகசிந்தாமணி.

630 தன்னுயிர்தான்பரிந்தோம்புமாறுபோன்
மன்னுயிர்வைகலுமோம்பிவாழுமே
லின்னுயிர்க்கிறைவனாயின்பமூர்த்தியாய்ப்
பொன்னுயிராய்ப்பிறந்துய்ந்துபோகுமே.

## வளையாபதி.

631 உயிர்களோம்புமினூன்விழைந்துண்ணன்மின்
செயிர்கணீங்குமின்செற்றமிகந்தொரீஇக்
கதிகணல்லுருக்கண்டனர்கைதொழு
மதிகள்போலமறுவிலர்தோன்றுவீர்.

## பெருந்தேவனார்பாரதம்.

632 இறப்பநுமக்கடுத்தவெவ்வநோயாவும்
பிறர்க்குமஃதாமென்றுகொண்மி—னுறக்கருதி
யெவ்வாறுமக்குறுதியெண்ணுதிர்நீரெல்லார்க்கு
மவ்வாறேயெண்ணலறம்.

## சிறுபஞ்சமூலம்.

633 பொருளுடையான்கண்ணதேபோகமறனு
மருளுடையான்கண்ணதேயாகு—மருளுடையான்
செய்யான்பழிபாவஞ்சேரான்புறமொழியு
முய்யான்பிறர்செவிக்குய்த்து.

## பதிபசுபாசவிளக்கம்.

634 கலையெலாமுணர்ந்தானேனுங்கசடறத்தெளிந்தானேனு
மலையெனவுயர்ந்தானேனுமனமயலகன்றானேனு
முலகெலாம்புகழப்பல்லோர்க்குதவியகையனேனு
மிலகியவிரக்கமின்றேலெழுநரகடைவனன்றே.

திருக்குறள்.

635 நல்லாற்றானாடியருளாள்கபல்லாற்றாற்
றேரினுமஃதேதுணை.

636 அருள்சேர்ந்தநெஞ்சினார்க்கில்லையிருள்சேர்ந்த
வின்னாவுலகம்புகல்.

637 அருளில்லார்க்கவ்வுலகமில்லைபொருளில்லார்க்
கிவ்வுலகமில்லாகியாங்கு.

638 பொருளற்றார்பூப்பரொருகாலருளற்றா
ரற்றார்மற்றாதலரிது.

ஆகச் செய்யுள் 18. அருள்முற்றிற்று.

---

## கஅ-அதி. கொல்லாமை.

---

இலிங்கபுராணம்.

639 *ஒருயிர்தன்னைக்கோறல்செய்தோர்களுயிரினையவ்வுயிரெய்திச்
சோர்வுறக்கொல்லுமாதலாற்கோறலாதன்மறற்றொழிந்திட
வேண்டும், தேரிடிற்சிவனாலயத்தினோர்புழுவாயினுமுயிர்
செகுத்தவர்தினைசெய், வார்கடலுலகமுழுவதுஞ்செகுத்த
பாவத்தையடைகுவரன்றே

உபதேசகாண்டம்.

640 மாதிரஞ்சுழல்புட்குலம்படுப்பவர்மறிதிரைபொருநீர்வாழ்
சாதிதூண்டிலிற்படுப்பவாரணரியிற்சங்கிலிமுடக்கேற்றி
மீதுகற்றறிவிட்டமிட்டசைத்தவர்கீழ்ப்படவெருளித்தீ
யோதுநெய்சொரிந்தெழுப்புவாவருடம்புருகியநிணஞ்சோர.

சிவதருமோத்தரம்.

641 உண்ணவூனைவிரும்பியுயிர்க்கொலை
யெண்ணுவான்கொலைகண்டிரங்கான்கொலை
பண்ணுவாரைத்தடுத்தப்பகர்கிலா
னண்ணுவானிவரோடொனால்வரும்.

வருந்துமேபதம்வைப்பின்மரிக்குமே
பொருந்துமண்ணிற்புழுக்கணமென்றுளம்
வருந்தியேபதமெல்லெனவைத்திடா
தருந்தவத்தைப்பிரிந்தவராக்கனும்.

சிவஞானதீபம்.

*கொலையாதிநெறியகன்றஞானந்தானே
கூறரியமேலானஞானமாகுங்
கொலையாதியகன்றொழுகுந்தவங்கடாமே
குற்றமிலாநற்றவமென்றுரைக்குநூலுங்
கொலையாதியகற்றியநல்லறங்கடாமே
குவலயத்திலொப்பரியவறங்களாகுங்
கொலையாதியகன்றபெறுஞ்செல்வந்தானே
கூறினுயிர்க்கிதமானவாழ்வதாமே.

பதிபசுபாசவிளக்கம்.

*கொலையிலானுதவுமன்னங்கூறிற்போமுதமாகுங்
கொலையுளானுதவுமன்னங்கூறில்வல்விடமதாகும்
புலையர்தமனையிலுண்போன்புலையனுமாறுபோலக்
கொலைஞர்தமனையிலுண்போன்கொலைஞனேயாவனன்றே.

சிவ-இதோபதேசம்.

*கொல்லாதான்றன்மந்தன்மேற்கூறின்மற்றில்லைதன்மங்
கொல்லாதான்செல்வந்தன்மேற்குவலயத்தில்லைசெல்வங்
கொல்லாதான்றுறவுதன்மேற்கொள்ளலாந்துறவுமில்லை
கொல்லாதான்ஞானந்தன்மேற்கூர்த்தமெஞ்ஞானமில்லை.

*தன்னைத்தானுக்கவெண்ணித்தான்பிறிதொன்றைக்கொல்வான்
றன்னைத்தான்கொல்லுகின்றான்றன்னுயிர்விடுத்துமொன்று
தன்னைத்தான்கொல்லாதான்காண்டன்னைமுன்னோக்குகின்றான்
றன்னைத்தானோக்குகின்றதத்துவமிட்டமீதால்.

தாயுமானவர்பாடல்.

கொல்லாவிரதங்குவலயமெல்லாமோங்க
வெல்லார்க்குஞ்சொல்லுவதென்னிச்சைபராபரமே.

கொல்லாவிரதமொன்றுகொண்டவரேநல்லோர்மற்
றல்லாதார்யாரோவறியேன்பராபரமே.

சூளாமணி.

649 எல்லாவிரதமியல்பொக்குமாயினு
மல்லாவிரதமனையாயவர்கட்குக்
கொல்லாவிரதங்குடைமன்னவாமெனின்
வெல்லாவகையில்லைவீங்கெழிற்றோளாய்.

யசோதரகாவியம்.

650 *யானுயிர்வாழ்தலெண்ணியெளியவர்தம்மைக்கொல்லின்
வானுயரின்பமேலால்வருநெறிதிரியுமன்றி
யூனுயிரின்பமெண்ணியெண்ணமற்றொன்றுமின்றி
மானுயர்வாழ்வுமண்ணினைமறித்திடுமியல்பிற்றன்றே.

சீவகசிந்தாமணி

651 சிலையினான்மாக்கள்கொன்றுசெழுங்கடல்வேட்டமாடி
வலையினான்மீன்கள்வாரிவாழுயிர்க்கூற்றமான
கொலைஞரைக்கும்பிதன்னுட்கொந்தழலழுத்தியிட்டு
நலிகுவர்நாளுநாளுநரகரைநாமவேலோய்.

வளையாபதி.

652 உலகுடன்விளங்கவருசீர்த்திநிலைகொள்ளி
னிலையில்கதிநான்கினிடைநின்றுதடுமாறு
மலகிறுயாஞ்சினுயிரஞ்சவரும்வஞ்சக்
கொலையொழிமினென்றுநனிகூறினாரறிந்தார்.

பெருந்தேவனார் பாரதம்.

653 இந்நோய்நமக்குண்டென்றெண்ணாதேயெவ்வுயிரு
முன்னோவக்கொன்றுண்ணுமூர்க்கர்தா—மெந்நோவும்
பண்ணப்படுநரகிற்பாவிகளிற்பாவிகளென்
றெண்ணப்படுவாரிசைந்து.

654 கொன்றான்கொலச்சொன்னான்கூசவறுத்தானட்டான்
றின்றான்விலக்கிடான்சென்றொன்று—கொன்றவனைக்
குட்டவன்கணிட்டெரிக்கவெந்துகொடுவெந்நரகிற்
பட்டழன்றுவீழ்வார்பதைத்து.

655 ஆனையடியிலடங்காவடியில்லை
தானதுபோனிற்கின்றதன்மைதா—னூனுயிரைக்
கொல்லாவறத்தின்கொழுநிழற்கேயுள்ளடங்கு
மெல்லாவறமுமிசைந்து.

### சிறுபஞ்சமூலம்.

656 கொன்றான்கொலையையுடம்பட்டான்கோடாது
கொன்றதனைக்கொண்டான்கொழிக்குங்கால்—கொன்றதனை
யட்டானடவுண்டானைவரினுமேலுளவாக்
கட்டெறிந்தபாவங்கருது.

### †தனிப்பாடல்.

657 பிரிவறக்கொன்றுதின்னுங்கடைப்படும்பிறப்புநாரை
வரனுறுதேவராகிவான்றொழவிருப்பக்கண்டோர்
கருதுதிரொன்றும்பொல்லாக்கடையராயினுங்கொல்லாம
லரனைவந்திப்பரேல்வானுள்வதற்கையமின்றே.

### திருக்குறள்.

658 அறவினையாதெனிற்கொல்லாமைகோறல்
பிறவினையெல்லாந்தரும்.

659 நல்லாறெனப்படுவதியாதெனின்யாதொன்றுங்
கொல்லாமைசூழுநெறி.

660 கொல்லாமைமேற்கொண்டொழுகுவான்வாழ்நாண்மேற்
செல்லாதுயிருண்ணுங்கூற்று.

661 தன்னுயிர்நீப்பினுஞ்செய்யற்கதான்பிறி
தின்னுயிர்நீக்கும்வினை.

ஆகச்செய்யுள் 23. கொல்லாமை முற்றிற்று.

---

† பழையதிருவிளையாடல்.

## ௧௬.- அதி. புலான்மறுத்தல்.

---

### திருமந்திரம்.

662 பொல்லாப்புலாலைநுகரும்புலையரை
யெல்லாருங்காணவியமன்றன்றூதுவர்
செல்லாகப்பற்றியதீவாய்நரகத்தின்
மல்லாக்கத்தள்ளிமறித்துவைப்பாரே.

### சிவஞானதீபம்.

663 எவ்வுயிரும்பராபரன்சந்நிதியதாகு
மிலங்குமுயிருடலனைத்துமீசன்கோயி
லெவ்வுயிருமெம்முயிர்போலென்றுநோக்கி
யிரங்காதுகொன்றருந்துமிழிவினோரை
வவ்வியமதூதருந்தண்டஞ்செய்து
வல்லிரும்பையுருக்கியவர்வாயில்வார்த்து
வெவ்வியதீயெழுநரகில்வீழ்த்திமாறு
வேதனைசெய்திடுவரெனவோதுநூலே.

### பட்டினத்தடிகள் பாடல்.

664 சடக்கடத்துக்கிரைதேடிப்பலவுயிர்தன்னைக்கொன்று
விடக்கடித்துக்கொண்டிறுமாந்திருந்துமிகமெலிந்து
படக்கடித்தின்றுழல்வார்கடமைக்காம்பற்றிநம
னிடக்கடிக்கும்பொழுதேது செய்வார்கச்சியேகம்பனே

### வளையாபதி.

665 *பிறவிக்கடலகத்தாராய்த்துணரிற்
றெறுவதிற்குற்றமிலார்களுமில்லை
யறவகையோராவிடக்குமிசைவோர்
குறைவின்றித்தஞ்சுற்றந்தின்றனராவர்.

### நாலடியார்.

666 அக்கேபோலங்கையொழியவிரலழுகித்
துக்கத்தொழுநோயெழுபவே—யக்கா
லலவனைக்காதலித்துக்கான்முறித்துத்தின்ற
பழவினைவந்தடைந்தக்கால்.

### நான்மணிக்கடிகை.

667 *காப்பவர்க்குச்செல்சார்கவிழ்தலெஞ்ஞான்று
மிரப்பவர்க்குச்செல்சாரொன்றீவோர்—பரப்பமைந்த
தானைக்குச்செல்சார்தறுகண்மையூனுண்டல்
செய்யாமைசெல்சாருயிர்க்கு.

### அறநெறிச்சாரம்.

668 *சொன்றானுகருங்கொடுமையையுண்ணினைந்
தன்றேயொழியவிடுவானே—லென்று
மிடுக்கணையுண்டோவில்வாழ்க்கைக்குள்ளே
படுத்தானுக்தன்னைத்தவம்.

### தனிப்பாடல்.

669 ஒருமீன்புலவுவாய்மடுப்பினொழியுந்தசைகளனைத்தினையும்
பரிவானுகர்ந்தோர்வீழ்கின்றபாழ்வெந்நரகிற்படிவரெனு
மருமாமறையின்பொருடேர்ந்தோவந்தாமரைநாண்மலர்
பொதுளும், விரிநீர்வாவிபயின்மீன்கள்விழுங்காதுலவும்
புள்ளினமே.

670 முன்னைவேதனையைவிட்டுமுற்றியவறிஞர்நெஞ்சிற்
பின்னொருவிகாரமின்றியிருப்பரிப்பிணப்புலாலை
நன்னெறியறிந்தநாமுநாவழியொழுகிக்கெட்டேந்
தின்னவேநயந்தேநம்போற்றீங்குளாருண்டோவின்றே.

671 அருமகத்தன்றியூன்சுவைத்துடலம்வீக்குவோனதற்குடன்
படுவோன், கருவியிற்குறைத்தோன்பகர்ந்துளோன்
கொணர்ந்தோன்வியந்துளோன்கடிகெனவேவுந், திருவிலியதனை
யட்டவனிவர்களெண்மருந்தீநரகடைவர், பரிவினான்விடுத்
தோர்களோடறம்புரிமகம்புரிபலன்பெறுகுவரால்.

672 புழுவுந்தசையும்வெண்ணிணமும்பொதிந்தகுரம்பைவீக்கு
தற்கே, கழியூனுகர்ந்தோர்கொடுநரகிற்கற்பகாலங்கிடந்தழுந்தி

விழைவின்முன்னர்த்தானுகர்ந்தவிலங்குமவர்தம்மெய்த்தசையை
யழிவெம்பசியாற்பறித்தருந்துமென்னும்பான்மையறிந்தேயோ.

673 கொன்றுவிலங்கின்றசைநுகருங்கொடுமையோரவ்விலங்கினுட
றுன்றுமயிரெத்துணையாமத்துணையகாலம்வெந்நரகி
னென்றிநுகர்வாய்ப்புழுவொழுகவுழப்பரென்கையுணர்ந்தேயோ
கன்றுசினவெங்கொடுவிலங்கும்புலவூன்றின்னக்கருதாவால்.

674 மருவாணைப்பெண்ணாக்கியொருகணத்திற்கண்விழித்துவயங்கு
மப்பெண், ணுருவாணையுருவாக்கியிறந்தவரையெழுப்புகின்ற
வுறவனேனுங், கருவாணையுறவிரங்காதுயிருடம்பைக்கடிந்
துண்ணுங்கருத்தனேலெங், குருவாணையெமதுசிவக்கொழுந்
தாணைஞானியெனக்கூறொணாதே.

675 இட்டவிரையாசையாலெய்தியமீன்றூண்டில்வாய்ப்
பட்டதெனநாவிரசம்பார்த்துலகர்—கெட்ட
விருளாருலகத்திலெய்துவர்களென்று
ரருளாருநெஞ்சத்தவர்.

676 நாய்கழுகுகூகைநரிகாகமீயெறும்பு
பேயிவைகளாவிபிரிந்தவூ—னேயமொடு
தானருந்தலல்லாதுசற்காரியமனிதர்
தானருந்தலாவதோதான்.

677 பிணங்கிடக்கநானுகரேனென்றுநீபேசுங்
குணங்கிடக்கவேண்டியதென்கூறாய்—பிணத்தைக்
கலத்திலேயிட்டுக்கலந்துநாவாரப்
புலத்தினூற்றின்றாய்புகல்.

678 அருந்திச்சின்னாளுனைதன்மேல்விடுக்கின்
வரும்பயனேதென்னின்மழலை—திருந்தறிவிற்
பித்தரறிவுபிறங்கியபோதம்மலத்தைத்
துய்த்திடுவதுண்டாயிற்சொல்.

679 ஈவானேதெய்வமிரப்பேயிளிவரவென்
றுய்வானேநூலின்பயனறிவான் —பேய்வாழுங்
காடேகாப்பவர்தம்மில்லங்கடும்புலையன்
வீடேவிடக்குண்பான்வீடு.

680 தம்மினுமுயர்ந்தோர்கீழோர்தமதிலத்†தறலுண்டாரே
லம்மவங்கவருங்கீழென்றவர்மனைப்புனலுமுண்ணு
விம்மனிதர்சடாஞ்சீச்சியீனர்தம்மலத்தையுண்டு
விம்முடற்பன்றியாதிவிரும்பியுண்டுவப்பதென்னே.

681 பறையரைப்பறையரென்றுபறைந்திடுமனிதர்கேளீர்
பறையர்தம்மலத்தைத்தின்றபன்றியைப்புசிப்பதென்னே
கறையதேயாகுமந்தக்கறிதனைக்கலத்தினிட்டு
மறையவேவைத்துத்தின்னுமனிதரேபறையர்கண்டீர்.

682 புலையென்னும்புலைதீரப்புனலென்னும்புனன்மூழ்கி
யலைகின்றமுழுமூடரறிவென்னவறிவென்ன
புலையன்றன்மலமுண்ணுமெமையுண்ணும்புலையர்க்குக்
குலமென்னநலமென்னகூகூவென்றனகோழி.

683 உண்டிடுஞ்சோற்றினூடேயோர்மயிரெறும்பியாதுங்
கண்டுமுன்பருந்திலாய்முன்பயின்றதுங்கான்றிட்டாயான்
மண்டனிற்பன்றியாதிமலத்தைமுன்பழக்கத்தாலுட்
கொண்டிடவிரும்புமாறென்கூறுதியறிவிலாதோய்.

684 ஊறுகாயாதிதன்னிலுதித்ததோர்புழுக்கண்டாயேல்
வேறவேவீசிச்சிந்தைமெய்மிகக்குலைந்துற்றுயா
றூறுமுன்புழுத்ததேனுநனிமிகவிரும்பியுள்ளந்
தேறிநீயுண்டவாறென்செப்புதிதெளிவிலாதோய்.

685 தகருனதெதிரேசிந்தத்தான்றெறித்திட்டகோழை
புகலுமுன்மீதிற்றுக்கப்பொருதுளங்குலைந்துற்றுயாற்
பகர்தருமவற்றினூனைப்பற்றியமுளையோடு
மகமகிழ்ந்தயின்றவாறென்னறைகுதியறிவிலாதோய்.

---

† அறல்-நீர்.

686 கொன்றிலாரைக்கொலச்சொலிக்கூறினர்
தின்றிலாரைத்தினச்சொலித்தெண்டித்தார்
பன்றியாய்ப்படியிற்பிறந்தேழ்நா
கொன்றுவாராரனுணையிதுண்மையே.

687 கொலையஞ்சாதொருவற்கஞ்சிக்கொன்றுளோர்
சிலர்சொல்லஞ்சிப்புலாலினைத்தின்றுளோர்
நிலையதாய்நரகத்திடைநிற்பரொன்
றலகிலான்மறையாகமமோதுமே.

688 தவகதியைவேண்டுபவருயிரில்சடந்தினறவிர்கதவமழித்தாங்
கவகதியைவேண்டுபவர்கழுகுநரிசெயுந்தொழிலையாராநாட
சிவகதியுந்திருமாறன்றிகழ்கதியுமயன்கதியுந்தெய்வலோகத்
துவகதியுமிகந்தெரியுந்துர்க்கதியின்வீழ்வர்பரஞ்சோதியாணை.

689 மைந்தர்கண்மாதர்கள்கோசபகமாதிமழவுருவின்மறைத்திலே
மென், றிந்தவுடைகொடுமறைப்பதெற்றினுக்கென்றெளிர்
பருவத்தெறிகலார்தஞ், சிந்தையினுண்மிகுத்தணிவராதலினா
னுணவைமுனந்தின்றாயேனு, நிந்தைசெய்திப்பொழுதகற்றத்
தருமிலையேற்கெடுவாயுன்னினைவென்றுமே.

690 ஆசுறுமான்மவிச்சையடக்குதலாகாதென்று
மாசுறுமூனைத்துய்த்துமாதுயர்நரகத்தாழ்வீர்
பேசியதந்தைதாய்மேற்பெருகியவாசைகூரிற்
கூசிடாதவர்கடம்மைக்கூடுதல்குணமோகூறீர்.

### திருக்குறள்.

691 தன்னூன்பெருக்கற்குத்தான்பிறிதூனுண்பா
னெங்ஙனமாளுமருள்.

692 உண்ணாமையுள்ளதுயிர்நிலையூனுண்ண
வண்ணாத்தல்செய்யாதளறு.

693 தினற்பொருட்டாற்கொல்லாதுலகெனின்யாரும்
விலைப்பொருட்டாலூன்றருவாரில்.

694 உண்ணாமைவேண்டும்புலாஅல்பிறிதொன்றன்
புண்ணதுணர்வார்ப்பெறின்.

695 அவிசொரிந்தாயிரம்வேட்டலினொன்ற
னுயிர்செகுத்துண்ணாமைநன்று.

696 கொல்லான்புலாலைமறுத்தானைக்கைகூப்பி
யெல்லாவுயிருந்தொழும்.

ஆகச்செய்யுள் 35. புலான்மறுத்தல் முற்றிற்று.

---

## ௨௰-அதி. மனம்.

---

### விநாயகபுராணம்.

697 இல்லினிருந்தேயைம்பொறியுமெல்லாநுகருங்காலத்துஞ்
செல்லும்வழிமெய்ம்மொழிமனத்தைச்செல்லாதடக்கினெழு
நல்லபயனேயாமேனைநல்லவினைதீவினையாகா [பிறப்பு
வல்லலறுக்குமறக்கடவுளடிக்குமமாருலகுறுமே.

### காசிகண்டம்.

698 கற்றதங்கல்வியுங்கடவுட்பூசையு
நற்றவமியற்றலுநவையிறானமு
மற்றுளவறங்களுமனத்தின்பாலழுக்
கற்றவர்க்கேபயனளிக்குமென்பரால்.

### பிரபுலிங்கலீலை.

699 துயிலையின்பெனச்சொல்லுதலிந்தியத்
தியலுநெஞ்சமிலாமையினாலன்றே
பயிலுநெஞ்சம்பார்துதிரிதருஞ்
செயலிலில்லைச்சிறிதுஞ்சுகமரோ.

700 மனமொருத்தன்வசப்படுமேலவன்
பினைவருத்தும்பிறப்பையடைந்திடான்

மனமொருத்தன்வசப்படாதோடுமே
னனிபிறப்பிடைநாளுஞ்சுழலுமே.

701 அறவினைக்குமரும்பொருளின்பொடு
பெறுவதற்கும்பெருங்கல்விகற்றுயர்
விறலினுக்குநல்வீரந்தனக்குமொண்
டிறலினுக்குந்துணைமனமென்பவே.

702 நல்லசெய்துநாரையுயர்த்தவு
மல்லசெய்தங்களற்றிடையாழ்ப்பவும்
வல்லதிந்தமனமலதையனே
யில்லையென்னவியம்புமறையெலாம்.

703 கெடுக்கவல்லதுங்கெட்டவர்தங்களை
யெடுக்கவல்லதுமிம்மனமென்றதை
யடக்கவல்லவனைபவக்கடல்
கடக்கவல்லவனுவன்கடிதரோ.

704 ஆயின்மிக்கோரியசெயலெலா
நேயமிக்கமனத்தைநிறுத்தல்காண்
வாயுநிற்கமனமுமுடனிற்குந்
தோயநிற்குறினிற்குந்துரும்புமே.

705 தூடும்பொன்னுமுறவும்பகையுமோர்
கேடுஞ்செல்வமுங்கீர்த்தி புநிந்தையும்
வீடுங்கானமும்வேறறநோக்குதல்
கூடுந்தன்மைகொளுமனநன்மனம்.

பிரபோதசந்திரோதயம்.

706 *பாலகன்வருடும்போது பால்சுரந்துடையகொங்கை
மாலுறமுயங்குங்கேள்வன்வருடுங்கான்மயக்குநீரான்
மேலவர்தொழிலுங்கீழோர்செய்கையும்வேறன்றேனுங்
காலமனத்தின்பான்மைவேறுறச்சாருமன்றே.

ஞானவாசிட்டம்.

707 *இன்பமிதாமின்பமிதாமென்றவெல்லாமெரியெனநஞ்செனநினைக வேற்றத்தாழ்வாந், துன்புறுபோகம்பலவாற்றேர்ந்துநெஞ்சிற் றேயாமலெளிதருந்திற்சுகமேயாகும், வன்புபயின்மனத்தோற்ற நாசமாகுமனத்தினதுநாசமேமகத்தாந்தோற்ற, நன்பரமஞானிக ணெஞ்சிறந்துபோகூநடைவிலங்காமறிவினர்க்குநவைகூர் நெஞ்சம்.

தாயுமானவர்பாடல்.

708 சொல்லானதிற்சற்றும்வாராதபிள்ளையைத்
தொட்டில்வைத்தாட்டியாட்டித்
தொடையிலே க்கிள்ளல்போற்சங்கற்பமொன்றிற்
றொடுக்குந்தொடுத்தழிக்கும்

பொல்லாதவாதனையெனுஞ்சப்தபூமியிடை
போந்துதலைசுற்றியாடும்
புருஷனிலடங்காதபூவைபோற்றானே
புறம்போந்துசஞ்சரிக்கும்

கல்லோடிரும்புக்குமிகவன்மைகாட்டிடுங்
காணாதுகேட்டவெல்லாங்
கண்டதாக்காட்டியேயணுவாய்ச்சுருக்கிடுஞ்
சபடநாடகசாலமோ

வெல்லாமும்வலதிந்தமனமாயையேழைபா
மென்னாலடக்கவசமோ
விகபரமிரண்டினிலுமுயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே.

709 கந்துகமதக்கரிபைவசமாநடத்தலாங்
கரடிவெம்புலிவாயையுங்
கட்டலாமொருசிங்கமுதுகின்மேற்கொள்ளலாங்
கட்செவியெடுத்தாட்டலாம்

வெந்தழலினிரதம்வைத்தைந்துலோகத்தையும்
வேதித்துவிற்றுண்ணலாம்
வேறொருவர்காணாமலுலகத்துலாவலாம்
விண்ணவரையேவல்கொளலாஞ்

சந்ததமுமிளமையோடிருக்கலாமற்றொரு
சரீரத்திலும்புகுதலாஞ்
சலமேனடக்கலாங்கனன்மேலிருக்கலாந்
தன்னிகரில்சித்திபெறலாஞ்

சிந்தையையடக்கியேசும்மாவிருக்கின்ற
திறமரிதுசத்தாகியென
சித்தமிசைகுடிகொண்டவறிவானதெய்வமே
தேசோமயானந்தமே.

710 சினமிறக்கக்கற்றாலுஞ்சித்தியெல்லாம்பெற்றாலு
மனமிறக்கக்கல்லார்க்குவாயேன்பராபரமே.

அறநெறிச்சாரம்.

711 *தன்னைத்தன்னெஞ்சங்கரியாகத்தானடங்கின்
பின்னைத்தானெய்தாநலனில்லை—தன்னைக்
குடிகெடுக்குந்தீநெஞ்சிற்குற்றேவல்செய்தல்
பிடிபடுக்கப்பட்டகளிறு.

712 *உள்ளூரிருந்துந்தம்முள்ளமறப்பெற்றாரேற்
கள்ளவிழ்சோலையாங்காட்டுளார்—காட்டுள்ளு
முள்ளமறப்பெறுகல்லாரேனாட்டுள்ளு
நண்ணனிநடுவூருளார்.

713 *நின்னையறப்பெறுகிற்கிலேனன்னெஞ்சே
பின்னையான்யாரைப்பெறுகிற்பேன்—நின்னை
யறப்பெறுகிற்பேனேற்பெற்றேன்மற்றீண்டே
புறக்கந்திறப்பதோர்தாள்.

ஆகச் செய்யுள் 17. மனம் முற்றிற்று.

## உக-அதி. தவம்.

---

### திருமந்திரம்.

714 *தன்னையறியாது தானல்லாரென்றிங்
கின்மையறியாதிளையரென்றோராது
வன்மையில்வந்திடுங்கூற்றம்வருமுன்னந்
தன்மையுநல்லதவஞ்செய்யுநீரே.

### கந்தபுராணம்.

715 ஆற்றலை யுளது மாதவமதன்றியே
வீற்றுமொன்றுளதெனவிளம்பலாகுமோ
சாற்றருஞ்சிவகதிதனையுநல்குமாற்
போற்றிடினனையதேபோற்றல்வேண்டுமால்.

716 அத்தவம்பிறவியையகற்றிமேதகு
முத்தியைநல்கியேமுதன்மையாக்குறு
மித்துணையன்றியேயிம்மையின்பமு
முய்த்திடுமுளந்தனிலுன்னுந்தன்மையே.

717 ஆதலிற்பற்பகலருமையாற்புரி
மாதவமிம்மையுமறுமையுநதரு
மேதுவதாகுமாலிருமையும்பெற
லாதியம்புகவனதருளின்வண்ணமே.

718 ஒருமைகொண்மாதவமுழந்துபின்முறை
பருமைகொள்வீடுபெறடைந்துளோர்சிலர்
திருமைகொளின்பினிற்சேர்கின்றோர்சில
ரிருமையுமொருவரேயெய்தினோர்சிலர்.

719 ஆற்றலிற்றம்முடலலசப்புறப்பக
லேற்றவால்லரோறுவலல்வேண்டுமோ
தேற்றுகிலீர்கொலோதேவராகிய
மேற்றிகழ்பதந்தொறுமேயுற்றோரெலாம்.

720 பத்திமைநெறியொடுபயிற்றிமாதவ
முத்திபெற்றானடிமுன்னுற்றோர்தமை
யித்துணையெனலரிதிருமையும்பெறு
மெய்த்தவர்மாலொடுவிரிஞ்சனாதியோர்.

721 பல்லுயிர்தன்னையுமாய்த்துப்பாரினுக்
கல்லல்செய்தருந்தவமாற்றிடாதவர்க்
கில்லையேயிருமையுமின்பமாங்கவர்
சொல்லரும்பிறவியுட்டுன்பத்தாழுவர்.

722 தவந்தனின்மிக்கதொன்றில்லைதாவில்சீர்த்
தவந்தனைநேர்வதுதானுமில்லையாற்
றவந்தனினரியதொன்றில்லைசாற்றிடிற்
றவந்தனக்கொப்பதுதவமதாகுமே.

723 மொய்யுற்றிடவேமுயலுந்தவத்தினன்றிப்
பொய்யுற்றவில்லொழுக்கம்பூண்டுவினைபோக்குவது
மெய்யுற்றிடுதுகளைமிக்கபுனலிருக்கச்
செய்யற்சின்னீரிடத்துத்தீர்க்குஞ்செயலன்றே.

724 ஆடல்வேலெறிதலோடுமாமிரவடிவாயண்ட
கூடமுமலைத்தகள்வனாற்றொடுகுறைந்துவீழ்ந்தும்
வீடிலனென்பமன்னோமேலைநாள்வரத்தினென்றாற்
பீடுறுதவமேயன்றிவலியதுபிறிதொன்றுண்டோ.

காஞ்சிப்புராணம்.

725 தவமேமேலாநெறியாகுந்தவமேசிவனார்தமைக்காட்டுந்
தவமேதுறக்கமடைவிக்குந்தவமேவானத்தேவாக்குந்
தவமேவலாரிதிசைக்கிறைவர்சார்ங்கனயனுமாக்குவிக்குந்
தவமேகிடைப்பிற்கிடையாததுண்டோவென்றுசாற்றினனால்.

சேதுபுராணம்.

726 விஞ்சியவிசுவாமித்திரனாலே
யஞ்சொலரம்பையருஞ்சிலையானா

டஞ்செனநீடுதவத்தவர்தப்பால்
வஞ்சமிழைத்தெவர்வாழ்ந்தவர்மண்மேல்.

திருக்கூவப்புராணம்.

727 எவ்வகைப்பொருள்களுமீயவல்லது
செவ்வியதவமதேதெரியின்வேறிலை
யிவ்வுலகத்திலெந்தியற்றுகின்றதே
யுவ்வுடலெடுத்தபேருறுதியென்பவே.

728 தவத்தினிலமர்புரிசமனைவெல்லலாந்
தவத்தினிலெழுகடறமையுமுண்ணலாந்
தவத்தினில்வடவரைகளைந்து தாங்கலாந்
தவத்தினிலனலமுந்தரிக்கலாகுமே.

புறப்பொருள்வெண்பாமாலை.

729 நீர்பலகான்மூழ்கிநிலத்தசைஇத்தோலுடையாச்
சோர்சடைதாழச்சுடரோம்பி—யூரடையார்
கானகத்தகொண்டகடவுள்விருந்தோம்பல்
வானகத்துய்க்கும்வழி.

சூளாமணி.

730 பிறந்தனர்பிறந்துசாலப்பெருகினர்பெருகிப்பின்னை
யிறந்தனரென்பதல்லாலியாவருமின்றுகாறு
மறைந்துயிர்வாழாநின்றாரில்லையால்வாழிநெஞ்சே
சிறந்ததுதவத்தின்மிக்கதின்மையேசிந்திகண்டாய்.

வளையாபதி.

731 பொருளொடுபோகம்புணர்தலுறினு
மருளுதல்சான்றவருந்தவஞ்செய்ம்மி
னிருளில்கதிச்சென்றினியிவண்வாரீர்
தெருளலுறினுந்தெருண்மினதுவே.

732 *டய்த்தொன்றியோர்தந்துழவுழதாற்றவும்
வித்தின்றிப்பயுங்கூழ்விளைக்குதலென்னெக்கு

மெய்த்தவமில்லான்பொருளொடுபோகங்கட்
கெய்த்தழுந்தேதானிடர்ப்படுமாறே.

### சிறுபஞ்சமூலம்.

733 உயிர்நோய்செய்யாமையுறுநோய்மறத்தல்
செயிர்நோய்பிறர்கட்செய்யாமை—செயிர்நோய்
விழைவுவெகுளியிவைவிடுவாளுயி
ஊிழிவன்றினிது தவம்.

### அறநெறிச்சாரம்.

734 *உடம்புங்கிளையும்பொருளும்பிறவுந்
தொடர்ந்துபின்செல்லாமைகண்டு—மடங்கித்
தவத்தொடுதானம்புரியாதுவாழ்வா
ரவத்தங்கழிகின்றநாள்.

### திருக்குறள்.

735 உற்றநோய்நோன்றலுயிர்க்குறுகண்செய்யாமை
யற்றேதவத்திற்குரு.

736 வேண்டியவேண்டியாங்கெய்தலாற்செய்தவ
மீண்டுமுயலப்படும்.

737 தவஞ்செய்வார்தங்கருமஞ்செய்வார்மற்றல்லா
ரவஞ்செய்வாராசையுட்பட்டு.

738 இலர்பலராகியகாரணநோற்பார்
சிலர்பலர்நோலாதவர்.

ஆகச்செய்யுள் 25 தவம் முற்றிற்று.

---

## ௨௨-அதி. வாய்மை.

---

### திருமந்திரம்.

739 *செய்தானறியுஞ்செழுங்கடல்வட்டத்துப்
பொய்தான்மிகவும்புலம்புமனிதர்கள்
மெய்தானுரைக்கில்விண்ணோர்தொழச்செய்வன்
மைதாழ்ந்திலங்குமிடறுடையோனே.

## காஞ்சிப்புராணம்.

740 மெய்யேசிறந்தபெருநலமாமெய்யேயெவையுநிலைபெறுத்து
மெய்யாலழல்கால்கதிர்பிறவுந்தத்தந்தொழிலின்விலகாவா
மெய்யேயெவைக்குமிருப்பிடமாமெய்யேமெய்யேசிவமாகு
மெய்யேபிரமபதமுமெனப்புகன்றான்வினைதீர்காசிபனே.

## திருக்கூவப்புராணம்.

741 உவமந்தீர்ந்திடுவாய்மையொன்றேயுறினுலகிற்
றவமுந்தானமுமொருங்குறச்செய்தலிற்றலையாய்ப்
பவமகன்றநான்மறைமுடிவாகியபரம
சிவனரும்பதம்பெறும்படியுயர்த்திடுந்தெரியின்.

742 மன்னனாகியிவ்வுலகெலாம்புரந்திடவரினு
மின்னருனுழந்துடலம்விட்டிறந்திடவரினும்
பண்ணும்வாய்மையிற்பிறழ்ந்திடாதொழிகவிப்பவம்போய்
மின்னுலாஞ்சடையெம்பிரான்பதம்புகவேண்டின்.

## திருப்பரங்கிரிப்புராணம்.

743 *மெய்யையகன்றதனக்குறுதிவிரும்புந்துணைவர்வேறில்லை
மெய்மைக்கெடுத்துநாடோறும்விளைக்குந்தருமம்வேறில்லை
மெய்மைத்தவிர்ந்துபுவிசூழ்ந்துமெலிந்துதேடுநிதியமில்லை
மெய்மையகற்றியுடல்வருந்திநிதிக்குந்தவங்கள்வேறில்லை.

744 *பகர்சத்தியத்தைவிட்டுண்மைப்படுத்துங்கேள்வியாதுநலந்
தொகுசத்தியத்தைவிட்டுழன்றுதோயும்புனிதநீர்யாது
தகுசத்தியத்தைவிட்டுநின்றுதழைவளர்க்குமகமியாது
திகழ்சத்தியத்தைவிட்டவர்க்குத்தெரிசற்குணங்கள்யாதுமன்று

## காசிரகசியம்.

745 *மறைமுழுதுணர்ந்தாரேனுமகம்பலபுரிந்தாரேனுங்
குறைவறுதானமெல்லாங்கொடுத்தறங்கூர்ந்தாரேனு
நிறைபெருந்தீர்த்தமெல்லாநிரம்புறத்துளைந்தாரேனுங்
கறையுறுமொருபொய்கூறிற்கடுநரகழுந்துவாரே.

746 *பொருளுலோபத்தினானும்புரிதருசினத்தானு
மருட்பவுயிரையோம்பிவாழுதற்பொருட்டினானு
மிருளுறுமொருபொய்கூறினெடுத்திடுபவங்கடோறுந்
தெருட்பவந்துபற்றிச்செயிர்மிகவிளையாநிற்கும்.

747 *பொய்மையேபாவமெல்லாம்விளைதருபூமியாகும்
பொய்மையேபிறவியெல்லாம்புகப்புரிவித்துமாகும்
பொய்மையேவறுமையெல்லாம்போதாப்புரிவதாகும்
பொய்மையேநரகமெல்லாம்புகுதரப்புகுத்தாநிற்கும்.

748 *ஏனைநல்லொழுக்கமுற்றவிருப்பினுமின்மைசெய்யு
மூனமிலீன்றாண்மாட்டுமொருவருப்பொருங்குசெய்யு
மானமிக்கவராஞ்சான்றோர்மருங்குநான்புகல்வதென்னே
யீனமார்பொய்மைகூறலெற்றைக்கும்பொல்லாதாகும்.

749 *பொய்யுளான்மறந்தோர்மெய்மைபுகலினும்பொய்மையாகு
முய்யுமாறென்றுமில்லையுறுதியென்பதுஞ்சாராது
கொய்யுமாமலர்ப்பூஞ்சோலைசூழ்தவலயத்துநாளு
நையுமாறெதுசெய்தாலும்பொய்நவிலாமைவேண்டும்.

750 *கூற்றுவன்றண்டமில்லைக்கோள்செயுந்தீமையில்லை
மாற்றருமசனிதீயவளிமழையராக்கள்செய்யுஞ்
சாற்றரும்வருத்தமில்லைத்தரித்திரஞ்சற்றுமில்லை
யேற்றமார்மெய்யேகூறிப்பொய்ப்பிணையிரித்துளார்க்கே.

751 *எடுத்தசன்மத்துமேன்மையெவ்வளவிருந்தபோதுங்
கடுத்தவைமாற்றலின்றிக்கழிந்தசனமத்துஞ்செய்ப
வெடுத்தபுண்ணியங்களெல்லாமழித்திடும்பொய்மையென்னிற்
றொடுத்தமேற்பிறப்பினுற்றுந்தொழிவினையுரைப்பதென்னே.

## அரிச்சந்திரசரிதை.

752 செய்மையண்மையினுயிர்க்கொருதுணையெனச்சிறந்த
வாய்மையாலகந்தூய்மையாமற்றிலைபுறத்[illegible]தத்
தூய்மைசெய்வதுநீரலாற்சொல்லின்வேறுள[illegible]தா
நோய்மைசெய்யினும்வாய்மையேநோன்பெனக்கருதி.

753 புலையனும்விரும்பாதவிப்புன்புலால்யாக்கை
நிலையெனுமொருண்டுயிரினுநெடிதுறச்சிறந்தே
தலைமைசேர்தருசத்தியம்பிறழ்வதுதரியேங்
கலையுணர்ந்தநீயெமக்கிதுகழறுவதழகோ.

754 இம்மையம்மைவீடெனமறைபுலங்கொளவியம்பு
மும்மையுந்தருமுறைபுடைத்தெனுநிலமாணி
யெப்பமையாழ்வயிற்றடக்கிமீட்டுமிழ்கலாவெரிவாய்
வெம்மைகூர்நரகுய்க்கினுமெய்ம்மையைவிடேமால்.

பிரமோத்தரகாண்டம்.

755 வாய்மைதப்பினோர்களிந்தமானிலத்திலீனராய்த்
தீமையுற்றுமேலுமோரார்பழிக்கவேதிரிந்துபின்
றாய்மையற்றதும்பியுட்டுளைந்தழுங்குவாரெனு
வாய்மனுப்பகர்ந்தவேதசாகைமுற்றுமறையுமே.

இராமாயணம்.

756 வாய்மையென்னுமீதன்றிவையகந்
தூய்மையென்றுமொன்றுண்மைசொல்லுமோ
தீமைதானதிற்றீர்தலன்றியே
யாய்மையாகவேறறையலாவதே.

வில்லிபாரதம்.

757 அண்ணியகிளையுமில்லுமருப்பெருமகவுமன்புந்
திண்ணியசீருமிக்கசெல்வமுந்திறனுந்தேசு
மெண்ணியபொருள்கள்யாவுமியற்றியதவமுமேனைப்
புண்ணியமனைத்துஞ்சேரப்பொய்ம்மையாற்பொன்றுமன்றே.

758 உண்மையின்மறுமைதன்னிலுறுபயனிரண்டும்பார்க்கி
னிம்மையிலிளங்கும்யார்க்குமவாவரியற்கையாலே
மெய்ம்மையேயொருவர்க்குற்றவிபத்தினைமீட்குமாயிற்
பொய்ம்மையுமெய்ம்மைபோலப்புண்ணியம்பயக்குமன்றே.

சிலப்பதிகாரம்.

759 வாய்மையின்வழாதுமன்னுயிரோம்புநர்க்
கியாவதுமுண்டோவெய்தாவரும்பொருள்.

## வளையாபதி.

760 பொய்யினீங்குமின்பொய்யின்மைபூண்டுகொண்
டையமின்றியறநெறியாற்றுமின்
வைகல்வேதனைவந்துறலொன்றின்றிக்
கவ்வையில்லுலகெய்துதல்கண்டதே.

761 கல்வியின்மையுங்கைப்பொருள்போகலு
நல்லில்செல்லல்களானலிவுண்மையும்
பொய்யில்பொய்யொடுகூடுதற்காகுத
லையமில்லையதுகடிந்தோம்புமின்.

## நாலடியார்.

762 தான்கெடினுந்தக்கார்கேடெண்ணற்கதன்னுடம்பி
னூன்கெடினுமுண்ணார்கைத்துண்ணற்க—வான்கவிந்த
வையகமெல்லாம்பெறினுமுரையற்க
பொய்யோடிடைமிடைந்தசொல்.

## சிறுபஞ்சமூலம்.

763 இம்மைநலனழிக்குமெச்சங்குறைபடுக்கு
மம்மையருநரகத்தாழ்விக்கு—மெய்ம்மை
யறந்தேயும்பின்னுமலர்மகளைநீக்கு
மறந்தேயும்பொய்யுரைக்கும்வாய்.

## நீதிவெண்பா.

764 *நீசனோநீசனினையுங்காற்சொற்றவறு
நீசனேநீசனவனையே—நீசப்
புலையனுமென்றுரைக்கும்புல்லியனேமேலாம்
புலையனுமென்றேபுகல்.

765 *சத்தியமெக்காலுஞ்சனவிருத்தமாகுமே
யெத்தியபொய்யார்க்குமிதமாகு—நத்தியபால்
வீடுதொறுஞ்சென்றுவிலையாமதுவிருந்த
வீடுதனில்விலையாமே.

†தனிப்பாடல்.

766 *அற்றன்றுதலது தான்மனஞ்செய்தல்
சொற்றன்மாட்டுநிகழ்த்தல்பிறனோர்த்தன்
மற்றித்தன்மைபடுமாயின்மாண்பிலாக்
குற்றப்பொய்யென்றுரைப்பர்குணமிக்கார்.

திருக்குறள்.

767 தன்னெஞ்சறிவதுபொய்யற்கபொய்த்தபின்
றன்னெஞ்சேதன்னைச்சுடும்.

768 உள்ளத்தாற்பொய்யாதொழுகினுலகத்தா
ருள்ளத்துளெல்லாமுளன்.

769 பொய்யாமைபொய்யாமையாற்றினறம்பிற
செய்யாமைசெய்யாமைநன்று.

770 புறந்தூய்மைநீரானமையுமகந்தூய்மை
வாய்மையாற்காணப்படும்.

771 யாமெய்யாக்கண்டவற்றுளில்லையெனைத்தொன்றும்
வாய்மையினல்லபிற.

ஆகச் செய்யுள் 33. வாய்மை முற்றிற்று.

---

உரு-அதி. நிலையாமை.

---

தேவாரம்.

772 தந்தையார்தாயாருடன்பிறந்தார்தாரமார்புத்திரரார்தாந்தாமாரே
வந்தவாறெங்ஙனேபோமாறேதோமாயமாமிதற்கேதுமகிழ
வேண்டா, சிந்தையீருமக்கொன்றுசொல்லக்கேண்மின்றிகழ்
மதியும்வாளரவுஞ்சேர்க்குஞ்சென்னி, யெந்தையார்திருநாம
நமச்சிவாயவென்றெழுவார்க்கிருவிசும்பிலிருக்கலாமே.

---

† நீலகேசிப்பாயிரவுரை மேற்கோள்,

### கந்தபுராணம்.

773 கலைபடுமுணர்ச்சியுங்கற்பும்வீரமு
மலைபடுவெறுக்கையும்வலியுமற்றது
மலைபடுபுற்புதமாகுமன்னவை
நிலைபடுபொருளெனநினைக்கலாகுமோ.

### ஞானவாசிட்டம்.

744 *நிதியுமரசுஞ்செயலுமிவ்வுடம்பும்வேண்டுவனநிற்கினன்றே
விதியில்வருகாலனாற்சிலநாளிலிவையெலாம்வீந்துபோகு
முதிரமொடுதசையுடைத்தாயுடைவதியல்பாய்த்தாழ்ந்தோ
ருயர்ந்தோரொத்தே, யதிகசராமரணமுறுந்தாமறியாதிவ்வுடலி
லழகென்கொல்லோ.

775 *மண்ணாடுமன்னவருமவர்தனமுமாண்டனனுண்மணலையொக்கும்
விண்ணாடுமிந்திரருமவர்வாழ்வும்போயினவிண்மீனையொக்கு
மெண்ணாடும்பிரமருமண்டமும்பூதங்களுமிறந்தவெல்லையில்லை
கண்ணாடுமவையெங்கேநின்வாழ்க்கைநிலையென்னேகவலு
[நெஞ்சே.

### சிவ-தருந்திரட்டு.

776 *பாலனும்பருவமாயும்பன்னியகுமாரமாயுங்
கோலயவ்வனமுமாயுங்குல்லியநலமுமாயும்
வாலியசெல்வமாயும்வலியுடனனைத்துமாயுஞ்
சாலவேநிலைஞாலத்துத்தானிலையாமையன்றே.

777 *தேடியசெல்வமாயுஞ்சிறந்திடுங்கல்விமாயு
நாடியவீரமாயுநலந்திகழ்குணமுமாயுங்
கூடியசுற்றமாயுங்கொண்டாடுமனைத்துமாயு
நீடியஞாலமெல்லாநிலையாமைமயமேயன்றே.

778 *இந்திரன்செல்வமாயுமிமையவர்பதங்கண்மாயு
மந்தரம்பொடியாய்வீழுமறிகடல்வறளதாகுஞ்
சந்திரனிரவிமாண்டுதரையதுமழியுமென்று
சிந்தநீர்க்குமிழியாக்கையியல்பினையிசைத்தற்குண்டோ.

## பட்டினத்தடிகள் பாடல்.

779 மனையாளுமக்களும்வாழ்வுந்தனமுந்தன்வாசன்மட்டே
யினமானசுற்றமயானமட்டேவழிக்கேதுதுணை
தினையாமளவெள்ளளவாகினுமுன்புசெய்ததவந்
தனையாளவென்றும்பரலோகஞ்சித்திக்குஞ்சத்தியமே.

780 அத்தமும்வாழ்வுமகத்துமட்டேவிழியம்பொழுக
மெத்தியமாதரும்வீதிமட்டேவிம்மிவிம்மியிரு
கைத்தலவேல்வைத்தழுமைந்தருஞ்சுடுகாடுமட்டே
பற்றித்தொடருமிருவினைப்புண்ணியபாவமுமே.

781 நாட்டமென்றேயிருசற்குருபாதத்தைநம்புபொம்ம
லாட்டமென்றேயிருபொல்லாவுடலையடர்ந்தசந்தைக்
கூட்டமென்றேயிருசுற்றத்தைவாழ்வைக்குடங்கவிழ்நீ
ரோட்டமென்றேயிருநெஞ்சேயுனக்குபதேசமிதே.

782 மையாடுகண்ணியுமைந்தரும்வாழ்வுமனையுஞ்செந்தீ
யையாநின்மாயையுருவெளித்தோற்றமகிலத்துள்ளே
மெய்யாயிருந்ததுநாட்செலநாட்செலவெட்டவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க்கனவாய்மெல்லப்போனதுவே.

783 அடியாருறவுமரன்பூசைநேசமுமன்புமன்றிப்
படிமீதில்வேறுபயனுளதோபங்கயன்வகுத்த
குடியானசுற்றமுந்தாரமும்வாழ்வுங்குயக்கலங்க
டடியாலடியுண்டவாறொக்குமென்றினஞ்சார்ந்திலரே.

784 மாடுண்டுகன்றுண்டுமக்களுண்டென்றுமகிழ்வதெல்லாங்
கேடுண்டெனும்படிகேட்டுவிட்டோமினிக்கேண்மனமே
யோடுண்டுகந்தையுண்டுள்ளேயெழுத்தைந்துமோதவுண்டு
தோடுண்டகண்டனடியார்நமக்குத்துணையுமுண்டே.

785 ஊருஞ்சதமல்லவுற்றார்சதமல்லவுற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்லபெண்டிர்சதமல்லபிள்ளைகளுஞ்
சீருஞ்சதமல்லசெல்வஞ்சதமல்லதேசத்திலே
யாருஞ்சதமல்லநின்றாள்சதங்கச்சியேகம்பனே.

## தாயுமானவர்பாடல்

786 தந்தைதாய்தமர்தாரமகவென்னுமிவையெலாஞ்
சந்தையிற்கூட்டமிதிலோ
சந்தேகமில்லைமணிமாடமாளிகைமேடை
சதுரங்கசேனையுடனே
வந்ததோர்வாழ்வுமோரிந்த்ரஜாலக்கோலம்
வஞ்சனைபொறாமைலோபம்
வைத்தமனமாங்கிருமிசேர்ந்தமலபாண்டமோ
வாஞ்சனையிலாதகனவே
யெந்தநாளுஞ்சரியெனத்தேர்ந்துதேர்ந்துமே
யிரவுபகலில்லாவிடத்
தேகமாய்நின்றநின்னருள்வெள்ளமீதிலே
யானென்பதறவுமூழ்கிச்
சிந்தைதான்றெளியாதுசுழலும்வகையென்கொலோ
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்டவறிவானதெய்வமே
தேசோமயானந்தமே.

787 தினமேசெலச்செலவாழ்நாளுநீங்கச்செகத்திருள்சொப்
பனமேயெனவெளிகண்டேயிருக்கவும்பாசபந்த
வினமேதுணையென்றிருந்தோநமன்வரினென்செய்குவோ
மனமேநம்போலவுண்டோசத்தமூடரிவ்வையகத்தே.

## நீதிநெறிவிளக்கம்.

788 நீரிற்குமிழியிளமைநிறைசெல்வ
நீரிற்சுருட்டுநெடுந்திரைகள—ணீரி
லெழுத்தாகும்யாக்கைநமராங்காளென்னே
வழுத்தாததெம்பிரான்மன்று.

## குசேலோபாக்கியானம்.

789 சாருறுதந்தையாருந்தாயருமனர்தஞ்சன்ம
ஆருமோரனந்தம்மனைய்த்தவுறவுமோரனந்தம்பெற்ற

பெருமோரனந்தங்கன்மப்பெருக்கமு மனந்தங்கொண்ட
சிருமோரனந்தமின்னுஞ்சேர்வதுமனந்தமாமால்.

## சூளாமணி.

790 கொலையானைமேலோர் குளிர்வெண்குடைக்கீழ்ப்
பலயானைமன்னர்பலர்போற்றவந்தான்
மலையாகம்போழாகமற்றிவனேசாய்ந்தா
னிலையாமைசாலநிலைபெற்றதன்றே.

## மேருமந்தரபுராணம்.

791 இளமையுமெழிலும்வானத்திடுவில்லினீண்டமாயும்
வளமையுங்கிளையும்வாரிபுதிபதன்வரவுபோலும்
வெளியிடைவிளக்கின்வீயுமாயுவுமென்றுவீட்டுக்
குளபகலூக்கஞ்செய்வநுணர்விற்பெரியோரார்.

## சீவகசிந்தாமணி.

792 மன்னுசீர்மொக்குளொக்குமானிடரிளமையின்ப
மின்னினொந்திறந்நஞ்செலவம்வெயிலுறுபனிபினீங்கு
மின்னிசையிரங்குநல்பாழிளியினுமினிபசொல்லா
யன்னதால்வினையினுக்கமழுங்குதற்கென்னையென்றான்.

## சிலப்பதிகாரம்.

793 கடற்கடம்பெறிந்தகாவலனாயினும்
விடற்சிலைபொறித்தவிறலோனாயினு
நான்மறையாளன்செய்யுட்கொண்டு
மேனிலையுலகம்விடுத்தோனாயினும்
போற்றிமன்னுயிர்முறையிற்கொள்கெனக்
கூற்றுவரைநிறுத்தகொற்றவனாயினும்
வன்சொல்யவனர்வளநாடாண்டு
பொன்படுநெடுவரைபுகுந்தோனாயினு
மிகற்பெருந்தானையோடிருஞ்செருவோட்டி
யகப்பாவெறிந்தவருந்திறலாயினு
முருகெழுமரபினயிரைமண்ணி

யிருகடனீருமாடினோனாயினுஞ்
சதுக்கப்பூதரைவஞ்சியுட்டந்து
மதுக்கொள்வேள்விவேட்டோனாயினும்
மீக்கூற்றாளர்யாவருமின்மையின்
யாக்கைநில்லாதென்பதையுணர்ந்தோய்
மல்லன்மாஞாலத்துவாழ்வோர்மருங்கிற
செல்வநில்லாதென்பதைவெல்போர்த்
தண்டமிழிகழ்ந்தவாரியமன்னரிற்
கண்டனையல்லையோகாவல்வேந்தே
யிளமைநில்லாதென்பதையெடுத்தீங்
குணர்வுடைமாக்களுரைக்கல்வேண்டா
திருஞெமிரகலத்துச்செங்கோல்வேந்தே
நரைமுதிர்யாக்கைநீயுங்கண்டனை
விண்ணோருருவினெய்தியநல்லுயிர்
மண்ணோருருவின்மறிக்கினுமறிக்கு
மக்கள்யாக்கைபூண்டமன்னுயிர்
மிக்கோய்விலங்கினெய்தினுமெய்தும்
விலங்கின்யாக்கைவிலங்கியவின்னுயிர்
கலங்கஞர்நரகரைக்காணினுங்காணு
மாடுங்கூத்தர்போலாருயிரொருவழிக்
கூடியகோலத்தொருங்குநின்றியலாது
செய்வினைவழித்தாயுயிர்செலுமென்பது
பொய்யில்காட்சியோர்பொருளுரையாதலின்.

### வளையாபதி.

794 இளமையுநிலையாவாலின்பமுநின்றவல்ல
வளமையுமஃதேயால்வைகலுந்துன்பவெள்ள
முளவெனநினையாதேசெல்கதிக்கென்றுமென்றும்
வினைநிலமுழுவார்போல்வித்துநீர்செய்துகொண்மின்.

### பெருந்தேவனார்பாரதம்.

795 பலதிரண்டசெல்வத்தைப்பார்க்கிற்கனவா
மலர்திரண்டாற்போலிளமைவாடுஞ்—சிலநிகழ்ந்த

மின்னைக்கும்வாழ்நாளிவைபிற்றைமெய்யென்றிட்
டுன்னக்களிப்பாருளர்.

சாந்திபுராணம்.

796 விண்ணினின்பமும்வீதல்கேட்டுமால்
மண்ணினின்பமுமாய்தல்காண்டுமா
லெண்ணினின்பமாமீறிலாததே
நண்ணிநாமினிநயக்கற்பாலதே.

நாலடியார்.

797 இல்லமிளமையெழில்வனப்புமீக்கூற்றஞ்
செல்வம்வலியென்றிவையெல்லா—மெல்ல
நிலையாமைகண்டுநெடியார்துறப்பர்
தலையாயார்தாமுய்யக்கொண்டு.

798 தாஞ்செய்வினையல்லாற்றம்மொடுசெல்வதுமற்
றியாங்கணுந்தேரிற்பிறிதில்லை—யாங்குத்தாம்
போற்றிப்புனைந்தவுடம்பும்பயனின்றே
கூற்றங்கொண்டோடும்பொழுது.

நான்மணிக்கடிகை.

799 சாவாதவில்லைபிறந்தவுயிரெல்லாந்
தாவாதவில்லைவலிகளு—மூவா
விளமையிசைந்தாருமில்லைவளமையில்
கேடின்றிச்சென்றாருமில்.

திருக்குறள்.

800 நில்லாதவற்றைநிலையினவென்றுணரும்
புல்லறிவாண்மைகடை.

801 நெருநலுளனொருவனின்றில்லையென்னும்
பெருமையுடைத்திவ்வுலகு.

ஆகச்செய்யுள் 30. நிலையாமை முற்றிற்று.

## உ௪-அதி. யாக்கைநிலையாமை.

---

### தேவாரம்.

802 நடலைவாழ்வுகொண்டென்செய்திர்நாணிலீர்
சுடலைசேர்வதுசொற்பிரமாணமே
கடலினஞ்சமுதுண்டவர்கைவிட்டா
லுடலினார்கிடந்தூர்முனிபண்டமே.

803 பூக்கைக்கொண்டரன்பொன்னடிபோற்றிலார்
நாக்கைக்கொண்டரனாமநவில்கிலா
ராக்கைக்கேயிரைதேடியலமந்து
காக்கைக்கேயிரையாகிக்கழிவரே.

### திருமந்திரம்.

804 *மண்ணொன்றுகண்டீரிருவினைப்பாத்திரந்
திண்ணென்றிருந்தது தீயினைச்சேர்ந்தது
விண்ணின்றுநீர்விழின்மீண்டுமண்ணாவபோ
லெண்ணின்றமாந்தரிறக்கின்றவாறே.

805 *ஊரெலாங்கூடியொலிக்கவழுதிட்டுப்
பேரினைநீக்கிப்பிணமென்றுபேரிட்டுச்
சூரையங்காட்டிடைக்கொண்டுபோய்ச்சுட்டிட்டு
நீரினில்மூழ்கிநினைப்பொழிந்தார்களே.

806 *வளத்திடைமுற்றத்தோர்மாநிலமுற்றுங்
குளத்தின்மண்கொண்டுகுயவன்வனைந்தான்
குடமுடைந்தாலவையோடென்றுவைப்ப
ருடலுடைந்தாலிறைப்போதும்வையாரே.

807 *காக்கைகவரிலென்கண்டார்பழிக்கிலென்
பாற்றுளிப்பெய்யிலென்பல்லோர்பழிக்கிலென்
றோற்பையுணின்றுதொழிலறச்செய்தூட்டுங்
கூத்தன்புறப்பட்டுப்போனவிக்கூட்டையே.

## திருவிளையாடற்புராணம்.

808 நாய்நமதெனநரிநமதெனப்பிதா
தாய்நமதெனநமன்றனதெனப்பிணி
பேய்நமதெனமனமதிக்கும்பெற்றிபோ
லாய்நமதெனப்படும்யாக்கையாரதே.

809 விடம்பயிலெயிற்றரவுரியும்வீறுழை
குடம்பையுந்தானெனுங்கொள்கைத்தேகொலா
நடம்பயில்கூத்தரினடிக்குமைவர்வா
ழுடம்பையும்யானெனவுரைக்கற்பாலதோ.

810 மணமகனேபிணமகனாம்மணப்பறையேபிணப்பறையா
யணியிழையார்வாழ்த்தொலியே யழுகையொலியாய்க்கழியக்
கணமதனிற்பிறந்திறமிக்காயத்தின்வரும்பயனை
யுணர்வுடையார்பெறுவருணர்வொன்றுமிலார்க்கொன்றுமிலை.

## காஞ்சிப்புராணம்.

811 அருவினையுலகமெல்லாம்படைத்தளித்தழிக்குங்காலங்
கருவுறுமெவையுங்காலவயத்தவாங்காலந்தான்மற்
றொருபொருள்வயத்ததன்றாலுந்தியோன்கற்பத்தீரேழ்
பொருவிலிந்திரர்கண்மாய்வர்பொன்றுவர்மனுக்கடாமும்.

812 ஓதுமிக்கற்பம்வேதற்கொருதினமந்நாண்முப்ப
தாதலார்மதியாந்திங்களாறிரண்டாயினாண்டா
மேதமில்வருடநூறேறலிருவகைப்பரார்த்தமாகப்
போதனும்போதிலன்னான்பொன்றுவன்மன்றமாதோ.

813 அம்மலர்க்கிழவன்காலமரிக்கொருதினமன்னாளு
மம்முறைத்திங்கள்கூடுமாண்டுநூறெய்திற்பொன்று
மம்மவோசீசீயிந்தவநித்தியவாழ்வுவேண்டே
னம்மையில்வீடுபேற்றிற்குபாயமேயறிதல்வேண்டும்.

814 படுங்கலைமுகூர்த்தங்காட்டைகளென்றுபகலிராப்பக்கமேதிங்க
ளோடும்புணரிருதுவாண்டுகத்தொடக்கத்தோதியவவயவப்
பகுப்பா, லிடும்பைதீர்காலங்கழிவுறுங்காலத்தெல்லையில்யாவரு

பிறுவர், நெடும்புலக்குரம்புகடந்து வீடுலகினிலைப்பதோர்
பொருளுமற்றின்றால்.

815 என்பினைநரம்பிற்பின்னிக்குடர்வழும்பிறைச்சிமெத்திப்
புன்புழுப்பொதிந்துசெந்நீர்ப்புண்ணசும்பொழுகிநாறித்
துன்பநோயெவற்றினுக்குமுறையுளாய்ப்புறந்தோன்றுடும்
வன்புலையுடம்பேயாவிவருத்திடும்பிணிவேறில்லை.

## தணிகைப்புராணம்.

816 இளகுநெய்த்தோருமிறுகுநெய்த்தோருமியம்புறிற்றொடியொரு
மூன்றும், வளமலிமூளைபன்னிருதொடியாமயிர்முதலனைத்
தையுநதொகுத்திட், டளவிடிலாக்கையாயிரந்தொடியாமருவருப்
புறுமியக்கங்கட், களவிலையிந்தப்புலையுடற்பொறையைப்பொரு
ளெனமதிப்பரோவறிந்தோர்.

817 தமனியக்கடமேயாயினும்பல்விீத்தங்குறின்விழைஞரும்பற்று
ரமிழ்தமேயானுந்துய்ப்புறிற்பவ்வியாக்குமிவ்வுடற்புகரறிந்து
மிமிழ்தரப்பற்றுமடவருக்குரைத்துமென்பயன்றீர்த்தமாடியினு
முமிழ்முடையாக்கைகசியுறுநிறைவனுண்மைதேர்ந்துயிர்சுத்தி
[யுறுமே.

818 கருவினின்மழவிற்கற்குங்காலையிற்பருவமாறிற்
பெருகியபொழுதினேயிற்பிரிவினிற்பகையினீட்டும்
பொருள்வயின்வேட்டதெய்தாப்புன்மையின்முதுமைதன்னின்
மருவியதிழப்பிற்சாவின்வன்றுயர்பணித்தார்க்குண்டே.

819 விதித்தனவாண்டுநூறுமேவரிதாண்டுசில்ல
கதித்திடுமிளமைதின்னுங்காமநோய்சில்லதின்னு
முதிக்கினல்லுணர்வுமேலையுறுபிணிநாடவொட்டா
மதித்தனரொழுகலாறும்வழுவிக்குழைப்புநண்ணில்.

## திருப்பெருந்துறைப்புராணம்.

820 குடருமெலும்புங்கொழுவுங்குருதியுமீருளுந்தசையுந்
தொடருநரம்புப்போர்த்ததோலுமூளையும்வழும்பு

மடருமுவர்நீருநனியருவருக்கும்பவ்வியும்
படருமுடலையும்பொருளாநினைப்பரோபண்புடையோர்.

821 மிதவையினுக்கமைத்துழலுமீன்கொலைஞன்போற்கவரும்
பதமிதெனப்பார்த்துழலும்பாழ்ங்கூற்றுண்மையினாலெவ்
விதமுமுடம்பொழியுமதன்மேற்புரிவதொன்றுமிலை
யிதமகிதமேயுயிர்க்குத்துணையாகவெய்திடுமே.

## சேதுபுராணம்.

822 ஆனமுதுஞ்சருக்கரையுமருங்கனியும்பசுந்தேனு
மூனமுறுமலமாதலுதரமதிற்புகுந்தன்றே
கானுலவுநறுந்தெண்ணீர்கடியுமுவர்ப்புனலாத
லீனமிகுமுடைக்குரம்பையிதிற்புகுதப்பெய்தன்றே.

823 நறுந்தவளத்துயிலழுக்காய்நாறுதற்குங்வையுடம்பி
னுறுந்தவறுதனையன்றியொருநிமித்தம்பிறிதுண்டோ
விறுந்தனையுமுடற்சுமையாமிதுசுமத்தற்கிளையாமற்
பெறுந்தகையதெனக்கருதிப்பேணுவரோபெரியோர்தாம்.

824 மெய்யாகவிளம்புகின்றேம்வினைநெறியால்வரும்புலனு
முய்யாதோரொன்றாகியுறுமலத்துமுறங்கவிலை
பொய்யாகும்வினையனைத்தும்பொறிமூன்றின்றடுமாற்ற
மெய்யாதசிறையுடம்பாலின்படைவதெவ்வகையோ.

825 ஊறியெழுஞ்சுக்கிலமுமுதிரமுமுற்றான்றிரளாய்க்
கூறுபடுமுறுப்பினொடுங்குழவியிளங்குமரனென
வேறுபடாநாடோறுமிகப்பலிதமெய்திரங்கி
மாறுபடுநிலைவந்தால்வாராததோமரணம்.

826 இப்பிறப்பினிம்மையன்றியின்பமிலையெனிறந்த
வப்பிறப்பும்வருபிறப்புமடங்கலுமப்படியன்றே [மருத்தின்
மெய்ப்பொருணூல்விரித்துணர்ந்தோர்வேண்டுவரோவிறந்
ளைப்பனையாயினிமீண்டுமண்ணுலகில்வரும் †பிறக்கை.

† பிறக்கை—பிறப்பு.

827 விழியிழந்தான்போம்பொழுது விழுங்குழியின்மீண்டந்த
வழியதனில்வரும்பொழுது மறித்தும்விழுந்திடுவதுபோ
லிழிபுறு‡மச்சானத்தாலிறந்துபிறந்தெஞ்ஞான்று
மொழிபிலிடருயிரெய்துமது நீங்கிலுறுமின்பம்.

828 சூழ்ந்தனவெல்லாம்பிரியுந்தோன்றினவெல்லாநசிக்குந்
தாழ்ந்திடுமற்றுயர்ந்தவெல்லாந்தனிநகருமாளிகையும்
பாழ்ந்§துடவைப்படுமனுமான்பழுத்தபழந்தனக்கென்றும்
வீழ்ந்திடலேகதியானால்விளியாதோசரீரந்தான்.

829 இன்றொழியினாளையென்பதிருந்திடுமோவித்திங்கள்
சென்றிடுமேல்வருமாதந்திரமாமோவருடமிது
பொன்றிடுமேலெதிராண்டும்போமிது தான்புதிதன்றே
மன்றநிலையுடனிலையுமாரணமுமாருதியே.

830 அடவிதனிற்புகுந்திடினுமடுக்கன்முழைநுழைந்தாலு
மிடைநிலவுசெய்மைநிலத்தெய்திடினுமெரிதரங்கக்
கடலதனின்மூழ்குறினுங்காலமது வருங்காலை
யுடலொழியுமிறப்பதனோடொற்றுமையதாகலினால்.

831 ஓரிடத்தோருயிர்நெடுநாளுறைவதிலையுததியெனு
நீரிடத்துப்புரிவினையானிலையிலுடம்பிது போனாற்
பாரிடத்திற்சுவர்க்கத்திற்பவர்க்கமதிலெங்கெனினுஞ்
சேரிடத்திற்சேருமிது திண்ணமெனத்தெளிந்திடுதி.

832 உலகமேலிறந்திடாதவுபாயமிங்கொருவர்க்குண்டேல்
விலகுமோர்கிருமியானும்விளிந்திடற்கேதுவுண்டோ
விலகுமிப்பொருண்மேலையமென்பதொன்றில்லையிந்த
வலகிலாவுயிருநிற்பதர்தகனாளைதன்னில்.

833 பழித்திடுங்கோழைமூளைபற்றியுவழுக்குமற்றை
யொழித்திடுமலநீர்வெண்ணீருவையிற்றினுலகத்தொன்று

‡ அச்சானம் = அஞ்ஞானம்.

§ துடவை = காடு.

மிழிப்புறுபண்டமில்லைபிவற்றினுக்கிடமாமென்று
மழிப்புறுமியாக்கைகாப்பாரறிவுளாராகுவாரோ.

செவ்வந்திப்புராணம்.

834 *புழுச்சுமைமலக்குவைபுலவுநாறிய
வழுக்குடலீரல்சீவழியுஞ்செய்பக
முழுக்குடலுதிரநீர்மூளையின்பொதி
யழுக்குடலதைப்பொருளாகவெண்ணுமோ.

835 *உழுநரிக்கணங்களுக்குதவுமொண்பொருள்
கழுகினுக்குணவுகட்டியகளஞ்சியந்
தழலினுக்கிந்தனமானசட்டக
மெழிலுறப்புனையினுமிருப்பதல்லவே.

836 *நரம்புடலெலும்புதோனட்டபுன்குடில்
வரம்பறுபிணியெலாமடுத்தவான்கலந்
திரங்குதனரையிடர்புதைத்தசிற்றறைக்
குரம்பையென்றறிந்நிலைகொற்றவேந்தனே.

837 *மின்போலழியும்வாயிற்றுமைவடிவாயழியுமெய்புருவாய்
முன்போலழியும்பிறந்தழியுமடவாருடனேமுயங்கியதன்
பின்போயழியுநரைத்தழியுப்பேய்போற்றிரிந்துபெயர்ந்தழியும்
பொன்போல்வளர்த்துமிவ்வுடலநிலையாதழிந்துபோய்விடுமே.

பாகவதம்.

838 *கனவைப்போலவுங்கானலினீருடன்
றனிசெயிந்திரசாலத்தைப்போலவு
மனனின்கற்பனையான்வரும்யாக்கையை
வினையின்கட்டறமெய்யெனற்பாலதோ.

839 *இடையுறுமென்பினைநரம்பினார்த்திடாப்
புடையுறுமிறைச்சியாற்பொதிந்துபோக்கற
மிடைதருதோலினுஞ்வேயப்பட்டதோ
ருடலினையானெனவுரைக்கலொன்றுமோ.

### பிரமோத்தரகாண்டம்.

840 பண்டைவாசனைதொக்கபயிற்சியாற்
கொண்டகாயநிலையெனக்கொள்வரோ
வண்டரேனும்பிறப்புளதாமெனின்
விண்டுகாயமிறப்பதுமெய்பரோ.

841 படர்கிரித்தலைப்பான்மதிபோற்கரிப்
பிடர்நிழற்றுகவிகையிற்போர்ந்தவர்
கடனிலத்திற்கவிழ்ந்தனரன்றிமற்
றுடலெடுத்தெவர்சாவையொருவினார்.

### சிவதருமோத்தரம்.

842 *பொல்லாதபுலையுடலைப்புழுப்பொதிந்தபோர்வைதனை
நில்லாதநீரெழுத்தைநிகரிலிதன்றிருவாக்கைக்
கல்லாதார்பொருளெனவேகாண்பதனைக்கலந்தறிந்து
நல்லார்கள்பொருளெனவேபொருகணமுநாடாரே.

843 *தன்னுடலத்தருவருப்பைத்தானறிந்துஞ்சரீரத்து
ளென்னிருப்பாமெனத்துளங்கியிளையாதவிழுதைக்குப்
பன்முறையானுடற்பழுதைப்†பாடித்தும்பயனில்லைச்
சொன்னிரையிற்றுணிவாரோகாட்சியினிற்றுணியாரே.

844 *பொற்கடத்துண்மலம்பொருத்திற்புல்லியரும்பொருணசையா
லக்கடத்தைப்பற்றிபிடாரங்கையினாலவனிதனின்
மக்கடமதுடலினைத்தாமலபாண்டமெனவறிந்து
மெக்கணக்காலிகழாதேயருவருப்பற்றிருக்கின்றார்.

### பிரபுலிங்கலீலை.

845 பிறந்தவாகமொன்றிறந்திடாப்பெருமையுமுடைத்தோ
வெறிந்தவான்சிலைவீழ்ந்திடாதிருப்பதிங்கில்லை

† பாடித்தல் = சொல்லுதல்.

செறிந்தகாரியமென்பதென்றாயினுஞ்சிதையு
மிறந்திடாதுகாரணமெனப்படுமதேயென்றும்

**பிரபோதசந்திரோதயம்.**

816 *எத்தனையென்றுசொல்கேனிப்படியனந்தகோடி
நித்தியமின்றித்தோன்றிநிமிடத்திலொழிந்தவென்றாற்
சத்தியமியாதுகூற்றுசகடக்கால்பிறப்புஞ்சாவு
மித்தகையறிந்துமீங்கனிருந்தவர்க்கழுங்கலாமோ.

**வைராக்கியதீபம்.**

847 *இளமையிற்பிணியற்றொருகுடைநிழற்கீழிருநிலமுழுவதும்
புரக்கும், வளமைபெற்றுடையமகற்குமெப்பொழுதுவருங்
கொல்கூற்றெனும்பயத்தானு, முளமிகப்பறைநின்றறையுமேற்
புலிமீதுடையரோமற்றையரின்பங், களிமிகுத்திருப்பர்தெளி
விலாமையின்மேற்காரியங்கருதுறுநரரே.

**பட்டினத்தடிகள்பாடல்.**

848 காதளவோடியகலசப்பாதகக்
கண்ணியர்மருங்கிற்புண்ணுடனுடங்
காதலுங்கருத்துமல்லானின்னிருதாட்
பங்கயஞ்சூடப்பாக்கியஞ்செய்யாச்
சங்கடங்கூர்ந்ததமியேன்பாங்கிருந்
தங்கோடிங்கோடலமருங்கள்வ
ரைவர்கலகமிட்டலைக்குங்கானகஞ்
சலமலப்பேழையிருவினைப்பெட்டகம்
வாதபித்தங்கோழைகுடிபுகுஞ்சீறூ
ரூத்தைப்புன்றோலுதிரக்கட்டளை
நாறுமுப்பாண்டநான்றுமுழத்தொன்பது
பீற்றற்றுண்டம்பேய்ச்சுரைத்தோட்ட
படலைப்பெரியசுடலைத்திடரு
ளாசைக்கயிற்றிலாடும்பம்பர
மோயாநோய்க்கிடமோடுமரக்கல

மாயாவிகாரமரணபஞ்சரஞ்
சோற்றுத்துருத்திதூற்றும்பத்தங்
காற்றிற்பறக்குங்கானப்பட்டம்
விதிவழித்தருமன்வெட்டுங்கட்டை
சதுர்முகப்பாணன்றைக்குஞ்சட்டை
யீமக்கனலிலிடுசிலவிறகு
காமக்கனலிற்கருகுஞ்சருகு
கிருமிகிண்டுங்கிழங்கஞ்சருடி
பவக்கொழுந்தேறுங்கவைக்கொழுகொம்பு
மணமாய்நடக்கும்வடிவின்முடிவிற்
பிணமாய்க்கிடக்கும்பிண்டம்பிணமே
லூரிற்கிடக்கவொட்டாவுபாதி
காலெதிர்குவித்தபூளைகாலைக்
கதிரெதிர்ப்பட்டகடும்பனிக்கூட்ட
மந்தரத்தியங்குமிந்திரசாப
மதிருமேகத்துருவினருநிழ
னீரிற்குமிழிநீர்மேலெழுத்து
கண்டுயில்கனவிற்கண்டகாட்சி
யதனிலும்பொல்லாமாயக்களங்க
மமையுமமையும்பிரானேயமையு
மிமையவல்லிவாழியென்றேத்த
வானந்தத்தாண்டவங்காட்டி
யாண்டுகொண்டருள்கைநின்னருளினுக்கழகே.

849 வரிக்கோலவேல்விழியாரனுராகமயக்கிற்சென்று
சரிக்கோதுவெனெழுத்தஞ்சுஞ்சொலேன்றமியேனுடல
நரிக்கோகழுகுபருந்தினுக்கோவெய்யநாய்தனக்கோ
வெரிக்கோவிரையெதுக்கோவிறைவாகச்சியேகம்பனே.

850 ஊற்றைச்சரீரத்தையாபாசக்கொட்டிலையூன்பொதிந்த
பீற்றற்றுருத்தியைச்சோறிடுந்தோற்பையைப்பேசரிய

காற்றிற்பொதிந்தநிலையற்றபாண்டத்தைக்காதல்செய்தே
யேற்றுத்திரிந்துவிட்டேனிறைவாகச்சியேகம்பனே.

851 காம்பிணங்கும்பணைத்தோளார்க்கும்பொன்னுக்குங்காசினிக்குந்
தாம்பிணங்கும்பலவாசையும்விட்டுத்தனித்துச்செத்துப்
போம்பிணந்தன்னைத்திரளாகக்கூடிப்புரண்டினிமேற்
சாம்பிணங்கத்துதையோவென்செய்வேன்றில்லைச்சங்கரனே.

852 முடிசார்ந்தமன்னருமற்றுமுள்ளோருமுடிவிலொரு
பிடிசாம்பராய்வெந்துமண்ணாவதுங்கண்டுபின்னுமிந்தப்
படிசார்ந்தவாழ்வைநினைப்பதல்லாற்பொன்னினம்பலவ
ரடிசார்ந்துநாமுய்யவேண்டுமென்றேயறிவாரில்லையே.

853 எரியெனக்கென்னும்புழுவோவெனக்கென்னுமிந்தமண்ணுஞ்
சரியெனக்கென்னும்பருந்தோவெனக்கெனுந்தான்புசிக்க
நரியெனக்கென்னும்புன்னாயெனக்கென்னுமிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தேனிதனாலென்னபேறெனக்கே.

854 தாயாருஞ்சுற்றமும்பெண்டிருங்கைவிட்டுத்தாழ்த்திடுநா
ணீயாருநானாரெனப்பகர்வாரந்தநேரத்திலே
நோயாரும்வந்துகுடிகொள்வரேகொண்டநோயுமொரு
பாயாருநீயுமல்லாற்பின்னையேதுநட்பாமுடலே.

855 ஆயும்பொழுதுமயிர்க்கால்கடோறுமருங்கிருமி
தோயுமலக்கூட்டையாகியகாயத்தைச்சுட்டுவிட்டாற்
பேயுநடனமிடுங்கடமாமென்றுபேசுவதை
நீயுமறிந்திலையோபொருட்டேநினைந்தனையே.

856 நாய்க்கொருசூலுமதற்கோர்மருத்துவநாட்டிலுண்டோ
பேய்க்கொருஞானம்பிடிபடுமோபெருங்காஞ்சிரங்கா
யாக்குவாராதநற்றுவாராதுபோலுடம்பு
தீக்கிரையாவதல்லாலேதுக்காமிதைச்செப்புமினே.

857 காடோசெடியோகடற்புறமோகனமேமிகுந்த
நாடோநகரோநகர்நடுவோநலமேமிகுந்த

வீடோபுறந்திண்ணையோ தமியேனுடல்வீழுமிட
நீடோய்கழுக்குன்றிலீசாவுயிர்த்துணை நின்பதமே.

858 பத்தும்புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடைசுற்றி
முத்தும்பவளமும்பூண்டோடியாடிமுடிந்தபின்பு
செத்துக்கிடக்கும்பிணத்தருகேயினிச்சாம்பிணங்கள்
கத்துங்கணக்கென்னகாண்கயிலாபுரிக்காளத்தியே.

859 ஒன்பதுவாய்த்தோற்பைக்கொருநாளைப்போலவே
யன்புவைத்துநெஞ்சேயலைந்தாயே—வன்கழுக்க
டத்தித்தத்திச்சட்டைதட்டிக்கட்டிப்புட்டுக்
கத்திக்குத்தித்தின்னக்கண்டு.

860 இன்னம்பிறக்கவிசைவையோநெஞ்சமே
மன்னரிவரென்றிருந்துவாழ்வாரை—முன்ன
மெரிந்தகட்டைமீதிலிணைக்கோவணந்தை
யுரிந்துருட்டிப்போட்டதுகண்டு.

861 முதற்சங்கமுதூட்டுமொய்குழலார்தம்மை
நடுச்சங்கநல்விலங்குபூட்டுங்—கடைச்சங்க
மாம்போதெனவூதுமம்மட்டோவிம்மட்டோ
நாம்பூமிவாழ்ந்தநலம்.

862 இப்பிறப்பைநம்பியிருப்பாரோநெஞ்சமே
வைப்பிருக்கவாயின்மனையிருக்கச்—சொப்பனம்போல்
விக்கிப்பற்கிட்டக்கண்மெத்தப்பஞ்சிட்டப்பைக்
கக்கிச்செத்துக்கொட்டக்கண்டு.

863 மேலுமிருக்கவிரும்பினையேவெள்விடையோன்
சீலமறிந்திலையேசிந்தையே—கால்கைக்குக்
கொட்டையிட்டுமெத்தையிட்டுக்குத்திமொத்தப்பட்டவுடல்
கட்டையிட்டுச்சுட்டுவிடக்கண்டு.

## தாயுமானவர்பாடல்.

864 காகமோடுகழுகலகைநாய்நரிகள்
சுற்றுசோறிடுதுருத்தியைக்

காலிரண்டுவளைசல்பெற்றவளர்
காமவேணடனசாலையை
மோகவாசைமுறியிட்டபெட்டிமைமு
மலமிருந்தொழுகுகேணியை
மொய்த்துவெங்கிருமிதத்துகும்பியை
முடங்கலார்கிடைசாக்கினை
மாகவிந்திரதனுமின்னையொத்திலக
வேதமோதியகுலாலனார்
வனையவெய்யதடிகாரனையமன்
வந்தடிக்குமொருமட்கலத்
தேகமானபொய்யைமெய்யெனக்கருதி
யையவையமிசைவாடவோ
தெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.

865 புன்புலானாம்பென்புடைப்பொய்யுட
லன்பர்யார்க்குமருவருப்பல்லவோ
வென்பொலாமணியேயிறையேயித்தாற்
றுன்பமன்றிச்சுகமொன்றுமில்லையே.

866 சுக்கிலமுநீருஞ்சொரிமலமுநாறுமுடற்
புக்குழலும்வாஞ்சையினிப்போதுமென்பதெந்நாளோ.

867 நீர்க்குமிழிபூணமைத்துநின்றாலுநில்லாமெய்
பார்க்குமிடத்திதன்மேற்பற்றறுவதெந்நாளோ.

868 காக்கைநரிசெந்நாய்கழுகொருநாட்கூடியுண்டு
தேக்குவிருந்தாமுடலைச்சீயென்பதெந்நாளோ.

869 செங்கிருமியாதிசெனித்தசென்மபூமியினை
யிங்கெனுடலென்னுமிழுக்கொழிவதெந்நாளோ.

870 என்றுமழியுமிக்காயம்இத்தையேதக்குமெய்யென்றிருந்திருலகி
லொன்றுமறியாதநீரோரயமனுலைவந்தாற்சொல்லவுத்தா
[முண்டோ,

871 வயதும்படவெழுந்து பிணியுந்திமிதிமென்று
வாலுஞ்செயலழிந்துளிருமலுமாகி
பனமுஞ்செலுதலின்றிவிழியுஞ்சுடர்களின்று
முகமுங்களைகளின்றுசரியெனநாடி
மனையின்புறவிருந்தவினமுங்குலைகுலைந்து
கலகஞ்செயவிருண்டயமன்வரும்வேளை
யேதுதுணைபழிகாரமனமே.

### இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி.

872 நாயினுக்கிரையோநரியினுக்கிரையோநருநடைக்குழிவிழி
பிறழ்பற், பேயினுக்கிரையோகழுகினுக்கிரையோபெரிதுநாறிய
புழுக்குரம்பை, யீயினுக்கிரையோயாதினுக்கிரையோயான்சுமந்
துழன்றிடப்பணித்தாய், தாயினுக்கழகோகுழவியைவருத்தல்
சாற்றிடாயிளசைவானவனே.

873 என்பினைநரம்பைமூளையைமயிரையிறைச்சியைக்குருதிசுக்கிலத்
தைப், பின்புறந்துவக்கைவேறுவேறாகப்பிரித்துப்பைம்மறி
யெனநோக்கி, யன்புறமறிவாற்பௌதிகமெனநீத்தாண்டமா
விளசைநாயகன்ற, னின்பவாரிதியிற்றிளைத்திடப்பெறாதார்க்
கிறப்பதும்பிறப்பதுமியல்பே.

### நன்னெறி.

874 வருந்துமுயிரொன்பான்வாயிலுடம்பிற்
பொருந்துதறானேபுதுமை — திருந்திழாய்
சீதநீர்பொள்ளற்சிறுகுடத்து நில்லாது
வீதலோநிற்றல்வியப்பு.

### குசேலோபாக்கியானம்.

875 சளசளவெனவாயூறறடையின்றியொழுகப்பற்போய்த்
தளர்வொடுமெலிந்துகூனித்தசையறவற்றிமூற்றிக்
கிளர்நடையொழிந்துபாயல்கிடைகொளுங்கிழவுத்தன்மை
யுளவுகொண்டிலர்கொலூற்றவிளமையோர்க்கங்களிப்பார்,

876 மானமற்றிழிவுபூண்டுவளமனைக்கடைதோறெய்தி
யீனமுற்றிரந்திரந்திவ்வுடல்பருத்திடச்செய்தாலுந்
தூநகைக்கரியவாட்கட்சுடர்த்தொடிநிலைப்பதன்று
பேனமார்வெள்ளநீரிற்பிறந்திடுங்குமிழிபோலும்.

## புறப்பொருள்வெண்பாமாலை.

877 ஆமினிமூப்புமகன்றதிளமையுந்
தாமினிநோயுந்தலைவரும்—யாமினி
மெய்யைந்துமீதூரவைகாதுமேல்வந்த
வையைந்துமாய்வதறிவு.

## சூளாமணி.

878 எரிபுரைபெழிலதாயவிளந்தளிரிரண்டுநாளின்
மரகதவுருவமெய்திமற்றதுபசலைகொண்டு
கருகிலையாகிவீழ்ந்துகரிந்துமண்ணாதல்கண்டும்
வெருவிலர்வாழ்துமென்பார்வெளிற்றினைவிலக்கலாமோ.

879 தொகைமலரலங்கல்சூடித்தூநறுஞ்சுண்ணமப்பிப்
புகைநனிகமழவூட்டிப்புறஞ்செயப்பட்டமேனி
சிகையினோர்சிறுமுட்டீண்டச்சிதைந்தழுக்கொழுகுமாயி
னகைபெரிதுடைத்துநாணுமிதனைநாமகிழ்தனெஞ்சே.

880 ஒழுகியநடையுநீருமுதலனைத்தகப்பலூறு
மழுகலிவ்வள்ளல்யாக்கைபகம்புறமாயிற்றாயிற்
கழுகொடுகவருங்காக்கைகைத்தடிகொண்டுகாத்து
மழுகுளசுழலுமன்னோவாயிரச்சாதிமாதோ.

## மேருமந்தரபுராணம்.

881 *என்பினைநரம்பிற்பின்னியுதிரந்தோய்த்திறைச்சிமெத்திப்
புன்புறந்தோலின்மூடியழுக்கொடுபுழுக்கள்சோரு
மொன்பதுவாயிற்றாயவூன்பயில்குரம்பைதன்மே
லன்பறாமாநதர்கண்டாயறிவினுற்சிறியநீரார்.

### யசோதரகாவியம்.

882 *வந்துடன்வணங்கும்வானோர்மணிபுனைமகுடகோடி
தந்திருவடிகளைந்தாந்தமனியப்பீடமாக
விந்திரவிபவம்பெற்ற விமையவரிறைவரேனுந்
தந்திருவுருவம்பொன்றத்தளர்ந்தனரனந்தமன்றே.

883 *மக்களிற்பிறவியுள்ளுமன்னர்தம்மனராகித்
திக்கெலாமடிப்படுத்துந்திகிரியஞ்செல்வரேனு
மக்குலத்துடம்புதோன்றவன்றுதொட்டின்றுகாறு
மொக்கநின்றார்கள்வையத்தொருவருமில்லையன்றே.

### சீவகசிந்தாமணி.

884 பேதைமையென்னும்வித்திற்பிறந்துபின்வினைகளென்னும்
வேதனைமரங்கணாறிவேட்கைவேர்வீழ்த்துமுற்றிக்
காதலுங்களிப்புமென்னுங்கவடுவிட்டவலம்பூத்து
மாதுயரிடும்பைகாய்த்துமரணமேகனியுமென்றாள்.

885 தேன்சென்றநெறியுந்தண்ணீர்ச்சிறுதிரைப்போர்வைபோர்த்து
மீன்சென்றநெறியும்போலவிழித்திமைப்பவர்க்குத்தோன்றா
மான்சென்றநோக்கின்மாதேமாய்ந்துபோமக்கள்யாக்கை
யூன்சென்றதேயச்சிந்தித்துகுவதோதகுவதென்றாள்.

886 பிறந்துநாம்பெற்றவாணாளித்துணையென்பதொன்று
மறிந்திலம்வாழ்துமென்னுமவாவினுளழுந்துநின்றாங்
கறந்துகூற்றுண்ணுஞான்றுகண்புதைத்திரங்கினல்லா
சிறந்தநாள்யாவர்மீட்பாரிற்றெனப்பெயர்க்கலாமோ.

887 மைதிரண்டவார்குழன்மேல்வண்டார்ப்பமல்லிகைமென்மாலை
சூடிக், கைதிரண்டவேலேந்திக்காமன்போற்காரிகையார்மருளச்
சென்று, நரைதிரண்டுகண்டங்குரைப்பவோர்தண்டூன்றியறிவிற்
றள்ளி, நெய்திரண்டாற்போலுமிழ்ந்துநிற்குமிளமையோநிலையா
தேகாண்.

888 இன்னதன்மையினருமையினெய்தியபொழுதே
பொன்னும்வெள்ளியும்புணர்ந்தெனவியற்றகம்பொருந்தி
மின்னுமொக்குளுமெனநனிவியினும்வீயும்
பின்னைவெண்மையிற்றிரண்டபின்பிழைக்கவும்பெறுமே

889 வெண்மையாயதுவீங்குபுகூன்புறயாமை
வண்ணமெய்தலும்வழுக்கவும்பெறுமதுவழுக்கா
தொண்மைவாண்மதியுருவொடுதிருவெனத்தோன்றிக்
கண்ணஞராழக்கவிழினுங்கவிழுமற்றறிநீ.

890 அழிதலின்றியங்கருநிதியிரவலர்க்கார்த்தி
முழுதும்பேர்பெறுமெல்லையுண்முரியினுமுரியும்
வழுவில்பொய்கையுண்மலரெனவளர்ந்துமைபாடிக்
கெழீஇயினரொடுங்கிளையழக்கெடுதலுங்கெடுமே.

891 கெடுதலவ்வழியில்லெனிற்கேள்விகடுறைபோய்
வடிகொள்கண்ணியர்மனங்குழைந்தநக்கனென்றிரங்கக்
கொடையுங்கோலமுங்குழுநந்தப்பழகுங்கண்டேத்த
விடையிற்செல்வுழிவிளியினும்விளியுமற்றறிநீ.

892 எரிபொன்மேகலையிலங்கரிசசிலம்பொடுசிலம்பு
மரிபொறகிண்கிணியாப்பிழையரிவையர்ப்புணர்ந்து
நெரிவில்போகத்துக்கூற்றுவன்செகுத்திடச்சிதைந்து
முரியும்பல்சனமுகம்புடைத்தகஙகுழைந்தழவே.

893 தோனமங்கையர்குவிமுலைத்தடத்திடைக்குளித்துக்
காருண்மக்களைக்கண்டுவந்தினிதினிற்கழிப்பப்
பேதுசெய்பிணிப்பெரும்புலிபாய்ந்திடப்பிணமா
யோதமாக்கடலுடைகலத்தவருற்றதுறவே.

894 காமம்மாப்பயக்கழியத்தங்கடைப்பிடிசுருங்கி
யூனர்போலத்தமுனையவிக்கூறப்பிலிலுரையாத்
தூய்மையில்புலாந்தூம்புவிட்டாம்பொருளுணர்த்தி
யீபமேயுநல்லாறுதலையிகலமர்கடந்தோய்.

895 தேங்கொள்பூங்கண்ணித் திருமுடித் திலகவெண்குடையோ
யீங்கிதன் றியுமிமையவரமையலர்க்கடந்த
தாங்குமாவண்கைச்சக்கரமிக்குயர்பிறரும்
யாங்கணராவருரொடுபேரெமக்குரையாய்.

சிலப்பதிகாரம்.

896 *கறங்கானெடுவெளியிற்நெஞ்சுடரென்ன
வொருங்குடனில்லாவுடம்பிடையுயிர்கள்.

மணிமேகலை.

897 வினையின்வந்தது வினைக்குவிளைவாயது
புனைவனநீங்கிற்புலால்புறத்திடுவது
மூத்துவிளிவுடையது தீப்பிணியிருக்கை
பற்றின்பற்றிடங்குற்றக்கொள்கலம்
புற்றடங்காவிற்செற்றச்சேக்கை
யவலக்கவலைகையாறழுங்க
றவலாவுள்ளந்தன்பாலுடையது
மக்கள்யாக்கையிது வெனவுணர்ந்து
மிக்கோயிதனைப்புறமறிப்பாராய்.

898 நரைமூதாட்டி யொருத்தியைக்காட்டித்
தண்ணறல்வண்ணந்திரிந்துவேறாகி
வெண்மணலாகியகூந்தல்காணாய்
பிறைநுதல்வண்ணங்காணாயோநீ
நரைமையிற்றிரைதோற்றகைபின்றுபது
விறல்விற்புருவமிவையுங்காணா
யிறவினுணங்கல்போன்றுவேறாயின
கழுநீர்க்கண்காண்வழுநீர்சுமந்தன
குமிழ்மூக்கிவைகாணுமிழ்சீயொழுக்குவ
நிரைமுத்தனையநகையுங்காணாய்
சுரைவித்தேய்ப்பப்பிறழ்ந்துவேறாயின
விலவிதழ்ச்செவ்வாய்காணாயோநீ
புலவுப்புண்போற்புலால்புறத்திடுவது

வள்ளைத்தாள்போல்வடிகாதிவைகா
ணுள்ளூன்வாடியவுணங்கல்போன்றன
விறும்பூதுசான்றமுலையுங்காணாய்
வெறும்பைபோலவீழ்ந்துவேறாயின
தாழ்ந்தொசிதெங்கின்மடல்போற்றிரங்கி
வீழ்ந்தனவிளவேய்த்தோளுங்காணாய்
நரம்பொடுவிடுதோலுகிர்த்தொடர்கழன்று
திரங்கியவிரல்களிவையுங்காணாய்
வாழைத்தண்டேபோன்றகுறங்கிணை
தாழைத்தண்டினுணங்கல்காணா
யாவக்கணைக்கால்காணாயோநீ
மேவியநரம்போடென்புபுறங்காட்டுவ
தளிரடிவண்ணங்காணாயோநீ
முளிமுதிர்தெங்கினுதிர்காயுணங்கல்
பூவினுஞ்சாந்தினும்புலான்மறைத்தியாத்துத்
தூசினுமணியினுந்தொல்லோர்வகுத்த
வஞ்சகந்தெரியாய்மன்னவன்மகனென.

### வளையாபதி.

899 வேற்கண்மடவார்விழைவொழியயாம்விழையக்
கோற்கணெறிகாட்டக்கொல்கூற்றுழையதா
நாற்பதிகந்தானரைத்தூதுவந்ததினி
நீத்தறணிவாநிலையாதிளமையே,

### குண்டலகேசி.

900 பாளையாந்தன்மைசெத்தும்பாலனாந்தன்மைசெத்துங்
காளையாம்பருவஞ்செத்துங்காமுறுமிளமைசெத்து
மீளுமிவ்வயதுமின்னேமேல்வருமூப்புமாகி
நாளுநாட்சாகின்றாமானமக்குநாமழாததென்னோ.

901 கோள்வலைப்பட்டுச்சாவாங்கொலைக்களங்குறித்துச்சென்றே
மீளினுமீளக்காண்டுமீட்சியொன்றானுமில்லா

நாளடியிடுதறோன்றாகமுயிர்பருகுங்கூற்றின்
வாளின்வாய்த்தலைவைப்பார்க்குச்செல்கின்றாம்வாழ்கின்றோமே.

902 நன்கெனநாளுமிதென்றிவ்வுடம்புநயக்கின்றதாயி
னொன்பதுவாயில்கடோறுமூண்ணின்றழுக்குச்சொரியத்
தின்பதோர்நாயுமிழப்பத்திசைதொறுஞ்சீப்பில்குபோழ்தி
னின்பநன்றோற்றமிதன்கணெவ்வகைபாற்கொளலாமே.

நாரதசரிதை.

903 புழுமலக்குடருண்மூழ்கிப்புலால்கமழ்வாயிற்றேப்த்து
விழுமவைகுழலியென்றும்விளங்கியகாளையென்றும்
பழுநியபிறவுமாகிப்பலபெயர்தரித்தபொல்லாக்
குழுவினையின்பமாகக்கொள்வரோகுருநிதீர்ந்தார்.

நாலடியார்.

901 மலைமிசைத்தோன்றுமதியம்போல்யானைத்
தலைமிசைக்கொண்டகுடையர்—நிலமிசைத்
துஞ்சினாரென்றெடுத்துத்தூற்றப்பட்டாரல்லா
லெஞ்சினாரிவ்வுலகத்தில்.

905 மன்றங்கறங்கமணப்பறையாயின
வன்றவர்க்காங்கேபிணப்பறையாய்—பின்றை
யொலித்தலுமுண்டாமென்றுய்ந்துபோமாறே
வலிக்குமாமாண்டார்மனம்.

906 சென்றேபெறிபவொருகால்சிறுவரை
நின்றேயெறிபபறையினை—நன்றேகாண்
முக்காலைக்கொட்டினுண்முடித்தீக்கொண்டெழுவர்
செத்தாரைச்சாவார்சுமந்து.

907 கணங்கொண்டுசுற்றத்தார்கல்லென்றலறப்
பிணங்கொண்டுகாட்டுய்ப்பார்க்கண்டு—மணங்கொண்டீண்
டுண்டுண்டுண்டென்னுமுணர்வினாற்சாற்றுமே
டொண்டொண்டொடென்னும்பறை.

† பழுநிய=முதிர்ந்த,

908 நார்த்தொடுத்தீர்க்கிலென்னன்றாய்ந்தடக்கிலென்
பார்த்துழிப்பெய்யிலென்பல்லோர்பழிக்கிலென்
றோற்பையுணின்றுதொழிலறச்செய்தூட்டுங்
கூத்தன்புறப்பட்டக்கால்.

909 படுமழைமொக்குளிற்பல்காலுந்தோன்றிக்
கெடுமிதோர்யாக்கையென்றெண்ணித்—தடுமாற்றந்
தீர்ப்பேம்யாமென்றுணருந்திண்ணறிவாளரை
நேர்ப்பார்யார்நீணிலத்தின்மேல்.

910 புன்னுனிமேனீர்போனிலையாமையென்றெண்ணி
யின்னினியேசெய்கவறவினை — யின்னினியே
நின்றானிருந்தான்கிடந்தான்றன்கேளலறச்
சென்றானெனப்படுதலான்.

911 கேளாதேவந்துகிளைகளாயிற்றோன்றி
வாளாதேபோவாரான்மாந்தர்கள்—வாளாதே
சேக்கைமரனொழியச்சேணீங்குபுட்போல
யாக்கைதமர்க்கொழியநீத்து.

912 தோற்போர்வைமேலுந்துளைபலவாய்ப்பொய்ம்மறைக்கு
மீப்போர்வைமாட்சித்துடம்பானால்—மீப்போர்வை
பொய்ம்மறையாக்காமம்புகலாதுமற்றதனைப்
பைம்மறியாப்பார்க்கப்படும்.

அறநெறிச்சாரம்.

913 *ஆசையும்பாசமுமன்புமகத்தடக்கிப்
பூசிப்பொதிந்தபுலாலுடம்பு—வூசல்
கயிறற்றாற்போலக்கிடக்குமேகூற்றந்
தெயிறுற்றிடைமுரிந்தக்கால்.

914 *தெரிவிலிளமையுந்தீப்பிணியுமூப்பும்
பிரிவுந்துயிலுமொரீஇப்—பருவந்து
பத்தெட்டுநாளைப்பயனிலாவாழ்க்கைக்கு
வித்துக்குற்றுண்பார்பலர்.

915 *மூப்புப்பிணியேதலைப்பிரிவுநல்குரவு
சாக்காடுமெல்லாஞ்சலமிலவாய்—நோக்கிர்
பருந்துக்கிரையாமிவ்யாக்கையைப்பெற்றான்
மருந்துமறப்பதோமாண்பு.

நல்வழி.

916 *எல்லாப்படியாலுமெண்ணினாலிவ்வுடம்பு
பொல்லாப்புழுமலிநோய்ப்புன்குரம்பை—நல்லா
ரறிந்திருப்பாராதலினாலாங்கமலநீர்போற்
பிரிந்திருப்பார்பேசார்பிறர்க்கு.

திருக்குறள்.

917 குடம்பைதனித்தொழியப்புட்பறந்தற்றே
யுடம்போடுயிரிடைநட்பு.

918 உறங்குவதுபோலுஞ்சாக்காடுறங்கி
விழிப்பதுபோலும்பிறப்பு.

919 புக்கிலமைந்தின்றுகொல்லோவுடம்பினுட்
டுச்சிலிருந்தவுயிர்க்கு.

ஆகச்செய்யுள் 118. யாக்கைநிலையாமை முற்றிற்று.

---

## ௨௫-அதி. செல்வநிலையாமை.

திருமந்திரம்.

920 *இயக்குறுதிங்களிருட்பிழம்போக்குந்
துயக்குறுசெல்வத்தைச்சொல்லவும்வேண்டா
மயக்குறநாடுமின்வானவர்கோனைப்
பெயற்கொண்டல்போலப்பெருஞ்செல்வமாமே.

921 *தன்னதுசாயைதனக்குதவாதுகண்
டென்னதுமாடென்றிருப்பர்களேழைக
ளுன்னுயிர்போமுடலொக்கப்பிறந்தது
கண்ணதுகாணொளிகண்டுகொளீரே,

922 *ஈட்டியதேன்பூமணங்கண்டிரதமுங்
கூட்டிக்கொணர்ந்தொருகொம்பிடைவைத்திடு
மோட்டித்துரத்திட்டதுவலியார்கொளக்
காட்டிக்கொடுத்தவைகைவிட்டவாறே.

கந்தபுராணம்.

923 காடுபோந்தனனிந்திரன்பொன்னகர்கரிந்து
பாடுசேர்ந்ததுசயந்தனுஞ்சிறையிடைப்பட்டா
னாடில்விண்பதச்செய்கையீதெம்பிரானல்கும்
வீடதேயலாற்றுன்பறுமார்க்கம்வேறுண்டோ.

பகவதம்.

924 *வெறுத்துவாரியினொருபொருள்வீழ்த்தினும்விரும்ப
மறுத்துவந்துதன்மருங்குறுமவற்குரித்தாயி
னிறுத்தொர்செப்பினுள்வைத்துறைநின்றுதான்றுனே
பொறுத்துக்காப்பினுமாய்ந்துபோம்போம்பொருண்மாதோ.

சிவ-தருந்திரட்டு.

925 *துப்புறுபொருளினைத்தேடத்துன்பமாங்
கைப்பொருளுண்டெனிற்கருத்துமோகமா
மப்பொருளழிந்திடும்போதுமல்லலா
மெப்பொழுதோபொருளின்பமாவதே.

பட்டினத்தடிகள்பாடல்.

926 தெய்வச்சிதம்பரதேவாவுன்சித்தந்திருப்பிவிட்டாற்
பொய்வைத்தசொப்பனமாமன்னர்வாழ்வும்புவியுமெங்கே
மெய்வைத்தசெல்வமெங்கேமண்டலீகர்தம்மேடையெங்கே
கைவைத்தநாடகசாலையெங்கேயிதுகண்மயக்கே.

927 வாதுற்றதிண்புயரண்ணாமலையர்மலர்ப்பதத்தைப்
போதுற்றெப்போதும்புகலுநெஞ்சேயிந்தப்பூதலத்திற்
றீதுற்றசெல்வமென்றேடிப்புதைத்ததிரவியமென்
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே.

### குசேலோபாக்கியானம்.

928 முறைதவிர்கொடுங்கோன்மன்னர்முனிவிற்குநனியுமச்சங்
கறைகெழுகரவுசெய்வார்கரத்திற்குமழற்குமச்ச
மறைவறுதாயமாக்கள்வெளவுவரென்றுமச்ச
மறைபொருள்பெற்றாரல்லாரச்சமேபெற்றார்போலும்.

929 ஒல்லொழுக்கினரைத்தீயவொழுக்கரென்றுரைக்கச்செய்யும்
புல்லொழுக்கினரைத்தூயபுலத்தரென்றுரைக்கச்செய்யு
நல்லகற்புடையமாதர்நலத்தையஞ்சாமைசெய்யும்
பல்வகைத்துயருஞ்செய்யும்பாழ்ம்பொருள்பற்றுள்ளார்க்கே.

930 கோடிபொன்னளிப்பனின்றேகோடிரோர்மாத்திரைக்கு
ளோடியகிளைக்கோர்வார்த்தையுரைத்தடைகுவனென்றாலுந்
தேடியகாலதூதர்சிமிழ்த்தல்விட்டொழிவரேகொல்
வாடியமருங்குனங்காய்மாண்பொருட்பயன்கண்டாயோ.

931 பொருவறுபந்தமெல்லாம்புணர்த்திடுந்தெய்வசிந்தை
யொருவமேவிட்டுநிற்குமுறக்கமுமிறக்கச்செய்யுங்
கருவினுட்புகுத்துமினனகரிசுகண்டதனாலன்றோ
விருநிலத்திடைவெறுக்கையெனமனார்புலமைசான்றோர்.

932 பல்கதிர்விரித்துத்தோன்றிப்பாடுசெய்கதிரேபோல
மல்லனீருலகிற்றோன்றிமறைந்திடுநம்மைவிட்டுச்
செல்வமென்றுறுவதற்குஞ்செல்வமென்றுரைக்கும்பேர்நன்
றல்லலைவிளைப்பதாகாதரும்பெறற்செல்வம்பாவாய்.

933 இம்மைதனின்மற்றிரும்பொருளையீட்டல்காத்தலிழத்தலென
வெம்மைபுரிமூவகைத்துயரும்விளையாநிற்கும்பாவத்தா
லம்மைநிரயத்துயருமுறுமந்தோசீசீயிப்பொருளைச்
செம்மையுடையோர்வேண்டுமெனச்சிந்தித்திடுவரோமறந்தும்.

### சூளாமணி.

934 திருமகணிலைமையுஞ்செல்வர்கேட்டிரேன்
மருவியமணிதரையிகந்துமற்றவள்
பொருவருபுகழினர்புதியகாமுறு
மொருவர்கண்ணுறவிலனுணர்ந்துகொண்மினே.

935 புண்ணியமுலர்ந்தபின்பொருளிலார்களைக்
கண்ணிலர் துறந்திடுங்கணிகைமார்கள்போ
லெண்ணிலளிகந்திடும்யாவர்தம்மையு
நண்ணியநண்பிலணங்கைவண்ணமே.

சீவகசிந்தாமணி.

936 முல்லைமுகைசொரிந்தாற்போன்றினியபாலடிசின்மகளிரேந்த
நல்லகருனையாளுள்வாயும்பொற்கலத்துநயந்துண்டார்க
ளல்லலடையவடகிடுமிரேட்டகத்தென்றயில்வார்க்கண்டுஞ்
செல்வநமராங்காணினையனமின்செய்தவமேநினைமின்கண்டீர்.

937 அம்பொற்கலத்துளடிபாலமர்ந்துண்ணுவரிவையந்தோ
வெம்பிப்பசிநலியவெவ்வினையின்வேறாயோர்கல்கையேந்திக்
கொம்பிற்கொளவொசிந்துபிச்சையெனக்கூறிநிற்பாட்கண்டு
நம்பனமினசெல்வநமராங்காணல்லறமேநினைமின்கண்டீர்.

938 வண்ணத்துகிலுடுப்பின்வாய்விட்டழுவதுபோல்வருந்துமல்கு
னண்ணூச்சிறுகூறைபாகமோர்கைபாகமுடித்துகாஞ
மண்ணூந்தடகுரீஇயந்தோவினையேயென்றழுவாட்கண்டு
நண்ணன்மின்செல்வநமராங்காணல்லறமேநினைமின்கண்டீர்.

வளையாபதி.

939 ஈண்டலரிதாய்க்கெடுதலெளிதாகி
நாண்டல்சிறிதாய்நடுக்கம்பலதருஉம்
மாண்பினிபற்கைமருவிலநம்பொருளை
வேண்டாதொழிந்தார்விறலோவிழுமிதே.

940 *வெள்ளமறவிவிறல்வேந்நர்தீத்தாயங்
கள்ளரென்றிவ்வாற்றிற்கைகரப்பத்தீர்ந்தகலு
முள்ளினுறபொருளையொட்டாதொழிந்தவா
றெள்ளும்பெருந்துயர்நோயெவ்வமிகப்பவே.

941 *இன்மையிழிவாமுடைமையுயிர்க்கச்ச
மன்னல்சிறிதாய்மயக்கம்பெரிதாகிப்
புன்மையுறுக்கும்புரையிலரும்பொருளைத்
துன்றுதொழிந்தார்துறவோவிழுமிதே.

### பெருந்தேவனார்பாரதம்.

942 தீயாலோநீராலோதேர்வேந்தர்தம்மாலோ
மாயாததெவ்வர்வலியாலோ—யாதாலோ
விப்பொருள்போய்மாய்கின்றதென்றுபொருள்வைத்தார்க
ளெப்பொழுதுநீங்காரிடர்.

### நாலடியார்.

943 அறுசுவையுண்டியமர்ந்தில்லாளூட்ட
மறுசிகைநீக்கியுண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பரோரிடத்துக்கூழெனிற்செல்வமொன்
றுண்டாகவைக்கற்பாற்றன்று.

944 யானையெருத்தம்பொலியக்குடைநிழற்கீழ்ச்
சேனைத்தலைவராய்ச்சென்றாரு—மேனை
வினையுலப்பவேறாகிவீழ்வர்தாங்கொண்ட
மனையாளைமாற்றார்கொள.

945 செல்வர்யாமென்றுதாஞ்செல்வுழியெண்ணாத
புல்லறிவாளர்பெருஞ்செல்வ—மெல்லிற்
கருங்கொண்மூவாய்திறந்தமின்னுப்போற்றோன்றி
மருங்கறக்கெட்டுவிடும்.

946 ஈட்டலுந்துன்பமற்றீட்டியவொண்பொருளைக்
காத்தலுமாங்கேகடுந்துன்பங்—காத்தல்
குறைபடிற்றுன்பங்கெடிற்றுன்பந்துன்பக்
குறைபதிமற்றைப்பொருள்.

### திருக்குறள்.

947 கூத்தாட்டவைக்குழாத்தற்றேபெருஞ்செல்வம்
போக்குமதுவிளிந்தற்று.

948 அற்காவியல்பிற்றுச்செல்வமது பெற்று
லற்குபவாங்கேசெயல்.

ஆகச்செய்யுள் 29 செல்வநிலையாமைமுற்றிற்று.

---

## உகூ-அதி. துறவு.

---

### கந்தபுராணம்.

949 செம்மையாகியசிந்தையர்சீரியோர்
வெம்மையென்பதைவீட்டிவிளங்கினோர்
தம்மையுந்துறந்தேதலைநின்றவ
ரிம்மைதன்னினுமின்பத்தைமேவுவார்.

950 இன்மையாவதியாண்டுமில்லாதவர்
நன்மையென்பதியல்பெனநண்ணினோர்
புன்மையானபொருள்விரும்பாரவர்
தன்மையாவரேசாற்றவல்லார்களே.

### காஞ்சிப்புராணம்.

951 துறவேயறங்களெவற்றினுக்கும்பெரிதாம்விடையூர்தோன்ற
லுக்குந், துறவேயுவகைவரச்செய்யுந்துறவேயன்மாலுலகளிக்
குந், துறவேயீசனிடத்திருத்துமெவருமேலாச்சொல்லுவதுந்
துறவேயாமென்றெழுந்துநின்றுசொற்றான்சைவத்துருவாசன்.

### தணிகைப்புராணம்.

952 மனைக்குரிமனைபாடன்னைவாய்த்தநன்மைந்தர்தம்மைக்
கனைத்தலைசருட்டும்வேலைக்கடனிகர்செல்வந்தன்னை
யெனைத்தையுமிலம்பாடென்றேயிம்மெனத்துறந்துபெய்மான்
றனைச்சரணடைந்துளாரேதனைநிகரில்லாச்செல்வர்.

953 சிற்றிவிழைத்தாடுநர்பாற்செறிந்தாடும்விளையாட்டுப்
பொற்றமனையறம்புரிகாற்புந்திசெயினைகைதால்போ
லற்றமிலாவில்லறமென்றுதரிக்கப்படுவதரூட்
[illegible]ற்றுமிருந்்பொருண்ணிற்பழுதெனத்தோற்றுவதன்றே.

### திருக்கூவப்புராணம்.

954 உறவுதந்தைதாயொண்டொடிமாதரார்
சிறுவர்வண்புவிசெல்வம்பெரும்புகழ்
பிறவினும்படுமாசைபிரிந்தமெய்த்
துறவினல்லதுதுன்பமகலுமோ.

### சிவதருமோத்தரம்.

955 *மண்ணினுந்தனத்தினுமனைக்குவாய்த்தநற்
பெண்ணினுமகவினும்பெரியபேரினுந்
துண்ணெனவிழைவினைத்துறந்ததூயரே
விண்ணினுமின்புடன்விளங்கிமேவுவார்.

### ஞானவாசிட்டம்.

956 *வருத்தமற்றச்சஞ்சோகமதமின்றிநன்னூற்பின்போ
யொருத்தராலேவலின்றியுலாவுகநசிக்கவேண்டா
வருத்தங்களகர்த்தமாகுமளவில்போகங்களேயாம்
பெருத்தவாபத்தாஞ்செல்வம்பேரின்பநிராசைதானே.

957 *இடும்பைகூர்சங்கமின்றியியற்கையாசாரமெய்திக்
குடும்பமாந்துயர்சிற்றின்பங்குறித்திடாப்பெருமையோர்க்கு
நெடும்புகழ்வாணாள்செல்வநிறைகுணமனைத்துமுண்டாய்ப்
படும்பலன்வசந்தகாலக்கொடிகள்போற்பலிக்குமன்றே.

### ஒழிவிலொடுக்கம்.

958 *நித்திரைசெய்வீட்டினைநப்பும்பெரும்படையு
முட்டிப்புறப்பட்டார்முற்றத்தே—பித்தரைப்போ
னில்லென்றுசொன்னாலுநிற்பரோவப்படிக்கா
ணில்லறத்தைநீத்தாரியல்பு.

### சிவ-மெஞ்ஞானவிளக்கம்.

959 *சிறப்பநோயாற்றுன்பஞ்செடிகொண்மூப்பதனாற்றுன்ப
மறப்புறத்தியக்கஞ்செய்யுமரணவேதனையாற்றுன்பம்
பிறப்பவரெக்காலத்தும்பெறுவதுதுன்பமானுந்
துறப்பதேகருமந்துன்பப்பிறவியாற்றுயர்தீர.

960 *எவ்விடத்தினுமெக்காலுமியாவையுந் துன்பமானாற்
பொய்வகைப்பிறவிநீங்கப்போகுமாறதனைநாடி
யைவகைத்துவந்துவங்கண்மயக்கினையறத்துறந்தே
யுய்வகைத்திறத்தையோர்வானொருப்படலடுப்பதையா.

சிவ-வினாவிளக்கம்.

961 *உடலினைப்பேணல்விட்டாரொன்றியசெல்வம்விட்டார்
விடலருஞ்சுற்றம்விட்டார்வேட்கைவேரோடும்விட்டா
ரிடனுடைக்குலமும்விட்டார்யானெனதறவேவிட்டார்
கடனுடைக்கல்விவிட்டார்கற்பனைமுழுதும்விட்டார்.

962 *ஊரொடுப்பேரும்விட்டாருலகியன்முழுதும்விட்டா
ராரொடுமார்வம்விட்டாரதனினுஞ்செற்றம்விட்டார்
பாரொடும்விண்ணுந்துன்பமெனப்பழுதறவேவிட்டார்
தேரியவெனதையும்பொய்த்தேரெனநகைசெய்துவிட்டார்.

சிவ-துறந்திரட்டு.

963 *கருப்பமென்னுமக்காரிருட்சிறையினிற்கதுவு
நெருப்பில்வெந்துளநிலைகெடத்தலைதகர்ந்திடவே
பொருப்பினின்றவிழ்பவனெனப்போந்தமைநினையா
விருப்புநெஞ்சினர்க்கென்னையாமினியியம்புவதே.

964 *குழவியிலறியாத்துன்பங்குவாரற்குமாரத்துன்பங்
கழிதருகாமநோயாற்களையாம்பருவத்துன்பம்
விழைவுறபோகஞ்சுட்டிவெறுக்கையைவிரும்பிமேவுந்
தொழிலினாற்றுன்பமந்தத்தொழிலிடையூறாற்றுன்பம்.

965 *அல்லலாற்செல்வந்துய்யமதினுகல்துராவுதுன்பங்
கல்வியாங்காரத்துன்பங்கற்றிலனாயிற்றுன்ப
மல்லன்மாஞாலர்தன்னில்வலிமிகுமதத்தாற்றுன்ப
மில்லையெல்வலியோர்தம்மாலிடருறலாற்றுன்பம்.

### தாயுமானவர்பாடல்.

966 அந்தக்கரணமடங்கத் துறப்பதுவே
யெந்தத் துறவினுநன்றெந்தாய்பராபரமே.

967 நித்திரையிற்செத்தபிணநேருமுடற்கிச்சைவையாச்
சுத்தர்களேநல்லதுறவோர்பராபரமே.

### நீதிநெறிவிளக்கம்.

968 பெண்மைவியவார்பெபருமெடுத்தோதார்
கண்ணோடுநெஞ்சுறைப்பநோக்குறார்—பண்ணோடு
பாடல்செவிமடார்பண்பல்லபாராட்டார்
வீடில்புலப்பகையினோர்.

### இராமாயணம்.

969 மக்களைக்குருக்கடம்மைமாதரைமற்றுள்ளோரை
யொக்குமின்னுயிரன்னாரையுதவிசெய்தாரோடொன்றத்
துக்கமித்தொடர்ச்சியென்றுதுறப்பராற்றுணிவுபூண்டோர்
மிக்கதுநலனேயாகிவீடுபேறளிக்குமன்றே.

### மணிமேகலை.

970 பிறந்தோருறுவதுபெருகியதுன்பம்
பிறவாருறுவதுபெரும்பேரின்பம்
பற்றின்வருவதுமுன்னதுபின்ன
தற்றோருறுவதறிகென்றருளி.

### வளையாபதி.

971 *உற்றவுடிரமொழிப்பான்கலிங்கதனை
மற்றதுதோய்த்துக்கழுவுதலென்னைக்கும்
பற்றினனெயபாவத்தைமீட்டும்
பற்றொடுநின்றுபறைக்குறுமாறே.

### அறநெறிச்சாரம்.

972 *நீக்கநோய்மூப்புத்தலைப்பிரிவுநல்குரவு
சாக்காடென்றைந்துகளிறழக்கப்—போக்கரியு
துன்பத்துட்டுன்பமுழப்பர்துறந்தெய்து
மின்பத்தியல்பறியாதார்.

### திருக்குறள்.

973 யாதனின்யாதனினீங்கியானோத
லதனினதனினிலன்.

974 வேண்டினுண்டாகத்துறக்கதுறந்தபி
னீண்டியற்பாலபல.

975 அடல்வேண்டுமைந்தன்புலத்தைவிடல்வேண்டும்
வேண்டியவெல்லாமொருங்கு

976 மற்றுந்தொடர்ப்பாடெவ ங்கொல்பிறப்பறுக்க
லுற்றார்க்குடம்புமிகை.

977 யானெனதென்னுஞ்செருக்கறுப்பான்வானோர்க்
குயர்ந்தவுலகம்புகும்.

978 தலைப்பட்டார்தீரத்துறந்தார்மயங்கி
வலைப்பட்டார்மற்றையவர்.

ஆகச்செய்யுள் 30, துறவு முற்றிற்று.

---

## உஎ-அதி. அவாவறுத்தல்.

---

### திருமந்திரம்.

979 *வாசியுமூசியும்பேசிவகையினாற்
பேசியிருந்துபிதற்றிப்பயனில்லை
யாசையுமன்புமறுமினறுத்தபி
னீசனிருந்தவிடமெளிதாமே.

980 *மாடத்துளானலன்மண்டபத்தானலன்
கூடத்துளானலன்கோயிலுள்ளானலன்
வேடத்துளானலன்வேட்கைவிட்டார்நெஞ்சின்
மூடத்துளேநின்றுமுத்திதந்தானே.

981 *ஆசையறுமின்களாசையறுமின்க
ளீசனோடாயினுமாசையறுமின்க
ளாசைபடப்படவாய்வருந்துன்பங்க
ளாசைவிடவிடவானந்தமாமே.

## தணிகைப்புராணம்.

982 மன்னியசெல்வராகிவாழினும்வளமிக்கீண்டித்
தன்னினமேம்பட்டார்க்கண்டுதழைத்தவர்போறல்வேட்டுப்
பின்னருமீட்டியீட்டிப்பேதுறலன்றிப்பெற்ற
நன்னிதிகொண்டுநீதிநடத்துதலேவர்வல்லார்.

## சேதுபுராணம்.

983 கழைகொள்சாறுநிம்பநெட்டிலைக்கொள்வாரிகாஞ்சிரம்
பழம்வருக்கையுதவுமிக்கபழமரங்கொள்பாவையா
மிழைகொளேமநாட்டரம்பையென்னுமங்கையாயினும்
விழைவதில்லையாயின்மேருவெற்புமற்பமாகுமால்.

984 எவரையும்மனந்திரிப்பதுமீன்றவர்தமக்குத்
தவறிழைத்திடப்புரிவதுந்தையலார்தங்கள்
கவரில்கற்பினையழிப்பதுங்கற்குநூற்கலைக
ளவையெலாங்கெடக்கெடுப்பதும்பொருள்விருப்பன்றே.

## திருக்கூவப்புராணம்.

985 ஈட்டுறுங்காலையினேமஞ்செய்வுழிக்
கூட்டலிற்றயரினைக்குறுகுஞ்சுற்றமும்
வாட்டிடும்பகைஞராம்வகைசெய்வித்தலின்
வேட்டிடும்வெறுக்கையைவெறுக்கையின்பமே.

## பாகவதம்.

986 * ஆசையாலருந்தசராகியருநிதிவருந்திப்பெற்றோர்
நேசமாராசர்கள்ளர்நெடும்பகைமுதலினோராற்
காசுலாம்வெருவுட்கொள்வார்கண்படைசிறிதுங்கொள்ளார்
நாசமேயடைவார்காமர்விட்டவர்நலன்றுய்ப்பாரால்.

987 * இருள்படுகாட்டினூடேயிருந்துழல்சிதடராயோர்
தெருள்படுநகரந்தாமேசேரதாறிகலார்போன்
மருள்படுகாமமுன்னிவருவினைபயலாநிற்போர்
பொருள்படுநலஞ்செய்வீட்டிற்புகுமதாறிகலாரே.

988 *உடற்குள்வந்தெழுமொள்ளழல்போன்றபின்
கிடைத்திலாப்பொருண்மேற்கிளர்ந்தோடியே
நடக்குமாசையைநண்ணுறவப்பினு
லடக்குமந்தணரேயறிவாளரால்.

காசிரகசியம்.

989 *பெண்ணிடத்தாசையுட்சிறிதுபெற்றிடின்
மண்ணிடத்தாசையும்வந்துகூடிடு
மெண்ணிடத்தஃதுறவிரியத்தக்கதோ
கண்ணிடக்கொடியதாங்கனகவாசையே.

990 *ஆசையில்லார்களேயறவர்மேலவ
ராசையில்லார்களேயருந்தவத்தின
ராசையில்லார்களேயருட்கலப்பின
ராசையில்லார்களேயரியமுத்தர்கள்.

991 *ஆசையுட்பட்டவரல்லற்பட்டவ
ராசையுட்பட்டவரளற்றிற்பட்டவ
ராசையுட்பட்டவரயர்விற்பட்டவ
ராசையுட்பட்டவரரங்கப்பட்டவர்.

992 *மனைவியர்மக்களில்வாஞ்சையுண்மையே
புனைதருநலமெலாம்போக்கித்தாழ்த்திடு
மனைவியர்மக்களில்வாஞ்சையின்மையே
புனைதருபரகதிபொருந்தவுய்க்குமே.

993 *ஆசைசற்றிருந்திடினதினிமித்தப்பவந்
தோசைசால்வெருளியுமொருங்குநண்ணிடு
மாசையாரஃதுறமயக்கறும்முறு
†மீசையாரடிக்கலப்பிசிக்குமின்னவே.

---

† ஈசையார் - உமாதேவியையுடையார்.

### பிரபோதசந்திரோதயம்.

994 *அண்டாதபோரவலமையாததென்னே
விண்டாவுமலைபோலவேலன்டுங்கொல்வெண்சோ
றுண்டாலும்வயிறுள்ளதொருசாணிதற்கோ
கண்டார்கள்பின்சென்றுகையேற்குமாறே.

### ஞானவாசிட்டம்.

995 *பிறவிக்கடலிற்காதலெனும்பெருவாய்முதலைபிடித்தீர்க்க
விறவுச்சுழியாற்சுழலுமவர்க்கிதயநாவாயெட்டாவா
மறமுற்றுளத்தைபுளத்தாலேமாய்த்துப்பிறப்பில்வருந்தாம
லுறவுற்றுனை யீயுய்விப்பாயுயிர்க்குப்பிறராலுய்வுண்டோ.

996 *வெங்காதற்பெரும்பாம்புகெளிபுற்றுங்குடும்பபாம்வெறும்பொய்
யென்றே, யிங்காசைபறநீக்கிபெல்லையிலாப்பரமபதத்திருந்து
வாழ்வாய், சிங்காரக்கந்தர்ப்பநகரிருந்தெங்ஙனைதவுற்றென்றீதோ
நன்றே, பங்கானமனைமக்கள்வாழ்ந்தாலென்கெட்டாலென்பாச
மாயை.

997 *தாரதனமிருமென்னிற்றனையாகுமப்பாசந்தளைத்துக்கொண்டா
லாரதனையறுத்தகலுப்விரகுடையாரறிவில்லாராசைவிஞ்சிக்
கூரிதையாமப்போகத்துழன்றுழக்குங்கொடுந்துயரைக்குறித்த
போதே, தீரதையாமறிஞர்க்குவிரத்தியுளதாய்ச்சித்தந்தெளியு
மன்றே.

### ஒழிவிலொடுக்கம்.

998 *நாடுநகர்வீடுடையாடாய்தந்தைநட்புமக்கண்
மாடுகுலம்பொன்னுடைப்பினவாதனைகள்—கூடத்
தொடுத்தவலைக்கண்ணித்தொடக்கிதனையிப்போ
விடப்பெறுவாரேன்பிறப்பார்மேல்.

### பட்டினத்தடிகள்பாடல்.

999 உடைகோவணமுண்டுறங்கப்புறந்திண்ணையுண்டுணவிங்
கடைகாயிலையுண்டருந்தத்தண்ணீருண்டருந்துணைக்கே
விடையேறுமீசர்திருநாமமுண்டிந்தமேதினியில்
வடகோடியர்ந்தென்னதென்கோடுசாய்ந்தென்னவான்பிறைக்கே.

### தாயுமானவர்பாடல்.

1000 ஆசைக்கோரளவில்லையகிலமெல்லாங்கட்டி
யாளினுங்கடன்மீதிலே
யாணைசெலவேநினைவரளகேசனிகராக
வம்பொன்மிகவைத்தபேரு
நேசித்துரசவாதவித்தைக்கலைந்திடுவர்
நெடுநாளிருந்தபேரு
நிலையாகவேயினுங்காயகற்பந்தேடி
நெஞ்சுபுண்ணாவரெல்லாம்
யோசிக்கும்வேளையிற்பசிதீரவுண்பது
முறங்குவதுமாகமுடியு
முள்ளதேபோதுநானானெனக்குளறியே
யொன்றைவிட்டொன்றுபற்றிப்
பாசக்கடற்குளேவீழாமன்மனதற்ற
பரிசுத்தநிலையையருள்வாய்
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே.

1001 ஆசையெனும்பெருங்காற்றூடிலவம்பஞ்செனவுமனதலையுங்கால
மோசம்வருமிதனாலேகற்றதுங்கேட்டதுந்தூர்ந்துமுத்திக்கான
நேசமுநல்வாசமும்போய்ப்புலனாயிற்கொடுமைபற்றிநிற்பரந்தோ
தேசுபழுத்தருள்பழுத்தபராபரமேநிராசையின்றேற்றெய்வ
மூண்டோ.

### சோமேசர்முதுமொழிவெண்பா.

1002 கோவணமொன்றிச்சிப்பக்கூடினதேபந்தமெலாந்
தூவணஞ்சேர்மேனியாய்சோமேசா—மேவி
யியல்பாகுநோன்பிற்கொன்றின்மையுடைமை
மயலாகுமற்றும்பெயர்த்து.

### சிதம்பரமும்மணிக்கோவை.

1003 கொடியுமுரசுங்கொற்றவெண்குடையும்
பிறர்கொளப்பொறான்றனைசெரண்டு

பொதுநீங்குதிகிரிதிசைதிசைபோக்கிச்
செவியிற்கண்டுகண்ணிற்கூறி
யிருநிலம்புரக்குமொருபெருவேந்தன்
பிச்சோனொருவன்வெறுக்கைநோக்குழித்
தொக்கதன்வெறுக்கைசுருங்கித்தோன்ற
விழப்புறுவிழுமமெய்தியழுக்கறுத்து
மற்றதுபெறுதற்குற்றனைதெரீஇ
யயிற்சுவைபெறாஅன்றயிற்சுவையுறாஅன்
மாணிழைமகளிர்தோணலங்கொளாஅன்
சிறுகாற்றுவழங்காப்பெருமுச்செறிந்து
கவலையுற்றழிவதூஉங்கண்டுமேதாஅன்று
விறகெடுத்தூர்தொறுஞ்சுமந்துவிற்றுக்—கூலிகொண்டு
புற்கையுமடகுமாந்திமக்களொடு
மனையும்பிறவுநோக்கியயலமனை
முயற்சியின்மகனைப்பிழித்தனனெள்ளி
யெனக்கிணையிலையெனவினையன்மற்றொருவன்
மனக்களிப்புறீஇமகிழ்வதூஉங்காண்டும்—அதனால்
செல்வமென்பதுசிந்தையினிறைவே
யல்காநல்குரவவாவெனப்படுமே
வையுணர்வடக்கியமெய்யுணர்வல்லதை
யுவாக்கடல்சிறுகவுலகெலாம்விழுங்கு
மவாக்கடல்கடத்தற்கரும்புணையின்றே.

## குசேலோபாக்கியானம்.

1004 மைந்தர்கடம்மைப்போற்றவளநிதிவேண்டுமென்றாய்
நந்தியபறவைகாணநயந்துறைவிலங்குமுன்னா
வந்தபல்லுயிர்க்குச்சேமவைப்புண்டோவருவாயுண்டோ
வெந்திடத்தேனும்போயொன்றிரப்பதுதானுமுண்டோ.

1005 அல்லதுநாளைக்கென்செய்வாமெனுங்கவலையுண்டோ
வெல்லையிலொன்றினொன்றிடிப்புண்டுவாழ்தலுண்டோ
வொல்லுமவ்வுயிர்கடம்முணவிலாதிறந்ததுண்டோ
சொல்லரிபார்ந்தவுண்கட்டுடியிடைப்பேதைமாதே.

1006 தானல்லுடலையானென்றுந்தன்னுடைமையல்லாமை
யீனமுறுபல்பொருளனைத்துமென்னதென்றுமுறநினைத்து
மானவயர்பற்றினுக்கேதுமயக்கமதனைமாய்ப்பவனே
வானவருஞ்செல்லருமுலகம்புகுவானென்னுமறைநூல்கள்.

1007 அற்றானென்றுசொலப்படுவானாசையற்றானொருவனே
மற்றாதாவினஃதொன்றும்வைத்துப்பிறவேதுக்களெலாஞ்
செற்றானெனினுமவையாக்குஞ்செயிர்த்துன்பகன்றானேயன்றி
யுற்றார்வணங்குமவன்போலவொழிந்தான்கொல்லோவுறுபிறவி.

1008 மெய்யைப்புணர்தன்முடிவாகவேண்டுங்கருவியெலாம்பெற்றுச்
செய்யமுத்தியடைவதற்குச்சிறந்துளோனைமறவிவழிப்
பையநுழைந்துபவமீட்டும்பாய்த்திக்கெடுக்கவல்லதவா
வையவதனுக்குளடங்கியஞ்சிக்காத்தலறிஞர்தொழில்.

மேருமந்தரபுராணம்.

1009 *மோகமேதிரியக்கிடையுய்ப்பது
மோகமேநரகத்தில்விழுப்பது
மோகமேமறமாவதுமற்றவு
மோகமேயறமாசறநிற்பதும்.

நாரதசரிதை.

1010 பெற்றவைபெற்றுளியருந்திப்பின்னரு
மற்றுமோரிடவயின்வயிறுதானிறைத்
திற்றைநாள்கழித்தனமென்றுகண்படு
மொற்றைமாமதிக்குடையாருமுண்டரோ.

நாலடியார்.

1011 மெய்வாய்கண்மூக்குச்செவியெனப்பேர்பெற்ற
வைவாயவேட்கையவாவினைக்—கைவாய்
கலங்காமற்காத்துய்க்குமாற்றலுடையான்
விலங்காதுவீடுபெறும்.

திருக்குறள்.

1012 அவாவென்பவெல்லாவுயிர்க்குமெஞ்ஞான்றுந்
தவாஅப்பிறப்பீனும்வித்து.

1013 வேண்டுங்கால்வேண்டும்பிறவாமைமற்றது
வேண்டாமைவேண்டவரும்.

1014 வேண்டாமையன்னவிழுச்செல்வமீண்டில்லை
யாண்டுமஃதொப்பதில்.

1015 அற்றவரென்பாரவாவற்றார்மற்றையா
ரற்றாகவற்றதிலர்.

1016 அஞ்சுவதோருமறனேயொருவனை
வஞ்சிப்பதோருமவா.

1017 அவாவில்லார்க்கில்லாகுந்துன்பமஃதுண்டேற்
றவாஅதுமேன்மேல்வரும்.

1018 இன்பமிடையறாதீண்டுமவாவென்னுந்
துன்பத்துட்டுன்பங்கெடின்.

1019 ஆராவியற்கையவாநீப்பினந்நிலையே
பேராவியற்கைதரும்.

ஆகச்செய்யுள் 41, அவாவறுத்தல்முற்றிற்று.

---

## ௨௮-அதி. ஊழ்.

---

கந்தபுராணம்.

1020 மெத்துதிறலாடவருமெல்லியனல்லாருஞ்
சித்தமுறநன்றொடுதீதுசெயலூழே
யுய்த்தபடியல்லதிலையாமுழவரொன்செய்
வித்துபயனையலதுவேறுபெறலாமோ,

1021 முதிர்தருதவமுடைமுனிவராயினும்
பொதுவறுதிருவொடுபொலிவராயினு
மதியினராயினும்வலியராயினும்
விதியினையாவரேவெல்லுநீர்மையார்.

1022 திருவுறுகின்றுழிமகிழ்ந்துந்தீர்வுழிப்
பருவரலெய்தியும்பாசந்தன்னிடை
யரிதுணர்கேள்வியராழ்குவார்கொலோ
வருவதுவருமதுமறுக்கலாகுமோ.

1023 தீங்குவந்தடையுமாறுநன்மைதான்சேருமாறுந்
தாங்கள்செய்வினையினாலேதத்தமக்காயவல்லா
லாங்கவைபிறரால்வாராவமுதகஞ்சிரண்டினுக்கு
மோங்கியசுவையினபேதமுதவினார்சிலருமுண்டோ.

1024 இன்பமதடைந்தகாலையினிதெனமகிழ்ச்சியெய்தார்
துன்பமதுற்றபோதுந்துண்ணெனத்துளங்கிச்சோரா
ரின்பமுந்துன்பந்தானுமிவ்வுடற்கியைந்தவென்றே
முன்புறுதொடர்பையோர்வார்முழுவதுமுணர்ந்தநீரோர்.

1025 வறியவர்செல்வராவர்செல்வர்பின்வறியராவர்
சிறியவருயர்ந்தோராவருயர்ந்துளோர்சிறியராவர்
முறைமுறைநிகழுமீதுமுன்னையூழ்வினையேகண்டா
யெறிகதிர்வழங்குஞாலத்தியற்கையுமினையதன்றோ.

1026 ஆக்கமும்வறுமைதானுமல்லலுமகிழ்வுமெல்லா
நீக்கமிலுயிர்கட்கென்றுநிலையெனக்கொள்ளற்பாற்றோ
மேக்குயர்கடவுட்டிங்கள்வெண்ணிலாக்கதிரின்கற்றை
போக்கொடுவரவுநாளுமுறைமுறைபொருந்திற்றன்றே.

1027 ஆவதுவிதியெனினணைந்துமாயிடும்
போவதுவிதியெனினனைவும்போதுமாற்
றேவருக்காயினுந்தீர்க்கந்தக்கதோ
வேவருமறியொணாவீசற்கல்லதே.

### விநாயகபுராணம்.

1028 ஆமேயொருவரொருவர்க்கிடரையகற்றுவது
மாமேயொருவரொருவர்க்கிடைநன்மையாக்குவதுந்
தாமேதுசெய்தனரன்னதுதாமேபுசிப்பதன்றிப்
போமேதலையிற்பொறித்தாலிறழ்ந்துநினைப்பினுமே.

### பேநூர்ப்புராணம்.

1029 நன்னலம்பயப்பதுண்டேற்றீயவுநல்லவாகுஞ்
சென்னலமிழப்பதுண்டேனல்லவுந்தீயவாகு
மின்னவால்வினையினுக்கமெனினிடையேதுவான
வன்னவர்தம்மைநோவவழக்கிலையந்தோவந்தோ.

### சேதுபுராணம்.

1030 ஆலமதுநல்குமவராரமுதமுண்ணும்
பாலுடையராவதுபடிக்கணுளதாமோ
சாலுமதுரக்கனிகடாமுகருவரோ
ஞாலமிசைபெட்டிமரநட்டவர்கடாமே.

### பிரமோத்தரகாண்டம்.

1031 வாழ்வினையுருத்தகாலத்துறுதவத்தீன்றநற்றாய்
வீழ்முலைசுரந்தபாலுமுண்டபின்வெய்யநஞ்சா
மாழ்கடற்பிறந்தநஞ்சுமுண்டபினமிழ்தமென்றால்
வாழியமாந்தரெல்லாமிருவினைவயத்தர்மன்னோ.

1032 இன்பம்வந்துற்றகாலையிருக்கவரியெய்தாறுனுந்
துன்பம்வந்துற்றகாலைத்துயருழந்தழுதாறுனு
மன்பதைபுரக்குமெவந்தேதபறிவிலார்மாட்சிநல்லோர்
துன்பமுமின்பந்தானுந்தொல்வினைத்தொடர்ச்சியென்பார்.

### பிரபுலிங்கலீலை.

1033 இன்பநனிசெய்நல்வினையினிறப்பினிறப்பவுடம்பினிடைத்
துன்பமதுசெய்தீயவினைதோன்றுமத்தீவினைமாய்வின்
முன்புசெய்நல்வினைவருமிம்முறைபாவிரண்டுமாறிவரு
மென்பயுலகிலொண்பகலுமிரவுமாறிவருதல்போல்.

## பிரபோதசந்திரோதயம்.

1034 *பேராசையாலீனர்பின்சென்றுழன்றுந்
தீராதமிடியாளர்சிலர்பாரிலுண்டே
நேராகவரில்வாழ்வுநினையாமல்வருமால்
வாராததார்தாம்வருந்தினும்வாராதே.

## பட்டினத்தடிகள்பாடல்.

1035 அழுதாற்பயனென்னநொந்தாற்பயனென்னவாவதில்லை
தொழுதாற்பயனென்னநின்னையொருவர்சுடவுரைத்த
பழுதாற்பயனென்னநன்மையுந்தீமையும்பங்கயத்தோ
னெழுதாப்படிவருமோசலியாதிரென்னேழைநெஞ்சே.

## இராமாயணம்.

1036 அதிசயமொருவராலமைக்கலாகுமோ
துதியறுபிறவியினின்பத்துன்பந்தான
விதிவசமென்பதைமேற்கொளாவிடின்
மதிவலியால்விதிவெல்லவல்லமோ.

1037 இறத்தலும்பிறத்தலுமென்பனவிரண்டுமியாண்டுந்
திறத்துளிநோக்கிற்செய்தவினைதரத்தெரிந்தவன்றே
புறத்தினியுரைப்பதென்னேபூவின்மேற்புனிதற்கேனு
மறத்தினதிறுதிவாழ்நாட்கிறுதியதுறுதியென்ப.

## குசேலோபாக்கியானம்.

1038 மக்களுக்கிரங்கிவாடிமடந்தையணங்குகேட்டி
தக்கமுற்பவத்திலறந்தருமங்களியற்றினோர்க
ளொக்கவிப்பவத்தின்பமொருங்கனுபவிப்பரின்றென்
மிக்கவெந்துயரத்தாழ்வரிதற்குளமெலிதலென்னே.

1039 துப்பிதழ்மடந்தைநல்லாய்தோன்றியசீவரெல்லா
மிப்புவியிடத்துச்சாலவெண்ணுவவெண்ணியாங்கே
யெப்படிமுற்றுமுற்றுந்தெம்பிரானொருவற்கன்றி
யப்பரமப்பிரிதியேமேலாம்பரசப்பிரமன்றாமோ.

1040 தேற்றமுற்பவத்திற்செய்ததீங்குநன்கெனுமிரண்டு
மாற்றல்சால்கருமமென்பாக்கருமத்தைநோக்கிச்
சாற்றுமிப்பிறப்பிற்றக்கதரித்திரஞ்செல்வநல்கிப்
போற்றுவனுயிரையெல்லாம்பொலிசுடர்த்திகிரிவள்ளல்.

1041 அலரவன்றீட்டிவைத்தவாயுளினளவைகாறும்
விலகிலாவினைக்குத்தக்கவிருப்புறுவெறுப்புறுவு
மிலகவுண்டினரேவினையுமின்னுயிருடம்பின்வாழ்தன்
மலர்தலையுலகத்தென்றுவகுப்பர்நூலுணர்ந்தவல்லோர்.

1042 நல்வினையடைந்தகாலைநனிநலந்திளைப்பர்நன்மை
யல்வினையடைந்தகாலையல்லலிற்றுளைவரெல்லாந்
தொல்வினைவழியதாகுந்தோன்றுபவங்கடந்தம்
புல்வினையாலென்றெண்ணலபுலமையோரிடத்தின்றுமால்.

1043 தழைவிரிகற்பகஞ்சேர்தலும்புவியில்யாரும்
விழைதருபோகந்துய்த்துமேவலுநல்லூழாமாற்
பிழைபடநிரயந்தாழ்ந்துபெருந்துயருறலுமண்மேற்
குழைமிடியாதித்துன்புகூர்தலுந்தீயூழன்றே.

புறநானூறு.

1044 *யாதுமூரேயாவருங்கேளிர்
தீதுநன்றும்பிறர்தரவாரா
நோதலுந்தணிதலுமவற்றோரன்ன
சாதலும்புதுவதன்றேவாழ்த
லினிதெனமகிழ்ந்தன்றுமிலமேமுனிவி
னின்னாதென்றலுமிலமேமின்னொடு
வானந்தண்டுளிதலைஇயானாது
கல்பொருதிரங்குமல்லற்பேர்யாற்று
முறைவழிப்படூஉமென்பதுதிறவோர்
காட்சியிற்றெளிந்தனமாகலின்மாட்சியிற்
பெரியோரைவியத்தலுமிலமே
சிறியோரையிகழ்தலதனினுமிலமே.

## சூளாமணி.

1045 மதியினைமலரச்சூழ்ந்துவருந்தித்தாம்படைக்கப்பட்ட
நிதியினைநுகர்துமென்றுநினைத்தினிதிருந்தபோழ்திற்
பதியினைக்கலக்கிச்சென்றுபறித்துத்தாம்பிறர்க்குநீட்டும்
விதியினைவிலக்கமாட்டாமெலிபவால்வெளியரோர்.

## மேருமந்தாபுராணம்.

1046 *வருதிரைமணலினும்வளியினுற்றிரள்
சருகிலைபோலவுஞ்சாயைபோலவு
மருவியவினைவசம்வருவதல்லதிங்
கொருவர்கணுறவொருநாளுமில்லையே.

1047 *பேறிழவின்பந்துன்பம்பிணிபகைபிறப்பிவற்றி
ணாழ்ந்தாமுன்னஞ்செய்தவினைவழிவருவதல்லால்
வேறொன்றலாவதுண்டோவினையென்பானின்றதொன்று
மாறின்றாய்நின்றதல்லான்மற்றிவன்செய்ததுண்டோ.

## யசோதரகாவியம்.

1048 *அஞ்சினமெனினுமெய்யேயடைபவந்தடையுமாறு
லஞ்சதலதனிலென்னைபயனமக்கதுவுமன்றி
யஞ்சுதறுன்பந்தானேயல்லதுமதனிற்சூழ்ந்த
நஞ்சனவினைகணம்மைநாடொறுநலியுமென்றான்.

1049 *கறங்கெனவினையினோடிக்கதியொருநான்கினுள்ளும்
பிறந்துநாம்பெற்றபெற்றபிறவிகள்பேசலாகா
விறந்தனவிறந்துபோகவெய்துவதெய்திப்பின்னும்
பிறந்திடவிறந்ததெல்லாமிதுவுமவ்வியல்பிற்றேயாம்.

## சீவகசிந்தாமணி.

1050 சாதலும்பிறத்தறானுந்தம்வினைப்பயத்தினாகு
மாதலுமழிவுமெல்லாமவைபொருட்கியல்புகண்டாய்
நோதலும்பரிவுமெல்லாநுண்ணுணர்வின்மையன்றே
யேதமேபெரிதும்பொல்லாய்பெய்வளைத்தோளியென்றான்.

1051 நல்வினையுடையீரார்நஞ்சுணினமுதமாகு
மில்லையேலமுதுநஞ்சாமின்னதால்வினையினுக்கங்
கொல்வலியானிவனையென்றுமிவன்கொல்லுமென்னையென்று
மல்லனநினைத்தல்செல்லாதறிவினுற்பெரியீரோர்.

1052 அகப்படுபொறியினுரையாக்குவார்யாவரம்மா
மிகப்படுபொறியினுரைவெறியாச்செய்யலாமோ
நகைக்கதிர்மதியம்வெய்தாநடுங்கச்சுட்டிடுதலுண்டே
பகைக்கதிர்ப்பரிதிசந்துமாவியும்பயத்தலுண்டே.

1053 புரிமுத்தமாலைப்பொற்கோல்விளக்கினுட்பெய்தநெய்யுந்
திரியுஞ்சென்றற்றபோழ்தேதிருச்சுடர்தேம்பினல்லா
லெரிமொய்த்துப்பெருகலுண்டோவிருவினைசென்றுதேய்ந்தாற்
பரிவுற்றுக்கெடாமற்செல்வம்பற்றியாதனைவைப்பார்.

1054 இடுக்கண்வந்துற்றகாலையெரிகின்றவிளக்குப்போல
நடுக்கமொன்றுமின்றிநகுகதானக்கபோழ்தவ்
விடுக்கணையரியுமெஃகாமிருந்தழுதியாவருய்ந்தார்
வடுப்படுத்தென்னையாண்மைவருபவர்துறங்களன்றே.

நாலடியார்.

1055 பல்லாவுளுய்த்துவிடினுங்குழக்கன்று
வல்லதாந்தாய்நாடிக்கோடலைத்—தொல்லைப்
பழவினையுமன்னதகைத்தேதற்செய்த
கிழவனைநாடிக்கொளற்கு.

1056 வளம்படவேண்டாதார்யார்யாருமில்லை
யளந்தனபோகமவரவராற்றான்
விளங்காய்திரட்டினாரில்லைக்களங்கனியைக்
காரெனச்செய்தாருமில்.

1057 ஈண்டுநீர்வையத்துளெல்லாருமெத்துணையும்
வேண்டார்மற்றீயவினைப்பயனல்லவை
வேண்டினும்வேண்டாவிடினுமுறற்பால
தீண்டாவிடுதலரிது.

அறநெறிச்சாரம்.

1058 *இறந்தபிறப்பிற்றான்செய்தவினையைப்
பிறந்தபிறப்பாலறிக—பிறந்திருந்து
செய்யும்வினையாலறிகவினிப்பிறந்
தெய்தும்வினையின்பயன்.

மூதுரை.

1059 *ஆழவமுக்கிமுகக்கினுமாழ்கடனீர்
நாழிமுகவாதுநானாழி—தோழி
நிதியுங்கணவனுநேர்படினுந்தந்தம்
விதியின்பயனேபயன்.

1060 *எழுதியவாறேகாணிரங்குமடநெஞ்சே
கருதியவாறுமோகருமங்—கருதிப்போய்க்
கற்பகத்தைச்சேர்ந்தோர்க்குக்காஞ்சிரங்காயீந்ததேன்
முற்பவத்திற்செய்தவினை.

நல்வழி.

1061 *வருந்தியழைத்தாலும்வாராதவாரா
பொருந்துவனபோமினென்றாற்போகா—விருந்தேங்கி
நெஞ்சம்புண்ணாகநெடுந்தூரந்தானினைந்து
துஞ்சுவதேமாந்தர்தொழில்.

1062 *ஈட்டும்பொருண்முயற்சியெண்ணிறந்தவாயினுமூழ்
கூட்டும்படியன்றிக்கூடாவாம்—தேட்ட
மரியாதைகாணுமகிதலத்தீர்கேண்மின்
றரியாதுகாணுந்தனம்.

1063 *ஆவாரையாரேயழிப்பாரதுவன்றிச்
சாவாரையாரேதவிர்ப்பவ—ரோவாம

கையம்புகுவாரையாரேவிலக்குவார்
மெய்யம்புவியதன்மேல்.

1064 *ஒன்றைநினைக்கினதுவொழிந்திட்டொன்றாகு
மன்றியதுவரினும்வந்தெய்து—மொன்றை
நினையாதமுன்வந்து நிற்பினுநிற்கு
மெனையாளுமீசன்செயல்.

1065 *தாந்தாமுற்செய்தவினைதாமேயனுபவிப்பார்
பூந்தாமரையோன்பொறிவழியே—வேந்தே
யொறுத்தாரையென்செயலாமூரெல்லாமொன்றா
வெறுத்தாலும்போமோவிதி.

நீதிவெண்பா.

1066 *தானேபுரிவினையாற்சாருமிருபயனுந்
தானேயனுபவித்தற்பாலது—தானூறு
கோடிகற்பஞ்சென்றாலுங்கோதையீர்செய்தவினை
நாடிநிற்குமென்றார்நயந்து.

திருக்குறள்.

1067 நுண்ணியநூல்பலகற்பினுமற்றந்த
னுண்மையறிவேமிகும்.

1068 பரியினுமாகாவாம்பாலல்லவுய்த்துச்
சொரியினும்போகாதம.

1069 வகுத்தான்வகுத்தவகையல்லாற்கோடி
தொகுத்தார்க்குந்துய்த்தலரிது.

1070 ஊழிற்பெருவலியாவுளமற்றொன்று
சூழினுந்தான்முந்துறும்.

ஆகச்செய்யுள் 51, ஊழ் முற்றிற்று.

---

அறத்துப்பால் முற்றுப்பெற்றது.

---

# பொருட்பால்.

## உகூ-அதி. அரசு.

### திருமந்திரம்.

1071 *கல்லாவரசனுங்காலனுநேரொக்குங்
கல்லாவரசனிற்காலன்மிகநல்லன்
கல்லாவரசனறமோரான்கொல்லென்பா
னல்லாரைக்காலனணுகிநில்லானே.

1072 *நாடோறுமன்னவனாட்டிற்றவநெறி
நாடோறுநாடியவனெறிநாடானே
னாடோறுநாடுகெடுமூடநண்ணுமா
னாடோறுஞ்செல்வநரபதிகுன்றுமே.

1073 *தத்தஞ்சமயத்தகுதிநில்லாதாரை
யத்தன்சிவன்சொன்னவாகமநூனெறி
யெத்தண்டமுஞ்செயுமம்மையினிம்மைக்கே
மெய்த்தண்டஞ்செய்வதவ்வேந்தன்கடனே.

### பெரியபுராணம்.

1074 *மாநிலங்காவலனாவான்மன்னுயிர்காக்குங்காலைத்
தானதனுக்கிடையூறுதன்னாற்றன்பரிசனத்தா
லூனமிகுபகைத்திறத்தாற்கள்வரானுயிர்தம்மா
லானபயமைந்துந்தீர்த்தறங்காப்பானல்லனோ.

### கந்தபுராணம்.

1075 நஞ்சுறைபடைகள்கற்றுநவையுறுதொன்னலாரை
யஞ்சினத்தெறியும்வீரர்வளநகர்தனைமாற்றோ
ரிஞ்சியைச்சூழ்ந்துபோருக்கெய்தினுமெண்ணரியன்றி
வெஞ்சினத்தினைமேற்கொண்டுவிரைந்தமரியற்றச்செல்லார்.

1076 குலத்தினைவினவியுள்ளக்கோளினையினவிவந்த
நிலத்தினைவினவித்தொல்லோர்நெறியினைவினவிக்கொண்ட
சலத்தினைவினவிப்போர்செய்தானையைவினவியன்றோர்
வலத்தினைவினவியல்லான்மற்றொன்றுமனங்கொள்வாரோ.

1077 ஒற்றரைத்தூண்டியன்னோருறுவலியுணர்வரேனு
மற்றுமோரொற்றினல்லாலன்னதுமனத்துட்கொள்ளார்
சுற்றுறுமனிகமனறியொருபுடைநுவன்றிச்சூழும்
பெற்றியுமுளதோவென்று†வேவொரீஇத்தேர்வர்பின்னும்.

1078 §மூவியன்மாபினுனுமுற்றுறுதொழிற்தகாலைக்
கோவியன்மாபுக்கேற்பக்கொடுஞ்சினந்திருகிக்கொட்புற்
றேவியல்படைஞரோடும்படையொடுமெதிர்ந்துசுற்றி
மேவலர்பான்மையுன்னிவெற்றிகொண்டணைவரன்றே.

1079 நேர்ந்திடவலியிலொருநாட்பிடைநேர்திரென்னுச்
சேர்ந்திடும்போழ்துவ்வேந்தர்செருவினைக்குறிததுச்சென்று
சார்ந்திடல்பழியதன்றேவெல்லினுந்தானைதூண்டிப்
போர்ந்திடச்செய்வரஃதேபெறலருபுகழதனறே.

1080 மாற்றலர்சூழ்ச்சியதெனினுமாறுதாய்
வீற்றொருநிலைமையதெனினுமேவுழு
னேற்றெதிர்காப்பரேயெனனினனைவர்க்
காற்றருமிடிக்கண்வந்தடைதறபாலதோ.

1081 கோலர்தங்களோநேர்ந்துளாரெனப்
பேரிகலாற்றியேபெரிதுமாய்வதும்
பூரியர்கடனலாற்புலமைக்கேற்பதோ
சீரியர்கடனவைதெரிந்துசெய்வதே.

1082 முற்றுறவருவதுமுநநனுமன்னதாற்
பெற்றிடுபயன்களுமபிறவுநன்றாகவே
தெற்றெனவுணர்ந்துபின்பலவுஞ்செய்வரேற்
குற்றமொன்றவர்வயிற்குறுகவல்லதோ.

† வேவ் - ஒற்று.
§ மூவியன்மா - சாமபேததானம்.

1083 திரைகொள்வேலைபோனிறைதருகோட்டகஞ்சிறிதோர்
கரையிலாவழியுடைந்திடுமன்னதுகடுப்பப்
பொருதிறற்படைபலவுளவெனினும்போற்று
மரசரில்வழிநின்றிடாதன்னவையழியும்.

1084 அறிவுடைமுதியரென்றுமாண்டிளையோர்களென்றுஞ்
சிறியவர்பெரியரென்றுந்திருத்தகுவளத்தரென்றும்
வறியவரென்றும்வீரர்மதிக்கிலர்யாவரேனும்
விறல்வலிபடைத்துநேரின்வெஞ்சமர்விளைப்பரன்றே.

1085 திகழ்ச்சிகொண்மேலவர்சிறியர்தம்மொடு
நிகழ்ச்சிகொள்போரிடைநேர்வரேயெனிற்
புகழ்ச்சியதில்லைபாற்பொருதுவெல்லினு
மிகழ்ச்சிபின்பாலதாமெவரெவர்க்குமே.

1086 முந்துறுமாற்றலர்புனைவெம்போரிடைத்
தந்தையர்விளியினுந்தமர்கண்மாயினு
மைந்தர்கள்விளியினுமானவீரர்கள்
சிந்தைகொள்வன்மையிற்சிறிதுந்தீர்வரோ.

1087 ஓடினர்தம்மையுமுற்றுத்தாண்மலர்
சூடினர்தம்மையுந்தொழுதகைபராய்
வாடினர்தம்மையும்வலியிலோரையுஞ்
சாடினரல்லரேநவைக்கட்டங்குவார்.

1088 தொக்கபோரில்வெருவித்தொலைவோரைத்
தக்கதோர்துணைவர்தந்தையர்தாயர்
மக்கள்பெண்டிருமறப்பர்களென்னின்
மிக்குளாரிகழ்தல்வேண்டுவதின்றே.

1089 யாதொர்துன்னலனெதிர்ந்திடினின்று
காதலேவலிகடந்திற்சூழ்ச்சி
தீதியன்றதுவுநேர்ந்திலதெனிற்
சாதலேதகுதிசாய்ந்திடலன்றே.

## விநாயகபுராணம்.

1090 உரைசெயுமறத்திறனாற்றலொருகுடைநிழற்றமுந்நீர்த்
தரைமுழுதாளவேண்டிற்றகைபெறுமமைச்சநாடு
புரையறுமாணைமிக்கபொருள்படைநட்பென்றாறும்
வரைசெயப்படாதயாக்கையுறுப்பெனமதித்துக்கோடி.

1091 வினையினஞ்சாமைநிற்றல்வினைநருக்களித்தல்செய்யும்
வினையிடைமனமேற்சேறல்விளங்கியவறிவுவல்லே
வினையினைமுடித்தலாண்மைவெகுள்கொலையாதிநீக்கல்
வினைவளர்மானமற்றும்வேந்தருக்கியல்புமைந்தா.

1092 குடிகளர்வுற்றகாலைக்கோள்பொருளாறிலொன்றும்
விடுவதுசெய்துதங்கள்வழக்குறைமுறைசொல்வார்க்குத்
தடையறக்காட்சிநல்கித்தண்ணியவினைசொல்காட்டி
வடுவறவிடுத்துச்சொல்வார்வன்மொழிபொறுத்தல்வேண்டும்.

1093 செருவிறொட்டலைக்கொன்றுநிறைகொண்டுகொடுகாத்துப்
பொருளினையீட்டிக்கள்வர்புல்லலர்சுற்றமாதி
பருகுதலிலாமைக்காத்துப்பயிலறமாதிமூன்றின
மருவுறவிடுத்துச்செங்கோல்வளர்ப்பதுமாட்சியாமே.

1094 ஐயமேதிரிவேயென்னுமவையறவறநூனீதி
வையமால்யானைபாய்மாவடைபடைதொழினூலாதி
பையவேகற்றுக்கற்றுப்பண்பினரோடொரு
மெய்யவேயளவளாவியுரைத்தவாநிற்றல்வேண்டும்.

1095 செய்யும்பொழுதேயழிபொருளிற்சிறப்பதொப்பதிரண்டினுளொன்
றுய்யாவுதவிவழிபயக்குமொண்மைவினையைத்தேர்ந்துளத்தி
னையமகன்றவினைத்தேரோடுமாய்ந்துதனித்தும்புரிந்திடுக
வெய்யவாக்கங்கருதிமுதல்விளிக்கும்வினையைப்புரியற்க.

1096 வலியொடாலமிடமறிவற்றுன்மாற்றான்றனக்குமுனக்குமுள
பலவாறிலையும்வினைதொடங்கும்பண்புமதற்காமிடையூறும்
விலகாதனைவிலக்குவதும்வெல்லுமாறும்வென்றதனு
லுலவாப்பயனுமுதலனைத்துமோர்ந்துதெளிந்தேவினைசெய்க.

1097 பெரியமுயற்சிவினைபயனைப்பெறுவினையேபயன்சிறிதா
மரியவினையேபின்றுயரமாக்கும்வினையேபுரிந்தாலும்
பெரியமுயற்சிமுதலாகப்பேசும்வினைக்குமறுதலையா
முரியவினையைவிடுத்தாலுமுலவாப்பெருமையொழியுமே.

1098 வலியரானகாலத்துவழங்கலாதிமுன்றனைய
மெலியரிடத்துச்செய்திடலுமெலியரானகாலத்து
வலியரிடத்தினெறுத்தலையும்வகுக்கின்வேந்தர்க்கவைமைந்தா
நலிவாமதனாலவரவர்பாலடத்துமுறைதேர்ந்தியற்றிடுக.

1099 நல்லகுடியிற்பிறந்தாருநவையுமறப்புமடியிழைப்பென்
றல்லலுறக்குமிவைமுதலாமனைத்துநீக்கிப்பழிக்கஞ்சி
யொல்லுநாணுடையானேயோர்க்குதெளியப்படுமைந்தா
வல்லகலைதேர்ந்தாசற்றோர்மாட்டும்வெளிறுமருவிற்மே.

1100 பெருமிதம்பெரியசெல்வம்பேரெழில்பெரியவின்பந்
தருமிருகளிப்பின்மூழ்கித்தங்குறினேமகண்டா
வருமிருபொச்சாப்பந்தமறவியாலின்னைக்காத்துப்
பொருமிருபகைகைவெல்லும்பொருளெலாமிழப்பதாகும்.

1101 உற்றிடுமாற்றன்மூன்றுமுபாயங்களுங்குநன்மை
புறறியதொழில்களுக்கும்பண்புறுகுணங்களாறு
மற்றையவனைத்துங்கெடாம்வளர்பிறப்பேழவகாறும்
புறறிருசமையிலுறும்பாழ்த்தபொச்சாப்புச்சாரின்.

1102 எய்தியகுற்றத்தோர்கள்யாவராயினுங்கண்ணோடா
தைதெனநாடிநீதியறந்தலைப்பிழைபாத்தண்டஞ்
செய்தலேசெங்கோலாகுஞ்செய்யகோலின்றேலென்று
மூய்திசெய்மழையான்மக்களுறுபயனுற்றபோதும்.

1103 மழைவளஞ்சுரக்குமாறும்வயனிலம்விளையுமாறும்
விழையறம்வளருமாறும்வேதநூல்விளங்குமாறுந்
தழைபொருளீட்டுமாறுஞ்சமரிடைவெல்லுமாறும்
பிழைதபவாழுமாறும்பிறழ்தராக்கோலினாகும்,

1104 கருவிகஞ்சாதிதம்மாற்காமாருயிரைக்கொல்வோர்
வெருவரச்சூறைகொள்வோர்மேவியாறலைப்போர்கள்வ
ருருவளர்பிறனில்வேட்போருவர்முதலோரைக்கோறல்
பருவருபாவமன்றுபயிர்க்களைகளைதல்போலாம்.

1105 பரிசனம்பகைவர்கள்வர்படர்தருமுயிர்கடாமென்
றுரைசெயைந்திடத்தினுமுலகிடையிடையூறெய்தா
வரிசையிற்காத்துநீதிவழுக்கினோர்தம்மைமொத்திக்
கரிசறப்பொருளுங்கோடல்காவலர்தருமமைந்தா.

1106 முறைமையுட்டாதுசெய்துமுழுநிலங்காப்பினந்த
விறைவனைச்செங்கோல்காக்குமெளியசெல்வியனுமாகான்
குறைவளர்குற்றமோரான்குணத்தொடுமுறைசெய்யானை
நிறைதருபாவந்தேய்க்குநெடும்பகையின்றுமேனும்.

1107 அறுதொழிலாளர்நூல்களயர்ப்பான்பயனின்றுகு
முறைபெயலொழியுங்கூழ்க்குடிகளுமொருங்குநீங்கும்
பெறுபயனுட்டிற்குன்றம்பிறங்கொளிநிலைபெறாது
கறையின்மேற்பொருள்கைக்கொண்டுகாவலைவிடுப்பின்மைந்தா.

1108 ஊறுசேர்வினையைப்புரிதாருழலூறுவந்தடுப்பினுங்கலங்கார்
தேறுகாரியத்தைமுடிப்புழியன்றிச்செயன்மொழியாதியா
லிடையே, வேறுபோமாறுவிளக்குறூர்துணிந்தவினைதுளங்
காதுவல்விரைவார், வீறுசேரியவரையுருவுகண்டெள்ளா
வேந்தனேவேந்தனமைந்தா.

## திருக்குற்றலப்புராணம்.

1109 காலைதொறுமுழையரொடுநாலையைந்துகுடிமுதலாங்காப்புப்
போற்றி, மேலைநூற்பாவலர்க்கும்வேதியர்க்குமீந்துபலவெள்ளி
வேட்டிச், சாலைதனிற்சிவபெருமான்றயர்களொடுந்தமர்களொடுந்
தகவாயுண்டு, மாலைதொறுமொற்றுய்த்துத்துயிலிடத்தும்
புரர்காப்பார்மனுநூற்செல்வர்,

## திருவாப்பனூர்ப்புராணம்.

1110 *தூங்காமையாணுடைமைபடையுடைமை துணிவுடைமை
தூய்மைகேண்மை, நீங்காமையறிவுடைமைநாணுடைமை
பொறைமைபுன்மைநெறிச்செலாமை, பூங்காமையெனக்
கொடுக்குங்கொடைமடைமையிவைதாழ்விப்புரவுபூண்டோன்
றீங்காமைவகைப்படந்தீர்த்தறங்கற்றியேழ்நிலங்கோல்
செலுத்தாநின்றான்.

## செவ்வந்திப்புராணம்.

1111 *கற்புமங்கையர்நிறையெனும்வரம்பினைக்கடந்தால்
வெற்புறுங்கிடவானகம்புவியின்மேல்விழுந்தா
லற்புமன்னவன்செய்யகோல்வளைந்திடுமோவு
லுற்பலஞ்செறிமாலையாய்நிலக்குவாருண்டோ.

1112 *திண்புகழ்படைப்பதும்பகையைத்தேய்ப்பது
மண்புரந்தளிப்பதுமன்னர்பேணி
வெண்கலைமுரசுதல்கவரிவீசுதல்
புண்களும்படைத்திடும்புனலுமாடுமே.

1113 *இன்புடையறங்கணல்லோரிவையவர்குரவராகத்
தன்பெருங்கிளைகள்சுற்றமந்திரந்தலைவராக
மன்பதைகளிகளாகத்தானைகண்மணிவிழாக
வன்பெலாமவயவமாகவரசுமேல்வளருமன்றே.

1114 *தெருண்டசிந்தனைமன்னவர்நீதிநூறிசையி
னுருண்டதேரினனென்னுமுயிர்களுண்டுலகின
மருண்டுமன்னனும்விழியொளிமறைந்திடின்மற்றை
யிரண்டுகண்ணினும்பயனிலையாகுமேயென்றான்.

## பிரமோத்தரகாண்டம்.

1115 வேந்தன்முறைதிறம்பில்வேதவிதிதிறம்பு
மேந்திழையார்தங்கற்புநில்லாதே நிலவாரோ
மாந்தர்பசியாலுணங்கமழைவறந்து
பாந்தண்முடிகிடந்தபாரினிலைவளங்குன்றுமே.

1116 தீயூட்டித்தாமுண்ணுஞ்செய்தவத்தோரானினங்க
ளோயூட்டுகோயமிகழ்க்கியற்றுநோன்பினோர்
வேயூட்டுதோளார்விருத்தர்சிறுபாலர்தமைத்
தாயூட்டிப்போற்றுதல்போற்றார்வேந்தன்காக்குமால்.

1117 தேவர்நிலைகடவார்மேலோர்திறம்பிழையார்
நாவினிரண்டுரையார்நன்கல்லவைபுரியார்
காவன்முறைதிறம்பார்காடச்செயல்பெருக்கார்
பூவலயக்காவல்புரியும்புரவலரே.

1118 உற்றவூறஞ்சாப்படையுமுயர்குடியு
முற்றலவாப்பைங்கூழுமுன்வருதல்சேமிக்கும்
பெற்றியமைச்சுமுதவும்பெருந்துணையுங்
கொற்றவரணுமுடையானேகோமகனே.

1119 ஏடவிழ்பைந்தாரோயிமையோர்பதம்பெறினு
நாடுநடுங்கநன்கல்லவைபுரியார்
வேடர்பரிவேட்டஞ்செய்யார்வினைதருஞ்சூ
தாடநினையார்மட்டுண்ணாரரசரே.

1120 குரவர்தமைக்காப்பர்செய்ந்நன்றிகொல்லார்
காவடரைக்காய்வர்பழிகண்ணோட்டஞ்செய்யா
ரிரவலருக்கீவரெதிர்ந்தோர்முனையின்
விரவுதமதுயிருமெண்ணார்கள்வேந்தரே.

1121 நீதியுமொற்றுநிகரிலாக்கண்ணோணிலத்தல்லவையொழித்தும்
வேதியர்தேவர்மெலிந்துளோர்வறிஞர்மெலிவறக்குறைத்திறம்
விறைப்பு, மோதநக்குடியுமலப்பிலாநிதியுமுயர்ந்திடவனுதினங்
காத்தலுங், கூதினிற்பகைவர்திருவினைக்கவருஞ்சூழ்ச்சியும்
வினையமுஞ்சூழ்ந்தும்.

1122 தருமநூலாய்ந்துமடநடந்தவர்ப்பார்த்துந்தடிப்பருங்காலங்க
ளுணர்ந்த, மெரிபசம்பூணோர்நடைத்தொழில்கண்டியாழினொ
ரின்னிசைகேட்டும், விரியிருண்மாலைப்பொழுதெலாமங்கண்
விழாவணிநடத்துதல்போலப், புரிகுழன்மடவார்கலவியிற்
றிளைத்தும்போக்குவர்புரவலர்பொழுதே.

## பிரபுலிங்கலீலை.

1123 உறையில்வாளொடுமாவழுங்குறவனைத்தேடி
மறவனோர்பொருடருகெனவிரத்தலைமானு
மிறைவன்வாழ்குடிதன்னிலொன்றொருபொருளிரத்த
லறவனாகியநீயிதையறிந்திலையந்தோ.

## நீதிநெறிவிளக்கம்.

1124 கண்ணிற்சொலிச்செவியினோக்குமிறைமாட்சி
புண்ணியத்தின்பாலதேயாயினுந் — தண்ணளியான்
மன்பதையோம்பாதார்க்கென்னாம்வயப்படைமற்
றென்பயக்குமாணல்லவர்க்கு.

1125 குடிகொன்றிறைகொள்ளுங்கோமகற்குக்கற்றா
மடிகொன்றுபால்கொளலுமாண்பே — குடியோம்பிக்
கொள்ளுமாகொள்வோர்க்குக்காண்டுமேமாநிதியம்
வெள்ளத்தின்மேலும்பல

1126 இன்றுகொளற்பாலநாளைக்கொளப்பொரு
ளின்றென்றிறையிரப்பநேர்படான் — சென்றொருவ
னாவனகூறினெயிறலைப்பானூறலைக்கும்
வேடலன்வேந்துமலன்.

1127 ஒற்றிற்றெரியாசிறைப்புறத்தோர்கூவெனப்
பொற்றேருமணியாத்தெரிகிற்றுஞ் — சுற்ற
மறிவரிதென்றஞ்சுவதேசெங்கோன்மைசென்று
முறையிடினுங்கேளாமையன்று.

1128 குலமகட்குத்தெய்வங்கொழுநனேமன்ற
புதல்வர்க்குத்தந்தையுந்தாயு — மறவோர்க்
கடிகளேதெய்வமனைவோர்க்குந்தெய்வ
மிலைமுகப்பைம்பூணிறை.

1129 ஏதிலார்யாதும்புகலவிறைமகன்
கோதொரீஇக்கொள்கைமுதுக்குறைவு—நேர்நின்று
காக்கைவெளிதென்பாரென்சொலார்தாய்க்கொலை
சால்புடைத்தென்பாருமுண்டு.

## இராமாயணம்.

1130 யாரொடும்பகைகொள்ளிலனென்றபின்
போரொடுங்கும்புகழொடுங்காது தன
தாரொடுங்கல்செல்லாதது தந்தபின்
வேரொடுங்கெடல்வேண்டலுண்டாகுமோ.

1131 கோளுமைம்பொறியுங்குறையப்பொரு
ணாளுங்கண்டுநடுக்குறுநோன்மையி
னாளுமவ்வரசேயரசன்னது
வாளின்மேல்வருமாதவமைந்தனே.

1132 உமைக்குநாதற்குமோங்குபுள்ளூர்திக்கு
மிமைப்பினாட்டமோரெட்டுடையானுக்குஞ்
சமைத்ததோள்வலிதாங்கினராயினு
மமைச்சர்சொல்வழியாற்றுதலாற்றலே.

1133 வையமன்னுயிராகவம்மன்னுயி
ருய்யத்தாங்குமுடலன்னமன்னனுக்
கையமின்றியறங்கடவாதருள்
செய்யினின்றபின்வேள்வியும்வேண்டுமோ.

1134 இனியசொல்லினனீகையனெண்ணின
வினையன்றூயன்விழுமியன்வென்றிய
னினையுநீதிநெறிகடவானெனி
லனையமன்னற்கழிவுமுண்டாங்கொலோ.

1135 சீலமல்லனநீக்கிச்செம்பொற்றுலைத்
தாலமன்னதனிநிலைதாங்கிய
ஞாலமன்னற்குநல்லவர்நோக்கிய
காலமல்லதுகண்ணுறுமுண்டாகுமோ.

1136 ஓர்வினல்வினையூற்றத்திருநரை
பேர்விறேல்விதிபெற்றுளதென்றரோ
தீர்விலன்புசெலுத்தலிற்செவ்வியோ
ரார்வமன்னவற்காயுதமாவதே.

1137 நன்றியீதென்றுகொண்டநபத்தினைநயந்துவேறு
வென்றியேயாகமற்றோர்தோற்றுயிர்விடுதலாக
வொன்றிலேநிற்றல்போலாமுத்தமர்க்குரியதொல்கிப்
பின்றுமேலவனுக்கன்றேபழியொடுநரகம்பின்னை.

வில்லிபாரதம்.

1138 தேறலார்தமைத்தேறலுந்தேறினர்த்தேறலாமையுமென்று
மாறலாருடன்மலைதலுமாறுடன்மருவிவாழ்தலுமுன்னே
யாறலாதனவரசருக்கென்றுகொண்டரசநீதியிற்சொன்னார்
கூறலாதனசொல்வதென்செல்வதென்கொடியவனருகென்றான்.

1139 துன்றுபிணியோர்துறந்தோரடங்காதோர்
கன்றுசினமனத்தோர்கல்லாதவரிளையோ
ரொன்றுமுறைமையுணராதவர்மகளி
ரென்றுமிவர்மந்தணத்தினெய்தப்பெறாதாரே.

1140 மறைகெழுநூலுந்தேசமாசிலாத்தவமுஞான
முறைவருமுணர்வுமல்லான்முனிவரர்க்குறுதியுண்டோ
துறைகெழுகலைகள்வல்லாய்துன்னலர்ச்செருக்கும்போரு
நிறைதருவலியும்வாழ்வுநிருபர்தம்மியற்கையன்றோ.

1141 மூத்தவரிளையோர்வேதமுனிவரர்பிணியின்மிக்கோர்
தோத்திரமொழிவோர்மாதர்தூதரென்றிவரைக்கொல்லிற்
பார்த்திபர்தமக்குவேறுபாவமற்றிதனினில்லை
பூத்தெரிதொடையாய்பின்னுராகிலும்புதுவரென்றான்.

நளவெண்பா.

1142 வேலைகரையிழந்தால்வேதநெறிபிறழ்ந்தால்
ஞாலமுழுதுநடுவிழந்தாற்—சீல
மொழிவரோசெம்மையுரைதிறம்பாச்செய்கை
யழிவரோசெங்கோலவர்.

1143 மன்னராய்மன்னர்தமையடைந்துவாழ்வெய்தி
யின்னமுதந்தேக்கியிருப்பாரேற்—சொன்ன
பெரும்பேடிகளலரேற்பித்தரேயன்றோ
வரும்பேடைமானேயவர்.

புறநானூறு.

1144 கடுஞ்சினத்தகொல்களிறுங்
கதழ்பரியகலிமாவு
நெடுங்கொடியநிமிர்தேரு
நெஞ்சுடையபுகன்மறவருமென
நான்குடன்மாண்டதாயினுமாண்ட
வறநெறிமுதற்றேயரசின்கொற்ற
மதனால்—நமரெனக்கோல்கோடாது
பிறரெனக்குணங்கொல்லாது
ஞாயிற்றன்னவெந்திறலாண்மையுந்
திங்களன்னதண்பெருஞ்சாயலும்
வானத்தன்னவண்மையுமூன்று
முடையையாகியில்லோர்கையற
நீ, நீடுவாழியநெடுந்தகை.

1145 நெல்லுமுயிரன்றேநீருமுயிரன்றே
மன்னனுயிர்த்தேமலர்தலையுலகம்
அதனால்—யானுயிரென்பதறிகை
வேன்மிகுதானைவேந்தற்குக்கடனே.

1146 *காய்நெல்லறுத்துக்கவளங்கொளினே
மாநிறைவில்லதும்பன்னாட்காகு
நூறுசெறுவாயினுந்தமித்துப்புக்குணினே
வாய்புகுவதனினுங்கால்பெரிதுகெடுக்கு

மறிவுடைவேந்தனெறியறிந்துகொளினே
கோடியாத்து நாடுபெரிதுநந்து
மெல்லியன்கிழவனாகிவைகலும்
வரிசையறியாக்கல்லென்சுற்றமொடு
பரிவுதபவெடுக்கும்பிண்டநச்சின்
யானைபுக்கபுலம்போலத்
தானுமுண்ணானுலகமுங்கெடுமே.

1147 *கால்பார்கோத்து †ஞாலத்தியக்குங்
காவற்சாகாடுகைப்போன்மாணி
னூறின்றாகியாறினிதுபடுமே
யுய்த்தறேற்றானாயின்வைகலும்
பகைக்கூழள்ளற்பட்டு
மிகப்பஃறீநோய்தலைத்தலைத்தருமே.

சூளாமணி.

1148 மாமனர்நெடுங்கடன்மதலைமாசிலாக்
காலமைந்தொழுகுமேற்கரையுங்காணுமே
நூலவர்நுழைவொடுநுழைந்துசெல்லுமேல்
வேலவரொழுக்கமும்வேலைகாணுமே.

1149 மண்ணியவளாகங்காக்குமன்னவர்வணக்கலாகாப்
புண்ணியரேனும்புலவராற்புகலப்பட்ட
நுண்ணியநூலினன்றிநுழைபொருளுணர்தறேற்றா
ரெண்ணியதுணிந்துசெய்யுஞ்சூழ்ச்சியுமில்லையன்றே.

1150 மறந்தலைமயங்கிவையத்தொருவரையொருவர்வாட்ட
விறந்தலையுறாமைநோக்கியின்னுயிர்போலக்காக்கு
மறந்தலைநின்றவேந்தரடிநிழலன்றியார்க்குஞ்
சிறந்ததொன்றில்லைகண்டாய்திருமணிதிகழும்பூணாய்.

† ஞாலத்தியங்குமென்றும்பாடம்.

1151 நிறந்தலைமயக்கவெம்பிநெடுங்கடல்சுடுவதாயி
னிறந்தலைபெருகுநீர்வாழுயிர்க்கிடரெல்லையுண்டோ
மறந்தலைமயங்குசெவ்வேன்மன்னவன்வெய்யனாயி
னறந்தலைமயங்கிவையமருப்படருழக்குமன்றே.

1152 மந்திரக்கிழவர்கண்ணாமக்கடன்றாள்களாகச்
சுந்தரவயிரத்திண்டோடோளாச்செவிகளொற்றா
வந்தரவுணர்வநூலாவரசெனுமுருவுகொண்ட
வெந்திரமிதற்குவாயாத்தூதுவசியற்றப்பட்டார்.

1153 பெற்றதன்முதலாப்பின்பெறுதகுஞ்
சுற்றிவந்தடையும்படிசூழ்ந்துசென்
றுற்றவான்பொருள்காத்துயரீகையுங்
கற்றவன்பிறர்காவலனாகுவான்.

1154 பகையலாதவரைப்பகையாக்கலு
நகையிறீமனத்தாரைநண்பெண்ணலு
முகையின்வேய்ந்தபென்மொய்ம்மலர்க்கண்ணியாய்
மிகையின்மற்றவைபின்னைவெதுப்புமே.

யசோதரகாவியம்.

1155 *மறவியின்மயங்கிவையத்துயிர்களைவருத்தல்செய்யா
தறவியன்மனத்தையாகியாருயிர்க்கருள்பரப்பிச்
சிறையனபிறவிபோக்குந்திருவறமருவிச்சென்று
நிறைபுகழுலகங்காத்துநீடுவாழ்கென்றுநின்றார்.

சீவகசிந்தாமணி.

1156 உறங்குமாயினுமன்னவன்றன்னொளி
கறங்குதெண்டிரைவையகங்காக்குமா
லிறங்குகண்ணிமையார்விழித்தேயினுந்
தறங்கள்வெளவவதன்புறங்காக்கலார்.

1157 கோணிலைதிரிந்துநாழிகுறைபடப்பகல்கண்மிஞ்சி
நீணிலமாரியின்றிவிளைவஃகிப்பசியுநீடிப்
பூண்முலைமகளிர்பொற்பிற்கற்பழிந்தறங்கண்மாறி
யாணையிவ்வுலகுகேடாமரசுகோல்கோடினென்றான்.

1158 நீதியாலறுத்தந்நிதியீட்டுத
லாதியாயவரும்பகைகாட்டுதன்
மோதிமுள்ளொடுமுட்பகைகண்டிடல்
பேதுசெய்துபிளந்திடல்பெட்டதே.

1159 ஒற்றர்தங்களையொற்றரினாய்தலுங்
கற்றமாந்தரைக்கண்ணெனக்கோடலுஞ்
சுற்றஞ்சூழ்ந்துபெருக்கலுஞ்சூதரோ
கொற்றங்கொள்குறிக்கொற்றவறகென்பவே.

1160 இடத்தொடுபொழுதுநாடியெவ்வினைக்கண்ணுமஞ்சார்
மடப்படலின்றிச்சூழுமதிவல்லார்க்கரியதுண்டோ
தடத்திடைக்காக்கையொன்றேயாயிரங்கோடிகூகை
யிடத்திடையழுங்கச்சென்றங்கின்னுயிர்செகுத்ததன்றே.

1161 வீறின்மையின்விலங்காமெனமதவேழமுமெறியா
னேறுண்டவர்நிகராயினும்பிறர்மிச்சிலென்றெறியான்
மாறன்மையின்மறம்வாடுமென்றிளையாரையுமெறியா
னூறன்மையின்முதியாரையுமெறியானயிலுழவன்.

மணிமேகலை.

1162 கோனிலைதிரிந்திடிற்கோணிலைதிரியுங்
கோணிலைதிரிந்திடின்மாரிவறங்கூரு
மாரிவறங்கூரின்மன்னுயிரில்லை
மன்னுயிரெல்லாமண்ணாள்வேந்தன்
றன்னுயிரென்னுந்தகுதியின்றாகும்.

நாரதசரிதை,

1163 வல்லென்றசொல்லும்புகழ்வாய்மைவழீஇயசொல்லு
மில்லென்றசொல்லுமிலனாகியின்யாவர்மாட்டுஞ்
சொல்லுங்குறையின்மையிற்சோருமின்மையாலே
கொல்லென்றசொல்லுமுணர்கற்றிலனொற்றவேலான்.

### திரிகடுகம்.

1161 கோலஞ்சிவாழுங்குடியுங்குடிதழீஇ
யாலம்வீழ்போலுமமைச்சனும்—வேலின்
கடைமணிபோற்றிண்ணியான்காப்புமிம்மூன்றும்
படைவேந்தன்பற்றுவிடல்.

### திருக்குறள்.

1165 படைகுடிகூழமைச்சுநட்பரணாறு
முடையானரசருளேறு.

1166 அஞ்சாமையீகையறிவூக்கமிந்நான்கு
மெஞ்சாமைவேந்தற்கியல்பு.

1167 தூங்காமைகல்விதுணிவுடைமையிம்மூன்று
நீங்காநிலனாள்பவற்கு.

1168 காட்சிக்கெளியன்கடுஞ்சொல்லனல்லனேன்
மீக்கூறுமன்னனிலம்.

1169 முறைசெய்துகாப்பாற்றுமன்னவன்மக்கட்
கிறையென்றுவைக்கப்படும்.

1170 செவிகைப்பச்சொற்பொறுக்கும்பண்புடைவேந்தன்
கவிகைக்கீழ்த்தங்குமுலகு.

ஆகச்செய்யுள் 100, அரசு முற்றிற்று.

---

## ௯௰ அதி. அமைச்சு.

---

### கந்தபுராணம்.

1171 மன்னவர்செவியழுண்மதித்ததாமென
நன்னெறிதருவதோர்நடுவுநீதியைச்
சொன்னவரமைச்சர்களெனவர்மேலையோ
ரொன்னலர்வினைமுந்துவாறுரைக்கின்றார்களே.

## திருவிளையாடற்புராணம்.

1172 மந்திரக்கிழமைபூண்டமென்னவர்கருமஞ்செய்வ
தந்தணர்க்கறனேயல்லவமைச்சியலறத்ததின்றால்
வெந்திறலரசர்க்கேற்றசெய்வதேவேண்டுமென்னத்
தந்திரமறநூல்வல்லோர்சாற்றுவாரவரேனையார்.

1173 நல்லாவின்பாலினறுந்தேன்கலந்தென்னப்பன்னூல்
வல்லாருமாகிமதிநுட்பருமாகிச்சோர்வில்
சொல்லாலடையார்மனமுங்களிதூங்கச்சொல்லிப்
பல்லார்பிறர்சொற்பயனுய்த்துகவரவல்லார்.

1174 பழையபிறைபுட்கொளப்பட்டமென்றேமாப்பெய்தா
ருழையேவல்செய்புஞ்சிறார்போலவொதுங்கிவேந்தன்
விழைவேதத்தனைவிடம்போலவெறுத்துவெஃகா
ரழல்போலணுகாரகலார்நிழலன்னநீரார்.

1175 மறுக்குஞ்செயனீத்துநடக்கையின்வையத்தோரை
யொறுக்கும்பொருளும்பணிகேட்கையினென்னலாரைச்
செறுக்கும்பொருளுங்கவரார்வினைசெல்வமாக்க
ளிறுக்கும்பொருளேயிறைவற்கிவரீட்டுஞ்செல்வம்.

1176 மறந்தானவேலான்மனக்கொள்கைதன்னெஞ்சுள்வான
நிறந்தாடிநீழலெனத்தோற்றநிறுத்துமற்ற
தறத்தாறெனிலாற்றுவரன்றெனிலாக்கமாகி
யிறந்தான்வரினுமனத்தானுமிழைக்கவெண்ணார்.

## விநாயகபுராணம்.

1177 நலியபகைபயப்பச்சிறுமுயற்சியினலத்தகுவினையுமற்றனைய
வினையினைத்தொடங்குங்காலத்தனக்குவேண்டியபொருள்களும்
படையு, மினிதுறும்பொழுது முபாயமுஞ்செயலுமிடைப்படு
முறுகணீக்கித், துணிவுறமுடிவுபோக்கிடுமாறுஞ்சூழ்தரவல்லவ
னமைச்சன்.

1178 மிகைவினைவரினுமசைவுறுவன்கண்விழுக்குடி காத்தலான் வினைநூல், வகையுறச்சூழ்ந்துவிடுவனவிடுத்துவகுப்பன வகுத்திடல்வேண்டிற், பகைவர்தந்துணையைப்பிரித்த றம் மிடத்துப்பயின்றவர்பகைவர்பாற்புகாமற், றகையுறச்செய்தல் பிரிந்தவர்தம்மைத்தம்மொடுபொருத்தலுமமைச்சாம்.

1179 அறிவதுஞ்செயலுமொழிவதுமரசர்க்காக்கமேகுறித்தனவாகுந் திறனுநன்றறியாவரசருக்குறுதிசெப்பலுஞ்செய்வனவேனு முறுமுலகியற்கைக்கொத்திடிற்செயலுமொருவினைக்கியைந்தபல் செயலு, நிறுவுவதொன்றால்வாய்ப்பவெஞ்ஞான்றுநிகழ்த்தலு மமைச்சருக்கியல்பாம்.

1180 முறையுறச்சூழ்மாத்திரமன்றிமுடிக்கமாட்டாதமந்திரியு மிறைவனுக்கிதமெண்ணுமந்திரியுமெழுதுசித்திரத்தினுமாகா வுறுவரிற்பிரிக்கப்பட்டவர்முதலோருளத்தினைப்பிணித்துரு ருளமு, மறுவறப்பிணிக்குமொழிதிறனறிந்துவழங்கன் மந்திரிகணற்குணமே.

1181 சுருக்கிமெய்விளக்கியினிமையும்பயனுந்தொகுத்தயலார்மொழிக் கிடையாத், திருக்கிளர்மொழியைச்சோர்வறவவைக்கட் செல்லுமாறஞ்சுதலின்றி, யுரைக்கவல்லவரேயமைச்சர்களாவ ருறுமுறைபிறழ்தரப்பலவாய், விரிக்கவல்லவருங்கற்றதுவிளங்க விரிக்கமாட்டாருமெல்லியரே.

1182 பொருள்பயக்கிடினுமறப்புகழ்பயவாப்புரைபடுவினையென்றும் புரியார், மருளின்மற்றொருகாற்புரியினுமிரங்கார்வையகத்தேனை யோர்போல, விருமுதுகுரவர்கற்புடைமகளிரிளமகவிவர்பசித் திடினும், பெருமிதப்படாதவினைசெயாநலதுபேணுநர்க்கேமஞ் செயுமமைச்சர்.

1183 துணிவுறுமளவுஞ்சூழ்ந்துபின்றாது சூழ்வினைபொருந்துமவா யெல்லாந், தணிவறமுடித்தலுந்தகாதாயிற்றருபொருள் வினையிடங்கால, மணியுறுகருவியையந்துமாய்ந்திகலையடர்த்த லொட்டார்க்கழிவுறுங்காற், பணிவுசெய்தேனுங்காத்தன் முதுதொழிலும்பண்புடையமைச்சர்தந்தொழிலே.

ஞானவாசிட்டம்.

1184 *தீயவனுமந்திரியானல்வேந்துந்தீவேந்தாந்தீமையில்லாத்
தூயவனுமந்திரியாற்றீவேந்துநல்வேந்தாந்தொடர்ச்சிபோல
வாயநெறிமன்னவராலமைச்சருமப்படியாகுமாதலாலே
நேயவிவேகந்தமைச்சனுண்டாகிலெப்பவனுமிருபற்குண்டாம்.

நீதிநெறிவிளக்கம்.

1185 செவிசுடச்சென்றாங்கிடித்தறிவுமூட்டி
வெகுளினும்வாய்வெரீஇப்போர—கவிழ்மதத்த
கைம்மாவயத்ததேபாகுமற்றெத்திறத்து
மம்மாண்பினவேயமைச்சு.

இராமாயணம்.

1186 நல்லவுந்தீயவுநாடிநாயகற்
கெல்லையின்மருத்துவரியல்பினெண்ணுவ
சொல்லவந்துறுவனவுற்றபெற்றியிற்
றெல்லைநல்வினையெனவுதவுஞ்சூழ்ச்சியார்.

1187 தம்முயிர்க்குறுதியெண்ணார்தலைமகன்வெகுண்டபோதும்
வெம்மையைத்தாங்கிநீதிவிடாதுநின்றுரைக்குமெய்யர்
செம்மையிற்றிறம்பல்செல்லாத்தேற்றத்தார்தெரியுங்கால
மும்மையுமுணரவல்லாரொருமையேமொழியுநீரார்.

சூளாமணி.

1188 அந்தணரொழுக்கமுமரசர்வாழ்க்கையு
மந்திரமில்லையேன்மலருமாண்பில
விந்திரனிறைமையுமீரைஞ்ஞூற்றுவர்
தந்திரக்கிழவர்கடாங்கச்செல்லுமே.

1189 சுற்றுநின்றெரியுஞ்செம்பொன்மணிமுடிசுடரச்சூட்டி
வெற்றிவெண்குடையினீழல்வேந்தன்வீற்றிருக்குமேனு
மற்றவன்மனமுங்கண்ணும்வாழ்க்கையும்வலியுஞ்சால்பு
மற்றமிலாசுங்கோலுமாபவராமைச்சரன்றே.

1190 செறிந்தவர்தெளிந்தநூலார்சிறந்தவைதெரிந்துசொன்னு
லறிந்தவையமர்ந்துசெய்யுமமைதியானரசனாவான்
செறிந்தவர்தெளிந்தநூலார்சிறந்தவைதெரிந்துகூறி
யறிந்தவையியற்றுகிற்குமமைதியாரமைச்சராவார்.

1191 ஆற்றலென்றோதப்பட்டவரசர்கட்கவற்றின்மிக்க
வாற்றறான்சூழ்ச்சியென்பதாகலாலதனையாயு
மாற்றலாரமைச்சராகவமைச்சரோடமர்ந்துசெல்லு
மாற்றலானரசனுக்கினரியதொன்றில்லையன்றே.

1192 தண்ணியதடத்தவேயெனினுந்தாமரை
விண்ணியல்கதிரினால்விரியும்வேந்தரும்
புண்ணியப்பொதும்பரேபுரிந்துவைகினுங்
கண்ணியபுலவரானலர்தல்காண்டுமே.

1193 வால்வளைபரவிமேயும்வளர்திரைவளாகமெல்லாங்
கோல்வளைவுறாமற்காக்குங்கொற்றவனெடியனேனு
மேல்விளைபழியும்மெய்பவினைகளும்விலக்கிநின்றார்
நூல்விளைபுலவரன்றேநணங்குபோதணங்குதாரீர்.

திரிகடுகம்.

1194 ஐயறிவுந்தம்மையடையவொழுகுத
லெய்துவதெய்தாமைமுற்காத்தல்—வைகலு
மாறேற்குமுன்னர்நிலையறிதலிம்மூன்றும்
வீறுசால்பேரமைச்சர்கோள்.

சிறுபஞ்சமூலம்.

1195 தன்னிலையுந்தாழாததொழினிலையுந்துப்பெதிர்ந்தா
ரின்னிலையுமீடழியாநிலையுந்—துன்னி
யளந்தறிந்துசெய்வானரசமைச்சன்யாதும்
பிளந்தறிபுப்பேராற்றலாய.

### திருக்குறள்.

1196 கருவியுங்காலமுஞ்செய்கையுஞ்செய்யு
மருவினையுமாண்டதமைச்சு.

1197 வன்கண்குடிகாத்தல்கற்றறிதலாள்வினையோ
டைந்துடன்மாண்டதமைச்சு.

1198 பிரித்தலும்பேணிக்கொளலும்பிரிந்தார்ப்
பொருத்தலும்வல்லதமைச்சு.

1199 தெரிதலுந்தேர்ந்துசெயலுமொருதலையாச்
சொல்லலும்வல்லதமைச்சு.

1200 அறிகொன்றறியானெனினுமுறுதி
யுழையிருந்தான்கூறல்கடன்.

1201 பழுதெண்ணுமந்திரியிற்பக்கத்துட்டெவ்வோ
ரெழுபதுகோடியுறும்.

ஆகச்செய்யுள் 31, அமைச்சுமுற்றிற்று.

---

## ௫க-அதி. அடைந்தோர்ப்புரத்தல்.

---

### கந்தபுராணம்.

1202 ஈங்கிதுவுமன்றியெவரேனுந்தம்மடங்காத்
தீங்குபெறினுதவிசெய்யென்றிரந்திடலு
மாங்கொருவன்செய்யாததுமறுத்துத்தன்னுயிரைத்
தாங்கலுலகநடைதனக்குத்தக்கதுவோ.

1203 ஏவரெனினுமிடருற்றனராகி
யோவில்குறையொன்றுளரேலதுமுடித்தற்
காவிவிடினுமறனேமறுத்துளரேற்
பாவமலதுபழியுமொழியாதே.

### தணிகைப்புராணம்.

1204 பேதைமைப்பாலினாதல்பெருங்கிழமையினானதன்
மேதகநட்டோர்மாட்டுவிரவிடும்பிழைகளெல்லாங்
காதுநற்பாலவல்லகாதிடிற்கண்ணினோடி
நோதகவோச்சிமெல்லநோன்றவேயெறிகுவாரால்

### சேதுபுராணம்.

1205 பனவக்கொலைமுன்பாதகங்கள்பாற்றற்குளதுபரிகாரந்
தனைநம்பினரைவதைத்தபவஞ்சாயத்தாக்குநவமில்லை
கனகவரையும்பெரிதன்றுகருதுங்காலைக்காதலினான்
மனநண்புடையாருயிர்கவரும்வஞ்சம்பெரிதாமென்றிடலும்.

### நீதிநெறிவிளக்கம்.

1206 களைகணாத்தம்மடைந்தார்க்குற்றவழியுமற்றோர்
விளைவுண்ணிவெற்றுடம்புதாங்கார்—தளர்நடைய
வூனுடம்பென்றுபுகழுடம்போம்புதற்கே
நாணுடைப்பட்டார்கடாம்.

### இராமாயணம்.

1207 பெரியமானங்களுற்றபெற்றியோர்
போரிடைப்புறங்கொடுத்தஞ்சிப்போந்தவர்
நேர்வருதாயத்துநிரப்பினோர்பிறர்
சீரியர்கிளைஞரைமடியச்செற்றுளோர்.

1208 அடுத்தநாட்டரசியல்புடையவாணையாற்
படுத்தவர்பட்டவர்பகைஞரோடொரு
மடக்கொடிபயந்தவர்மைந்தராயினு
முடற்கொளத்தகையர்நம்முழைவந்தொன்றினால்.

1209 இன்றுவந்தானென்றுண்டோவெந்தையையாயைமுன்னங்
கொன்றுவந்தானென்றுண்டோவடைக்கலங்கூறுகின்றான்
றன்றிவந்தன்புசெய்புந்தனைவனுமவனேபின்னைப்
பின்றமென்றாலுநம்பாற்புகழன்றிப்பிறிதுண்டாமோ,

1210 பிறந்தநாட்டொடங்கியாருந் தலைபுக்கபெரியோன்பெற்றி
மறந்தநாளுண்டோவென்னைச்சரணெனவாழ்கின்றானைத்
துறந்தநாட்கின்றுவந்து துன்னினான்சூழ்ச்சியாலே
யிறந்தநாளன்றோவென்றுயிருந்தநாளாவதென்றான்.

1211 இடைந்தவர்க்கபயம்யாமென் றிரந்தவர்க்கெறிநீர்வேலை
கடைந்தவர்க்காகியாலமுண்டவற்கண்டிலீரோ
வுடைந்தவர்க்குதவானாகி லுள்ளதொன்றீயானாகி
னடைந்தவர்க்கருளானாகி னறமென்னாமாண்மையென்னாம்.

1212 நஞ்சினைமிடற்றுவைத்தநகைமழுவாளனானுந்
தஞ்செனமுன்னந்தானேதாதைபாற்கொடுத்துச்சாத
லஞ்சினேனபயமென்றவந்தணற்காகியந்நாள்
வெஞ்சினக்கூற்றைவென்றமேன்மையின்மேன்மையுண்டோ.

பெருந்தேவனார்பாரதம்.

1213 ஒன்றுநாம்பெண்கோவொன்றாதவென்பெண்கோ
வின்றசைதானென்கோயாதென்கோ—மென்றொடையாழ்ப்
பண்ணோட்டுமின்சொற்பணைத்தோளாய்சேர்ந்தவர்பாற்
கண்ணோட்டமில்லாதகண்.

ஆகச்செய்யுள் 12, அடைந்தோர்ப்புரத்தல் முற்றிற்று.

---

## ௫௨-அதி. மன்னரைச்சேர்ந்தொழுகல்.

---

### விநாயகபுராணம்.

1214 ஆளுமரசன்பாலன்புமவனுக்காவதறியறிவு
நாளுமவற்றைக்கலங்காமனங்குமுடிக்குமுளத் துணிவு
மூளும்வினைக்குத்தன்காத்தின்மொய்த்தபொருளின்விழைபாத
கோளுமுடையான்புரிவினையிற்சுற்றமுறாதுகுணமேயாம்.

1215 குடிப்பிறந்திருநூல்கற்றறிந்தமைச்சர்குணங்களுமுடையனுய்ச் சுற்றம், கடப்பிமரசனிடத்து நுமன்புங்கருதுவேற்றரசவாம் பண்பும், விடப்படாவின்சொல்வன்மையுமுருவும்வெருவுறாத் திண்மையுமருவி, யிடத்தொடுசெவ்வியறிந்து காலத்துக்கேற்றவு மரைப்பவன்றூதன்.

1216 உறுபொருள்காமம்விரும்புறாத்தூய்மையுயிர்க்கழிவுறினுமஞ் சாமை, மறுபுலத்தமைச்சர்துணைமையார்தன்மைவாய்மை சொற்சோர்வுறாத்துணிவு, மறுவறவுடையனுய்வழியுரைப்பான் மத்திமத்தூதனுமுடங்கல், குறுகுபுகொடுப்பான்கடைப்படுந் தூதன்கூறியவிவரையுந்தழீஇக்கொள்.

1217 இறைசிறப்பாகவணிவனநுகர்வவினிதுறுமேன்மையாதிகடா முறலறைபோதலுரிமையின்மருவலொண்பொருள்வெளவன் மன்னவன்முன், பிறர்செவிமொழிதல்பிறரொடுநகைத்தல் பேணுறுப்பண்புவேந்திளமை, முறைமதித்திகழ்தல்விரும்புறு வினையைமுடித்தலுஞ்சேர்ந்தவர்க்காகா.

1218 குறிப்பொடுகாலமறிந்திறைவிரும்பக்கோதறுபயன்மிகப்பயக் கும், வெறுப்பிலவினையைவிளம்பிவேண்டாதவினையினைக்கேட்பி னும்விளப பார், சிறப்புறவோர்வதாயினுமறைதான்செப்பிடிற் கேட்பினல்லாது, மறப்பினுந்தொடாரோர்தாரணுகார்மருங் ககலார்வினைவலித்தார்.

1219 அகத்திடைக்குறித்தகாரியமதனையையுறாதவாவர்விழியான் முகத்தினுலறியவல்லவனுகிமுகம்விழியிரண்டினுமன்றி யகத்திடைத்தனக்குநிகழ்ந்திடுங்குறிப்பாலவராவகக்குறிப்பறி ந்து, மிகத்தெளிபவனைக்கரிமுதலுறுப்புள்விழைவனகொடுத் துங்கொண்மைந்தா.

1220 தொகைபடுசெஞ்சொலிலக்கணச்சொல்லேரும்ந்திடுங்குறிப்புச் சொன்மூன்றின், வகையறிந்துயர்ந்தோரொத்தவர்தாழ்ந்தோர் மருவமூன்றவையுமாராய்ந்து, தகையுறவுயர்ந்தோரவையின்முன் துரையார்சமத்தினெவ்வாற்றினுங்கிளப்பார், நகைபடுதாழ்வி னென்றையுமொழியார்நகைபடாச்சொற்டொருளாய்ந்தோர்,

1221 வல்லவரவையுட்கற்றதஞ்சாது வகுத்துரைத்தவருண்மிக்கார்
நல்லவைகேட்பார்கற்றவர் தம்முணன்குறமதித்திடப்படுவார்
சொல்லவையஞ்சிக்கற்றனசெலுத்தாச்சோர்வினர்கற்றுங்கல்லாத
புல்லியரிருந்தும்பொன்றினாதனுற்போற்றுகவவையஞ்சாதவரை.

## சோமேசர்முதுமொழிவெண்பா.

1222 மாமனெனென்னுமதத்தாலுனையிகழ்ந்து
தாழுற்றார்தக்கனார்சோமேசா—வாமே
பழையமெனக்கருதிப்பண்பல்லசெய்யுங்
கெழுதகைமைகேடுதரும்.

## நீதிநெறிவிளக்கம்.

1223 இகழினிகழ்ந்தாங்கிறைமகனென்று
புகழினுமொக்கப்புகழ்ப—விகன்மன்னன்
சீர்வழிப்பட்டதேமன்பதைமற்றென்செய்யு
நீர்வழிப்பட்டபுணை.

1224 கைவரும்வேந்தனமக்கென்றுகாதலித்த
செவ்விதெரியாதுரையற்க—வெவ்வொருகா
லெண்மையனேனுமரியன்பெரிதம்மா
கண்ணிலனுள்வெயர்ப்பினான்.

1225 பழைமைகடைப்பிடியார்கேண்மையும்பாரார்
கிழமைபிறிதொன்றுங்கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மையுண்டேயிறைமாண்டார்க்கேதிலரு
மார்வலருமில்லையவர்க்கு.

1226 மன்னர்புறங்கடைகாத்துவறிதேயா
மெங்கலங்காண்டுமென்றெள்ளற்க—பன்னெடுநாட்
காத்தவையெல்லாங்கடைமுறைபோய்க்கைகொடுத்து
வேத்தவையின்மிக்குச்செயும்.

### இராமாயணம்.

1227 கருத்திலாவிறைவன்றீமைகருதினாலதனைக்காத்துத்
திருத்தலாமாகினன்றேதிருத்துகதீராதாயிற்
பொருத்துறுபொருளுண்டாமோபொருதொழிற்குரியராகி
யொருத்தரின்முன்னஞ்சாதலுண்டவர்க்குரியதம்மா.

### வில்லிபாரதம்.

1228 புன்னவையானமாற்றம்புகன்றனரெனினுங்கேட்டாங்
கின்னவைநன்றுநன்றென்றிதம்படமொழிவதல்லான்
மன்னவையிருந்துநாளும்வழிபடுமாந்தர்மன்னர்
சொன்னவைமறுத்துமாறுசொல்வரோசுருதிவல்லாய்.

1229 ஆவதுகருதானாகிலமைச்சர்சொற்கேளானாகில்
வீவதுகுறியானாகில்விளைவதுமுணரானாகி
னாவதுகாவானாகிலவனுக்காநடந்துபோரிற்
சாவதுபழுதென்றன்றேசகத்துளோர்சாற்றுகின்றார்.

### குசேலோபாக்கியானம்.

1230 அல்லதுமிகுநட்பேயென்றற்றரோக்காதுசெல்வி
லொல்லையினினக்குண்டாயிற்றுறுமவமானமெய்யே
நல்லதன்மனையின்வாக்குநறுநெயுண்டொளிர்வதேயென்
றெல்லடர்சுடரைமுத்தமிடிற்சுடாதமைவதுண்டோ.

### பெருந்தேவனார் பாரதம்.

1231 தடுமாற்றமின்றித்தகைசான்றசொல்லான்
வடுமாற்றம்வாய்சோரானாகி—விடுமாற்ற
மெஞ்சாதுகூறியிகல்வேந்தன்சீறுங்கா
லஞ்சாதமைவதுதூது.

1232 படையளவுகூறூர்பெரியார்முன்மாற்றூர்
படையளவிற்றென்றுவியவார்—கொடைவேந்த
னீத்தது கண்டின்புறூரேந்திழையார்தோள்சேரார்
பார்த்திபர்தூதாயடைந்தார்பண்பு.

1233 தானறிந்துகூறுந்தலைமற்றிடையது
கோனறைந்ததீதென்றுகூறுமாற்—றூனறியா
தோலையேகாட்டுங்கடையென்றெருமூன்று
மேலையோர்தூதுரைத்தவாறு.

1234 அன்புடைமையாய்ந்தவறிவுடைமையிற்பிறப்பு
நன்குடைமைநல்லநயனுடைமை—நன்கமைந்த
சுற்றமுடைமைவடிவுடைமைசொல்வன்மை
கற்றடங்காறூதின்கடன்.

பழமொழி.

1235 வெஞ்சினமன்னவன்வேண்டாதனசெயினு
நெஞ்சத்துட்கொள்வசிறிதுஞ்செயல்வேண்டா
வென்செய்தகப்பட்டக்கண்ணுமெழுப்புபவோ
துஞ்சுபுலியைத்துயில்.

1236 தீயனவல்லசெயினுந்திறல்வேந்தர்
காய்வனசெய்தொழுகார்கற்றறிந்தார்—காயும்
புலிமுன்னர்ப்புல்வாய்க்குப்போக்கிலதுவே
வலிமுன்னர்வைப்பாருமில்.

ஆசாரக்கோவை.

1237 *அறத்தொடுகல்யாணமாள்வினைகூரை
யிறப்பப்பெருகியக்கண்ணுந்திறப்பட்டார்
மன்னனின்மேம்பட்டசெய்யற்கசெய்பவேல
மன்னியசெல்வங்கெடும்.

திருக்குறள்.

1238 மன்னர்விழைபவிழையாமைமன்னரான்
மன்னியவாக்கந்தரும்.

1239 செவிச்சொல்லுஞ்சேர்ந்தநகையுமவித்தொழுக
லான்றபெரியாரகத்து.

1240 குறிப்பறிந்துகாலங்கருதிவெறுப்பில
வேண்டுபவேட்பச்சொலல்.

1241 இளையரினமுறையரென்றிகழார்நின்ற
வொளியோடொழுகப்படும்.

1242 கொளப்பட்டேமென்றெண்ணிக்கொள்ளாதசெய்யார்
துளக்கற்றகாட்சியவர்.

ஆகச்செய்யுள் 29, மன்னரைச்சேர்ந்தொழுகன்முற்றிற்று.

---

## ௯௯-அதி. மானம்.

---

### கந்தபுராணம்.

1243 கூறொடுவெதிரேபங்குதருடுபெருமைபாளு
ரூனமதனடைந்தபுன்மையாக்கையோடொழியுமம்மா
மானமதழிந்துதொல்லைவலியிழந்துலகில்வைகு
மேனையர்வசையின்மாற்றமெழுமையுமகல்வதுண்டோ.

1244 இறந்திடவரினுமல்லாவிடுக்கணென்றுறினுந்தம்பாற்
பிறந்திடுமானந்தன்னைவிடுவரோபெரியரானோர்
சிறந்திடுபிரண்டிநாளைச்செல்வத்தைவிரும்பியானுந்
துறந்திடேனபிடநதகொள்ளைகஞானென்றொருபேர்பெற்றேன்.

### விநாயகபுராணம்.

1245 பெருக்கத்துயர்வாம்பணிவொழியல்பேறாப்பணிவுசுருக்கத்திற்
செருக்கலின்றியமையாதுசிறப்பிற்றேனுமுயர்மான
முருக்கும்வினையைச்செயனியன்மொய்ம்பார்மானங்கெடவூழ்
துருக்குமெனிற்சாமரைமானையுன்னலேமகண்டனே. [வர்

1246 இழிந்ததொழிலினானுவதேயெய்தற்கரியநாணென்ப
ரொழிந்தமனவாக்குடலொடுக்கமொளிவாணுதலார்காணேயாங்
கழிந்துவிடநாண்மண்கோடல்கருதார்நலமெல்லாம்வளர்ப்பா
ரழிந்துநாண்மற்றுயிர்வாழாராவியழிந்துநாணுள்வார்.

## வில்லிபாரதம்.

1247 ஊனமேயானவூனிடையிருக்குமுயிரினைத்துறந்துமொண்பூணு
மானமேபுரப்பதவனிமேலெவர்க்கும்வரிசையுந்தோற்றமுமரபு
ஞானமேயானதிருவடிவுடையாய்ஞாலமுள்ளளவுநிற்றலினா
லீனமேயுயிருக்கியற்கையாதலினாலென்றனன்வீமனுக்
கிளையோன்.

## நாலடியார்.

1248 திருமதுகையாகத்திறனிலார்செய்யும்
பெருமிதங்கண்டக்கடைத்து—மெரிமண்டிக்
கானந்தலைப்பட்டதீப்போற்கனலுமே
மானமுடையார்மனம்.

1249 இம்மையுநன்றாமியனெறியுங்கைவிடா
தும்மையுநல்லபயத்தலாற்—செம்மையி
னானங்கமழுங்கதுப்பினாய்நன்றேகாண்
மானமுடையார்மதிப்பு.

1250 கடமாதொலைச்சியகானுறைவேங்கை
யிடம்வீழ்ந்ததுண்ணாதிறக்கு—மிடமுடைய
வானகங்கையுறினும்வேண்டார்விழுமியோர்
மானமழுங்கவரின்.

## நான்மணிக்கடிகை.

1251 பறைபடவாழாவசுணமாவுள்ளங்
குறைபடவாழாருரவோர்—நிறைவனத்து
நெற்பட்டகண்ணேவெதிர்சாந்தமக்கொவ்வாச்
சொற்பட்டாற்சாவதாஞ்சால்பு.

அறநெறிச்சாரம்.

1252 *தனக்குத்தகவல்லசெய்தாங்கோராற்று
லுணற்குவிரும்புங்குடரை—வனப்புற
வாம்பற்றுள்வாடலேபோலவகத்தடக்கித்
தேம்பத்தாங்கொள்வதறிவு.

1253 *தானத்தின்மிக்கதருமமுந்தக்கார்க்கு
ஞானத்தின்மிக்கவுசாத்துணையு—மான
மழியாவொழுக்கத்தின்மிக்கதூஉமில்லை
பழியாமல்வாழுந்திறம்.

மூதுரை.

1254 *உற்றவிடத்திலுயிர்வழங்குந்தன்மையோர்
பற்றலரைக்கண்டாற்பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவதல்லாற்பெரும்பாரந்தாங்கிற்
றளர்ந்துவளையுமோதான்.

நல்வழி.

1255 *பிச்சைக்குமூத்தகுடிவாழ்க்கைபேசுங்கா
லிச்சைபலசொல்லியிடித்துண்கை—சிச்சீ
வயிறுவளர்க்கைக்குமானமழியா
துயிர்விடுகைசாலவுறும்.

திருக்குறள்.

1256 இன்றியமையாச்சிறப்பினவாயினுங்
குன்றவருபவிடல்.

1257 மருந்தோமற்றூனோம்பும்வாழ்க்கைபெருந்தகைமை
பீடழியவந்தவிடத்து.

1258 மயிர்நீப்பின்வாழாக்கவரிமாவன்னா
ருயிர்நீப்பர்மானம்வரின்.

1259 இளிவரின்வாழாதமானமுடையா
ரொளிதொழுதேத்துமுலகு.

ஆகச் செய்யுள் 17, மானம் முற்றிற்று.

## ௯௪-அதி. முயற்சி.

---

### கந்தபுராணம்.

1260 ஆக்கமிங்கொருவராலாகவேண்டுமே
லூக்கமுண்டாவரேலுறுவரன்னது
நீக்கமில்கொள்கையினிற்பரேயெனின்
மேக்குறுபெருந்திருவினையின்மேவுமால்.

1261 நெடிதுபற்பகல்செல்லினுநினைப்பதொன்றை
யிடைவிடாயலேமுயன்றுபெற்றிடுகின்றதியற்கை
யுடல்வருந்தியுந்தளாளன்முடிவுறுதொன்றை
முடியுமீதெனக்கொள்வதுகயவர்தமுறையே.

### விநாயகபுராணம்.

1262 விடாதுதனுவிற்செயுமுயற்சிமென்மேற்பொருளைமிகவளர்க்
கும், கெடாதுசுற்றநட்பினர்தங்கிளையுந்தாக்கும்யாவர்க்குந்
தடாதவுபகாரமும்புரியுந்தடந்தாமரையாளையுஞ்சேர்க்கும்
படாதவூழ்வந்திடுகாலமவையனைத்தினைக்கும்பழியின்றும்.

### நீதிநெறிவிளக்கம்.

1263 உலையாமுயற்சிகளைகணாவூழின்
வலிசிந்தும்வன்மையுமுண்டே—யுலகறியப்
பான்முளைதின்றுமறலியுயிர்குடித்த
கான்முளையேபோலுங்கரி.

1264 காலமறிந்தாங்கிடமறிந்துசெய்வினையின்
மூலமறிந்துவிளைவறிந்து—மேலுந்தாஞ்
சூழ்வனசூழ்ந்துதுணைமைவலிதெரிந்
தாள்வினையாளப்படும்.

1265 மெய்வருத்தம்பாரார்பசிநோக்கார்கண்டுஞ்சா
ரெவ்வெவர்தீமையுமேற்கொள்ளார்—செவ்வி
யருமையும்பாராரவமதிப்புங்கொள்ளார்
கருமமேகண்ணாயினார்.

## தசேலோபாக்கியானம்.

1266 கலைமுழுதோர்ந்து கரிசெலாமறுத்தகாந்தனேபருமணியாவத்
தலைகிடந்திமைச்சுந்தாத்திரியதனிற்சாற்றருந்தக்கநன்முய
ற்சி, யுலைவறப்புரியாவொருவனுக்கெங்ஙனுற்றிடுஞ்செல்வ
நன்னிலத்தை, நிலைபெறவுழுது வித்திலான்றனக்குநீள்பய
னுற்றிடுங்கொல்லோ.

1267 மானிடனொருவன்றனக்கருஞ்செல்வம் வாய்க்கவென்றனுதின
முயற்சி, தானுஞற்றுவனேற்கடவுளுமதனைத்தந்தளிக்குவ
னதாலன்றே, வானபோற்றிஞர் திருவினைமுயற்சியாக்குமம்
முயற்சியிலாமை, யீனமாரின்மைபுகுத்திடுமாலென்றியாருநன்
குணர்தரநவில்வார்.

1268 செயத்தகுமுயற்சிசெய்திடிற்செயிர்தீர்செய்யவண்பணுளனு
மிரங்கி, வியத்தகவேண்டேமியாவையுமளிப்பனென்றிரும்புறு
முயற்சிசெய்யானே, னயத்தருபோகமளித்திடானென்று
நானிலத்தறிஞர்நன்குரைப்ப, நுயத்தருநெறிமாலடியுன
லென்றேயோர்ந்தமாதவப்பெருங்கடலே.

1269 முன்புநல்வினைசெய்தவர்முயற்றின்றிமுன்னியவெலாமுண்ப
ரெனினி, பின்பவாலரியேமுதலுபகரணமெலாமினிதுடையவ
ரேனும், வன்புறமிருதன்முயர்சியில்லாமைவயிற்றெழுபசித்தழ
லவிய, நன்பருமாபோமறைமுழுதுணர்ந்தநற்றவக்குணப்பெருங்
குன்றே.

1270 கடவுளிருவனென்றெண்ணிநித்தியமுங்கருதநமுயற்சிசெய்
யானே, லடனுழுசெல்வமடைகுவனேகொலருங்கலத்திட்டபா
லடிசில், மிடலுடைக்காத்தாலெடுத்துணுதெங்ஙன்னீங்கும்
வெப்பசிப்பிணியொழிப்ப, வுடல்பவர்தனக்கோராகாமரு
முடனனிவாட்டுமெய்த்தவத்தோய்.

### நாலடியார்.

1271 இசையாதெனினுமியற்றியோராற்று
லசையாது நிற்பதாமாண்மை—யிசையுங்காற்
கண்டறிரையலைக்குங்கானலந்தண்சேர்ப்ப
பெண்டிரும்வாழாரோமற்று.

### ஆசாரக்கோவை.

1272 *நற்றெறும்புதூக்கணம்புட்காக்கையென்றிவைபோற்
றங்கருமநல்லகடைப்பிடித்துத்தங்கரும
மப்பெற்றியாகமுயல்பவர்க்காசார
மெப்பெற்றியானும்படும்.

### திருக்குறள்.

1273 முயற்சிதிருவினையாக்குமுயற்றின்மை
யின்மைபுகுத்திவிடும்.

1274 மடியுளாண்மாமுகடியென்பமடியிலான்
றாளுளாடாமரையினாள்.

1275 பொறியின்மையார்க்கும்பழியன்றறிவறிந்
தாள்வினையின்மைபழி.

1276 தெய்வத்தானாகாதெனினுமுயற்சிதன்
மெய்வருத்தக்கூலிதரும்.

1277 ஊழையுமுப்பக்கங்காண்பருலைவின்றித்
தாழாதுஞற்றுபவர்.

ஆகச் செய்யுள் 18, முயற்சி முற்றிற்று.

---

## ௬௫-அதி. பொருட்சிறப்பு.

### கந்தபுராணம்.

1278 பிறந்தநல்லுயிர்க்கெலாம்பெருமைநல்கிய
விறந்ததோர்பொருண்மையதிரண்டின்வன்மையு
மறிந்தவர்தெரிவரேலரியகல்வியிற்
சிறந்தது திருவெனச்செப்பலாகுமால்.

1279 அளப்பருங்கல்வியுமாக்கமயாவையுங்
கொளப்படுதன்மையிற்குறைவுறாதவை
வளர்த்தலின்மேதகவனப்புச்செய்தலிற்
கிளத்திடின்மேலதுகேடில்செல்வமே.

1280 நூலுறுகல்வியைநுனித்துநாடியே
வாலறிவெய்தியவரதநிஞோர்களு
மேலுறுதிருவொடுமேவுறாரெனின்
ஞாலமங்கவர்தமைநவையுள்வைக்குமால்.

1281 அளப்பரும்விஞ்சையேயன்றிமேன்மையு
முளப்படுதன்மையுமுயர்ந்தசீர்த்தியுங்
கொளப்படுகொற்றமும்பிறவுங்கூட்டலால்
வளத்தினிற்சிறந்ததுமற்றொன்றில்லையே.

### திருவிளையாடற்புராணம்.

1282 நட்பிடைவஞ்சஞ்செய்துநம்பினோர்க்கூண்மாறூட்டத்
துட்படக்கவர்ந்துமேற்றோர்க்கும்பியுமுதவாரையும்
வட்டியின்பிதப்பக்கூறிவாங்கியுஞ்சிலர்போலீட்டப்
பட்டதோவறுத்தாறீட்டுநம்பொருள்படுமோவெனா.

### நீதிநெறிவிளக்கம்.

1283 இன்சொல்லளாவுநடையனாயினுமொன்றில்லானேல்
வன்சொல்லினல்லதுவாய்திறவா—வென்சொலினுங்
கைத்துடையான்காற்கீழொதுங்குங்கடன்ஞாலம்
பித்துடையவல்லபிற.

1284 இவறன்மைகண்டுமுடையாரையாருங்
குறையிரந்துங்குற்றேவல்செய்ப—பெரிதுந்தா
முற்பகனோலாதார்நோற்றாரைப்பின்செல்லல்
கற்பன்றேகல்லாமையன்று.

### இராமாயணம்.

1285 பூரியர்தமைவேந்தாக்கும்புவிபுரப்பிக்குந்துய்க்குஞ்
சீரியவுண்டிசேர்க்குந்தேவர்தம்முலகம்போக்குங்
காரியமனைத்துங்கூட்டுங்கருதலர்தம்மைவாட்டுங்
கூரியதிதன்மேலில்லைகொழும்பொனீர்கொண்மினென்றார்.

### மேருமந்தாபுராணம்.

1286 *குலம்பெரியகுணமறிவுவடிவுகுடிப்பிறப்புப்
பொலங்கையுடையவர்க்கலதுபுகழ்ச்சியினையடையா
விலங்குமனையாளும்பொருளில்லவிடத்திகழு
மலங்கல்வரைமார்பபொருளாதலினியழியல்.

### சீவகசிந்தாமணி.

1287 வென்றியாக்கலுமேதகவாக்கலுங்
குன்றினார்களைக்குன்றெனவாக்கலு
மன்றியுங்கல்வியோடழகாக்கலும்
பொன்றுஞ்சாகத்தினாய்பொருள்செய்யுமே.

1288 பொன்னினாகும்பொருபடையப்படை
தன்னினாகுந்தரணிதரணியிற்
பின்னையாகும்பெரும்பொருளப்பொரு
டுன்னுங்காலைத்துன்னாதனவில்லையே.

1289 செய்கபொருள்யாருஞ்செறுவாரைச்செறுகிற்கு
மெஃகுப்பிறிதில்லையிருந்தேயுயிரையுண்ணு
மையமில்லையின்பமறனோடெவையுமாக்கும்
பொய்யில்பொருளேபொருண்மற்றல்லபிறபொருளே.

### வளையாபதி.

1290 குலந்தருங்கல்விகொணர்ந்து முடிக்கு
மலந்தகிளைகளழிபசிநீக்கு
நிலம்பகவெம்பியநீள்சுரம்போகிப்
புலம்பில்பொருடரப்புன்கண்மையுண்டோ.

### நாலடியார்.

1291 வடுவிலாவையத்து மன்னியமூன்றி
னடுவணதெய்தவிருதலையுமெய்து
நடுவணதெய்தாதானெய்து முலைப்பெய்
தடுவது போலுந்துயர்.

1292 ஆகாதெனினுமகத்து நெய்யுண்டாகிற்
போகாதெறும்புபுறஞ்சுற்றும்—யாதுங்
கொடாஅரெனினுமுடையாரைப்பற்றி
விடாஅருலகத்தவர்.

1293 அருகலதாகிப்பலபழுத்தக்கண்ணும்
பொரிதாள்விளவினைவாவல்குறுகா
பெரிதணியராயினும்பீடிலார்செல்வங்
கருதுங்கடப்பாட்டதன்று.

### நான்மணிக்கடிகை.

1294 *கல்விற்பிறக்குங்கதிர்மணிகாதலி
சொல்லிற்பிறக்குமுயர்மத—மெல்லெ
னருளிற்பிறக்குமறநெறியெல்லாம்
பொருளிற்பிறந்துவிடும்.

1295 *நல்லார்க்குந்தம்மூரென்றாரில்லைநன்னெறிச்
செல்வார்க்குந்தம்மூரென்றாரில்லை—யல்லாக்
கடைகட்குந்தம்மூரென்றாரில்லைதங்கைத்
துடையார்க்குமெல்லாருமூர்.

### நல்வழி.

1296 *கல்லானேயானாலுங்கைப்பொருளொன்றுண்டாயி
னெல்லாருஞ்சென்றங்கெதிர்கொள்வ—ரில்லானை
யில்லாளும்வேண்டாண்மற்றீன்றெடுத்ததாய்வேண்டாள்
செல்லாதவன்வாயிற்சொல்.

### திருக்குறள்.

1297 பொருளல்லவரைப்பொருளாகச்செய்யும்
பொருளல்லதில்லைபொருள்.

1298 இல்லாரையெல்லாருமெள்ளுவர்செல்வரை
யெல்லாருஞ்செய்வர்சிறப்பு.

1299 செய்கபொருளைச்செறுநர்செருக்கறுக்கு
மெஃகதனிற்கூரியதில்.

1300 ஒண்பொருள்காழ்ப்பவியற்றியார்க்கெண்பொரு
ளேனையிரண்டுமொருங்கு.

ஆகச்செய்யுள் 23, பொருட்சிறப்பு முற்றிற்று.

---

## ௱௫௰-அதி. கல்வி.

---

### திருமந்திரம்.

1301 *வல்லார்களென்றும்வழியொன்றிவாழ்கின்று
ரல்லாதவர்களறிவுபலவெனபா
ரெல்லாவிடத்து முளனெங்கடம்மிறை
கல்லாதவர்கள்கலப்பறியாரே.

1302 *நில்லாநிலையைநிலையாகநெஞ்சத்து
நில்லாக்குரம்பைநிலையென்றுணர்வீர்கா
ளெல்லாவுயிர்க்குமிறைவனேயாயினுங்
கல்லாதார்நெஞ்சத்துக்காணவொண்ணாதே.

1303 *நில்லாது சீவனிலையன்றெனவெண்ணி
வல்லாரறத்துந்தவத்துளுமாயினார்
கல்லாமனிதர்கயவருலகினிற்
பொல்லாவினைத்துயர்போகஞ்செய்வாரே.

1304 *கல்லாதமூடரைக்காணவுமாகாது
கல்லாதமூடர்சொற்கேட்கக்கடனன்று
கல்லாதமூடர்க்குக்கல்லாதார்நல்லாராங்
கல்லாதமூடர்கருத்தறியாரே.

1305 *கற்றுஞ்சிவஞானமில்லாக்கலதிகள்
சுற்றமும்விடார்துரிசறார்மூடர்கள்
மற்றும்பலதிசைகாணார்மதியிலோர்
கற்றன்பினிற்போர்கணக்கறிந்தார்களே.

கந்தபுராணம்.

1306 மாற்படுபுந்தியின்மறுவில்சேதனம்
பாற்படுமுயிர்க்கெலாம்பவத்தின்மாண்பய
னாற்படுகல்வியினுவல்வளத்தினின்
மேற்படுகின்றதில்விழுமிதில்லையே.

1307 திருமைகொள்வளனொடுதீதில்கல்வியா
மிருமையினொன்றினையெய்திடாதெனி
னருமைகொளவ்வுயிரதனாற்றவும்
பெருமையதுடையதுபேயின்றோற்றமே.

விநாயகபுராணம்.

1308 உடல்வயத்தாகுஞ்சாதியுயர்ந்தவர்சாதிதாழ்ந்தோர்
திடமுறவுயிரினோடுசெல்லுறுங்கல்விதம்மா
லடர்தரும்பெருமையெய்தாராதலாலகக்கண்ணாகித்
தொடர்புறுங்கல்விகல்லாத்தொழிலினைவிடவேவேண்டும்.

1309 வறுமையான்மடமைதன்னால்வருந்திநெஞ்சழியுங்காலை
யுறுதிசெய்துணையாங்கற்றவுணர்வினைவளர்க்குமென்று
மிறுதியில்லாதவின்பமீட்டுமாதலினாற்கற்று
மறுவறுவொழுக்கமுள்ளார்வாய்மொழிகேட்டல்வேண்டும்.

1310 இழிந்தவனுயர்ந்ததொன்றையியம்பினுமுயர்ந்தோன்வாயி
னிழிந்ததொன்றுறினுமுள்ளவியல்பறிந்தோம்பிநீக்கிப்
பொழிந்தெனப்பிறர்தாங்கூறும்புலப்படாப்பொருளுந்தெள்ளி
வழிந்தெனத்தெளியக்கேட்டோர்மனங்கொளப்புகறல்வேண்டும்.

## திருக்குற்றாலப்புராணம்.

1311 இருவிழிகள்வாண்முகத்திலிருந்தாலும்வானிரவியெழுந்தா
லன்றிக், கருதுநிலப்பல்பொருளுங்காண்டலரிதாமுலகிற்
கண்போல்யாரும், பெருகியசெல்வமுமறிவும்பெற்றாலு
நூறகேள்விபெறுவார்க்கன்றிக், திருவளர்புண்ணியமாவ
திம்மைமறுமையும்வீடுந்தெரியாவன்றே.

## கூர்மபுராணம்.

1312 நூல்பலகற்றோனேனும்பொருணுனித்தறியானென்னின்
மாலொடும்வாளாகத்துமாநிறக்காகம்போல்வ
னேல்வுறக்கற்றநூலின்பொருடெரிந்திந்நூல்சொன்ன
சீலமேயொழுகுகின்றோஞ்சிவனடிநீழல்சேர்வான்.

1313 பொருவிலாவிதிகாசபுராணங்க
டெருளுமாந்தர்சிறப்புளராகுவர்
தருமநூலும்புராணத்தின்றன்மையுங்
கருதியோர்க்கவரேகலைவல்லரே.

## உபதேசகாண்டம்.

1314 கற்றிலாய்கலைகற்றுணரார்முக
முற்றுநோக்கின்மயானத்தையொக்குமால்
பெற்றுளார்பெறும்பேறுதங்காதலர்
சொற்றகல்வியிற்றூயரென்றோதலே.

### தாயுமானவர்பாடல்.

1315 கற்றதுங்கேட்டதுந்தானேயேதுக்காகக்
கட படமென்றுருட்டுதற்கோகல்லாலெம்மான்
குற்றமறக்கைகாட்டுங்கருத்தைக்கண்டு
குணங்குறியற்றின்பநிட்டைகூடவன்றோ.

### நன்னெறி.

1316 உடலின்சிறுமைகண்டொண்புலவர்கல்விக்
கடலின்பெருமைகடவார்—மடவரால்
கண்ணளவாய்நின்றதோகாணுங்கதிரொளிதான்
விண்ணளவாயிற்றோவிளம்பு.

1317 கற்றவறிவினரைக்காழறுவர்மென்மக்கள்
மற்றையர்தாமென்றுமதியாரே—வெற்றிநெடு
வேல்வேண்டும்வாள்விழியாய்வேண்டாபுளிங்காடி
பால்வேண்டும்வாழைப்பழம்.

1318 பொன்னணியும்வேந்தர்புனையாப்பெருங்கல்வி
மன்னுமறிஞரைத்தாமற்றெவ்வார்—மின்னுமணி
பூணும்பிறவுறுப்புப்பொன்னேயதுபுனையாக்
காணுங்கண்ணொக்குமோகாண்.

1319 பண்ணும்பனுவற்பயன்றேரறிவிலார்
மன்னுமறங்கள்வலியிலவே—நன்னுதால்
காழொன்றுயர்திண்கதவுவலியுடைத்தோ
தாழொன்றிலதாயிற்றான்.

### சோமேசர்முதுமொழிவெண்பா.

1320 மெய்த்ததிருவள்ளுவனார்வென்றுயர்ந்தார்கல்விநலர்
துய்த்தசங்கத்தார்தாழ்ந்தார்சோமேசா—வுய்த்தறியின்
மேற்பிறந்தாராயினுங்கல்லாதார்கீழ்ப்பிறந்துங்
கற்றாரனைத்திலர்பாடு.

## நீதிநெறிவிளக்கம்.

1321 அறம்பொருளின்பமும்வீடும்பயக்கும்
புறங்கடைநல்லிசையுநாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங்கைகொடுக்குங்கல்வியினூங்கில்லை
சிற்றுயிர்க்குற்றதுணை.

1322 தொடங்குங்காற்றுன்பமாயின்பம்பயக்கு
மடங்கொன்றறிவகற்றுங்கல்வி—நெடுங்காம
முற்பயக்குஞ்சின்னீரவின்பத்தின்முற்றிழாய்
பிற்பயக்கும்பீழைபெரிது.

1323 கல்வியேகற்புடைப்பெண்டிரப்பெண்டிர்க்குச்
செல்வப்புதல்வனேயீர்ங்கவியாச்—சொல்வள
மல்லல்வெறுக்கையாமாணவைமண்ணுறுத்துஞ்
செல்வமுமுண்டுசிலர்க்கு.

1324 எத்துணையவாயினுங்கல்வியிடமறிந்
துய்த்துணர்வில்லெனினில்லாகு—முய்த்துணர்ந்துஞ்
சொல்வன்மையின்றெனினென்னாமஃதுண்டேற்
பொன்மலர்நாற்றமுடைத்து.

1325 கலைமகள்வாழ்க்கைமுகத்ததெனினு
மலரவன்வண்டமிழோர்க்கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்புமாய்வனபோன்மாயாபுகழ்கொண்டு
மற்றிவர்செய்யுமுடம்பு.

1326 நெடும்பகற்கற்றவவையத்துதவா
துடைந்துளாருட்குவருங்கல்வி—கடும்பக
லேதிலான்பாற்கண்டவில்லினும்பொல்லாதே
தீதென்றுநீப்பரிதால்.

1327 வருந்தித்தாங்கற்றனவோம்பாதுமற்றும்
பரிந்துசிலகற்பான்றொடங்கல்—கருந்தனங்
கைத்தலத்தவுய்த்துச்சொரிந்திட்டரிப்பரித்தாங்
கெய்த்துப்பொருள்செய்திடல்.

1328 கற்றார்க்குக்கல்விநலனேகலனல்லான்
மற்றோரணிகலம்வேண்டாவா—முற்ற
முழுமணிப்பூணுக்குப்பூண்வேண்டாயாரே
யழகுக்கழகுசெய்வார்.

1329 முற்றமுணர்ந்தவரில்லைமுழுவதூஉங்
கற்றனமென்றுகளியற்க—சிற்றுளியாற்
கல்லுந்தகருந்தகராகனங்குழாய்
கொல்லுலைக்கூடத்தினால்.

1330 தம்மின்மெலியாரைநோக்கித்தமதுடைமை
யம்மாபெரிதென்றகமகிழ்க—தம்மினுங்
கற்றாரைநோக்கிக்கருத்தழிககற்றதெல்லா
மெற்றேயிவர்க்குநாமென்று.

1331 கற்பனவூழற்றாகல்விக்கழகத்தாங்
கொற்கமின்றாத்தைவாயங்காத்தன்—மற்றுத்தம்
வல்லுருவஞ்சன்பினென்படுவேமாபறவை
புல்லுருவஞ்சுவபோல்.

புறநானூறு.

13ง2 உற்றுழியுதவியுமுறுபொருள்கொடுத்தும்
பிற்றைநிலைமுனியாது கற்றனன்றே
பிறப்போரன்னவுடன்வயிற்றுள்ளுஞ்
சிறப்பின்பாலாற்றாயுமனந்திரியு
மொருகுடிப்பிறந்தபல்லோருள்ளு
மூத்தோன்வருகவென்னாதவரு
ளறிவுடையோனாறரசுஞ்செல்லும்
வேற்றுமைதெரிந்தநாற்பாலுள்ளுங்
கீழ்ப்பாலொருவன்கற்பின்
மேற்பாலொருவனுமவன்கட்படுமே.

## சீவகசிந்தாமணி.

1333 கைப்பொருள்கொடுத்துங்கற்றல்கற்றபின்கண்ணுமாகு
மெய்ப்பொருள்விளைக்குநெஞ்சின்மெலிவிற்கோர்துணையுமாகும்
பொய்ப்பொருள்பிறகள்பொன்றும்புகழுமாந்துணைவியாக்கு
மிப்பொருளெய்திநின்றீரிரங்குவதென்னையென்றான்.

## நாலடியார்.

1334 குஞ்சியழகுங்கொடுந்தானைக்கோட்டழகு
மஞ்சளழகுமழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாமென்னுநடுவுநிலைமையாற்
கல்வியழகேயழகு.

1335 இம்மைபயக்குமாலீயக்குறைவின்றாற்
றம்மைவிளக்குமாற்றூளராக்கேடின்றா
லெம்மையுலகத்தும்யாங்காணேங்கல்விபோன்
மம்மரறுக்குமருந்து.

1336 களர்நிலத்துப்பிறந்தவுப்பினைச்சான்றோர்
விளைநிலத்துநெல்லின்விழுமிதாக்கொள்வர்
கடைநிலத்தோராயினுங்கற்றுணர்ந்தோரைத்
தலைநிலத்துவைக்கப்படும்.

1337 வைப்புழிக்கோட்படாவாய்த்தீயிற்கேடில்லை
மிக்கசிறப்பினரசர்செறினவ்வா
ரெச்சமெனவொருவன்மக்கட்குச்செய்வன
விச்சைமற்றில்லைபிற.

1338 கல்விகரையிலகற்பவர்நாள்சில
மெல்லநினைக்கிற்பிணிபல—தெள்ளிதி
னாராய்ந்தமைவுடையகற்பவேநீரொழியப்
பாலுண்குருகிற்றெரிந்து.

1339 தோணியியக்குவான்றொல்லைவருணத்துக்
காணிற்கடைப்பட்டானென்றிகழார்—காணா
யவன்றுணையாவாறுபோயற்றேநூல்கற்ற
மகன்றுணையாநல்லகொளல்.

1340 அலகுசால்கற்பினறிவுநூல்கல்லா
துலகநூலோதுவதெல்லாங்—கலகல
கூஉந்துணையல்லாற்கொண்டுதடுமாற்றம்
போஒந்துணையறிவாரில்.

1341 நுண்ணறிவினோரொடுகூடிநுகர்வுடைமை
விண்ணுலகேயொக்கும்விழைவிற்று—நுண்ணூ
லுணர்விலராகியவூதியமில்லார்ப்
புணர்தனிரயத்துளொன்று.

1342 கல்லாதுநீண்டவொருவனுலகத்து
நல்லறிவாளரிடைப்புக்கு—மெல்ல
விருப்பினுநாயிருந்தற்றேயிராஅ
துரைப்பினுநாய்க்குரைத்தற்று.

## நான்மணிக்கடிகை.

1343 திரியழற்காணிற்றொழுபவிறகி
னெரியழற்காணினிகழ்ப—வொருகுடியிற்
கல்லாதுமூத்தானைக்கைவிட்டுக்கற்றா
னிளமைபாராட்டுமுலகு.

1344 கற்பக்கழிமடமஃகுமடமஃகப்
புற்கந்தீர்ந்திவ்வுலகிற்கோணுணருங்கோணுணர்ந்தாற்
றத்துவமாயநெறிபடருமந்நெறி
யிப்பாலுலகத்திசைநிறீஇயப்பா
லுயர்ந்தவுலகப்புகும்.

1345 கடற்குட்டம்போழ்வர்கலவர்படைக்குட்டம்
பாய்மாவுடையானுடைக்கிற்கும்—தோமி
றவக்குட்டந்தன்னுடையானீந்துமவைக்குட்டங்
கற்றான்கடந்துவிடும்.

1346 வாலிழையார்முன்னர்வனப்பிலான்பாடிலன்
சாலுமவைப்படிற்கல்லாதான்பாடிலன்
கற்றொருவனும்பாடிலனேகல்லாத
பேதையார்முன்னர்ப்படின்.

1347 மனைக்குப்பாழ்வாணுதலின்மைதான்செல்லுந்
திசைக்குப்பாழ்நட்டோரையின்மை—யிருந்த
வவைக்குப்பாழ்மூத்தோரையின்மைதனக்குப்பாழ்
கற்றறிவில்லாவுடம்பு.

1348 மனைக்குவிளக்கமடவாண்மடவா
டனக்குத்தகைசால்புதல்வர்—தனக்கினிய
காதற்புலவர்க்குக்கல்வியேகல்விதனக்
கோதிற்புகழ்சாலுணர்வு.

## திரிகடுகம்.

1349 நுண்மொழிநோக்கிப்பொருள்கொளலுநூற்கேலா
வெண்மொழிவேண்டினுஞ்சொல்லாமை—நன்மொழியைச்
சிற்றினமல்லார்கட்சொல்லலுமிம்மூன்றுங்
கற்றறிந்தார்பூண்டகடன்.

## பழமொழி.

1350 உணற்கினியவின்னீர்பிறிதுழியில்லென்னுங்
கிணற்றகத்துத்தேரைபோலாகார்—கணக்கினை
முற்றப்பகலுமுனியாதினிதோதிக்
கற்றலிற்கேட்டலேநன்று.

## அறநெறிச்சாரம்.

1351 பலகற்றோம்யாமென்றுதற்புகழவேண்டா
வலர்கதிர்ஞாயிற்றைக்கைக்குடையுங்காக்குஞ்
சிலகற்றார்கண்ணுமுளவாம்பலகற்றார்க்
கச்சாணியன்னதோர்சொல்.

1352 புண்ணாகப்போழ்ந்து புலால்பழிப்பத்தாம்வளர்ந்து
வண்ணப்பூண்பெய்வசெவியல்ல—நண்ணா
லறவுரைகேட்டுணர்ந்தஞ்ஞானநீக்கித்
துறவுரைகேட்பசெவி.

1353 பொருளிலொருவற்கிளமையும்போற்று
மருளிலொருவற்கறனும்—தெருளான
றிரிந்தாழ்ந்தநெஞ்சினன்கல்வியிம்மூன்றும்
பரிந்தாலுஞ்செய்யாபயன்.

## சிறுபஞ்சமூலம்.

1354 மயிர்வனப்புக்கண்கவருமார்பின்வனப்பு
முகிர்வனப்புங்காதின்வனப்பும்—செயிர்தீர்ந்த
பல்லின்வனப்பும்வனப்பல்லநூற்கியைந்த
சொல்லின்வனப்பேவனப்பு.

## மூதுரை.

1355 *கவையாகிக்கொம்பாகிக்காட்டகத்தேநிற்கு
மவையல்லநல்லமரங்கள்—சவைநடுவே
நீட்டோலைவாசியாநின்றான்குறிப்பறிய
மாட்டாதவனன்மரம்

1356 *மன்னனுமாசறக்கற்றோனுஞ்சீர்தூக்கின்
மன்னனிற்கற்றோன்சிறப்புடையன்—மன்னனுக்குத்
தன்றேசமல்லாற்சிறப்பில்லைகற்றோற்குச்
சென்றவிடமெல்லாஞ்சிறப்பு.

## நீதிவெண்பா.

1357 *ஆனைமருப்புமருங்கவரிமான்மயிருங்
கானவரியுகிருங்கற்றோரு—மானே
பிறந்தவிடத்தன்றிப்பிறிதொருதேசத்தே
சிறந்தவிடத்தன்றோசிறப்பு.

1358 *வாக்குநயத்தாலன்றிக்கற்றவரைமற்றவரை
யாக்கைநயத்தாலறியலாகாதே—காக்கையொடு
நீலச்சிறுகுயிலைநீடிசையாலன்றியே
கோலத்தறிவாரோகூறு.

திருக்குறள்.

1359 கற்ககசடறக்கற்பவைகற்றபி
னிற்கவதற்குத்தக.

1360 கண்ணுடையரென்பவர்கற்றோர்முகத்திரண்டு
புண்ணுடையர்கல்லாதவர்.

1361 உடையார்முனில்லார்போலேக்கற்றுங்கற்றார்
கடையரேகல்லாதவர்.

1362 தொட்டனைத்தூறுமணற்கேணிமாந்தர்க்குக்
கற்றனைத்தூறுமறிவு.

1363 யாதானுநாடாமாலூராமாலென்னொருவன்
சாந்துணையுங்கல்லாதவாறு.

1364 ஒருமைக்கட்டான்கற்றகல்வியொருவற்
கெழுமையுமேமாப்புடைத்து.

1365 தாமின்புறுவதுலகின்புறக்கண்டு
காமுறுவர்கற்றறிந்தார்.

1366 கேடில்விழுச்செல்வங்கல்வியொருவற்கு
மாடல்லமற்றையவை.

1367 அரங்கின்றிவட்டாடியற்றேநிரம்பிய
நூலின்றிக்கோட்டிகொளல்.

1368 கல்லாதான்சொற்காமுறுதன்முலையிரண்டு
மில்லாதாள்பெண்காமுற்றற்று.

1369 கல்லாதானொட்பங்கழியநன்றாயினுங்
கொள்ளாரறிவுடையார்.

1370 கல்லாவொருவன்றகைமைதலைப்பெய்து
சொல்லாடச்சோர்வுபடும்.

1371 நுண்மாணுழைபுலமில்லானெழினலம்
மண்மாண்புனைபாவையற்று.

1372 நல்லார்கட்பட்டவறுமையினின்னாதே
கல்லார்கட்பட்டதிரு.

1373 விலங்கொடுமக்களனையரிலங்குநூல்
கற்றாரோடேனையவர்.

1374 செல்வத்துட்செல்வஞ்செவிச்செல்வமச்செல்வஞ்
செல்வத்துளெல்லாந்தலை.

1375 கற்றிலனாயினுங்கேட்கவஃதொருவற்
கொற்கத்தினூற்றாந்துணை.

1376 பிழைத்துணர்ந்தும்பேதைமைசொல்லாரிழைத்துணர்ந்
தீண்டியகேள்வியவர்.

1377 நுணங்கியகேள்வியரல்லார்வணங்கிய
வாயினராதலரிது.

ஆகச் செய்யுள் 77, கல்விமுற்றிற்று.

---

## ௩௭. அதி. பெரியாரைத்துணைக்கோடல்.

---

### காஞ்சிப்புராணம்.

1378 சிறியராயினுஞ்சார்பினைவிழையன்மின்றிறல்கெழுபெரியோரா
மறிஞராயினுஞ்சார்பினைவிழைமின்றேவலரிதழ்விரிகொன்றை
வெறிகமழ்ந்தொடையெம்பிரான்சார்பினைவிழைதலாலுரகங்கண்
மறுவிலாற்றற்சால்கலுழனைவிஞாயினவாழ்ந்தனபோலவென்ன.

### விநாயகபுராணம்.

1379 விழுப்பொருளுண்மையும்விளங்கத்தெள்ளுபு
முழுப்பவைம்பொறியையுமுனிந்துநீத்தவர்
வழுப்படாமறையவர்மற்றைக்கல்வியோர்
குழுப்புறத்தாதரங்கூர்தல்வேண்டுமால்.

1380 நுண்மையறனுமிகத்தெளிந்துநூலினியல்புமுலகியல்பும்
வண்மையுறத்தேற்றிடுமாற்றல்வல்லராகிவளர்சீலந்
திண்மையறிவாயுளின்முதிர்ந்தோர்சேரன்குமதித்திடுக
வெண்மைபுரியாதுயர்ந்திடுகவியம்பும்வழியேநின்றிடுக.

### பாகவதம்.

1381 *விடமும்வந்தீசன்கோலமிடற்றினினீலவண்ண
வடிவுபெற்றணியதாகிவயங்கிற்றுப்பெரிதுமென்றாற்
கொடியரும்பெருமையோரைக்கூடின்வெங்கோதுநீங்கி
யொடிவறுநலம்பெற்றுய்தலுரைப்பதென்னுலகினம்மா.

1382 *அளிசெயுமனத்தராகியைம்புலனடக்கியென்று
மொளிகொடுபுனிதமேன்மையுவப்பருஞ்சமனுற்றுள்ளார்
தெளிவுறுபெரியோர்தம்மைச்சேரினல்லன்புகூருங்
களிதருமன்புகூரிற்கலக்குநல்லறிவுதானே.

### ஞானவாசிட்டம்.

1383 *அறக்குறைவைநிறைவாக்குஞ்சம்பத்தாக்குமாபத்தைச்சுப
மாக்குமசுபந்தன்னைச், சிறக்குமுயர்ந்தவர்கூட்டமென்னுங்
கங்கைச்சீதநீராடினர்க்குச்செந்தீவேள்வி, யிறக்கரியதவந்தானந்
தீர்த்தம்வேண்டாவிடர்பந்தமறத்தெவர்க்குமினியோராகிப்
பிறப்பெனும்வேலைப்புணையாமுணர்வுசான்றபெரியோரை
யெவ்வகையும்பேணல்வேண்டும்.

1384 *தவங்களாற்றெய்வமோரற்சாத்திரங்களினாற்போகாப்
பவங்களையுயர்ந்தோர்பாதம்பணிந்துபற்றறுக்கவேண்டு
மவங்களாங்காமகோபமறவுந்தேய்ந்தியற்கையான
சுவங்களினடந்துநன்னூற்றுறைநின்றோருயர்ந்தமேலோர்.

### சிவ - தோன்றி.

1385 *அஞ்சையுமறுத்தமேலோரடிதொழுதெழுவராகில்
வஞ்சமாமனத்தரேனுமறிந்துறவணங்கல்வேண்டுஞ்
செஞ்சடையொருவன்கண்டஞ்சேர்தரப்படுதலாலே
நஞ்சமுமுலகுக்கெல்லாந்தொழப்படுநலத்ததன்றே.

1386 *அழுக்குடைச்சாதியோருமடைந்துமெய்ஞ்ஞானிதன்னை
விழுப்புடைத்தலைவராவர்வேதகக்குளிகைசேர்ந்த
விழுக்குடையிரும்புஞ்செம்புமிலங்குசெம்பொன்னுமாங்கே
யொழுக்கமோடவன்றாள்சேர்மினோங்குவீடெய்தலுற்றார்.

### பட்டினத்தடிகள்பாடல்.

1387 நல்லாரிணக்கமுநின்பூசைநேசமுஞானமுமே
யல்லாதுவேறுநிலையுளதோவகமும்பொருளு
மில்லாளுஞ்சுற்றமுமைந்தரும்வாழ்வுமெழிலுடம்பு
மெல்லாம்வெளிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே.

### இராமாயணம்.

1388 கரியமாலினுங்கண்ணுதலானினு
முரியதாமரைமேலுறைவானினும்
விரியும்பூதமோரைந்தினுமெய்யினும்
பெரியரந்தணர்பேணுதியுள்ளத்தால்.

1389 அந்தணாளர்முனியவுமாங்கவர்
சிந்தையாலருள்செய்யவுந்தேவரி
னொந்துளாரையுநொய்துயர்ந்தாரையு
மைந்தவெண்ணில்வரம்புமுண்டாங்கொலோ.

### குசேலோபாக்கியானம்.

1390 ஆயின்மறைமுதற்கலைகளனைத்துமுணர்ந்தமறம்பாத்
தேயினிதுநன்றிதுதீதென்றுணர்த்துமவர்நட்டை
வீயினுந்தாமறப்பர்களோமேதையோர்மறப்பரே
னாயினுங்கீழ்ப்பட்டவர்களவர்காணிந்நானிலத்தே.

1391 நல்லார்சொல்விரும்புவது நல்லாரைக்காண்பதுவு
நல்லார்க்கொன்றுதவுவது நல்லாரைப்புகழ்வதுவு
நல்லார்நன்றென்றுரைப்பநவிற்றியவிவ்வெலாமடங்க
நல்லார்நட்பென்றுபூறனன்றன்றேநான்மறையோய்.

1392 பொன்னுள்ளான்பூமியுள்ளான்புந்தியுள்ளானாயிடினு
மென்னுள்ளானவனவனிருந்தவர்நட்பிலனேற்
பொன்னில்லான்பூமியில்லான்புந்தியில்லானாயிடினு
மென்னில்லானவனவனிருந்தவர்நட்புளனேல்.

1393 பேயோடுபழகுறினும்பிரிவதரிதரிதென்று
தூயோர்கண்மொழிவராற்றூயோரும்புகழ்தூயோ
ராயோர்கள்பெருநட்பையருந்தவத்தாற்பெறலன்றி
யேயோவெண்மையிற்கிடைப்பினிகழ்வரோவிகழ்வில்லார்.

1394 சமயம்வரினிடித்துரைப்பார்தக்கவழிச்செலச்செய்வா
ரிமையவர்தமுலகுறவுமிருளுலகம்பகையுமா
யமையவறிவுறுத்துவாரந்தோநூல்கற்றுணர்ந்த
கமையுடையார்நட்பெவர்க்குக்காண்கிடைக்குமரிதரிது.

1395 கூடுதற்குக்கூடாதகூட்டத்துப்படுநட்பு
வீடுதற்குத்தக்கதாய்நாடோறுமெலிந்தொழியு
நீடுதற்குத்தக்கதுநன்னெறிநின்றோர்நட்பொன்றே
தேடுதற்குக்கிடையாததிரவியமுமஃதாமால்.

1396 முத்திக்குவித்தாகுமுழுதுணர்ந்தோர்பெருநட்பே
நித்திக்குநாடோறுந்தேவர்பெறற்கருந்திருவுஞ்
சித்திக்கும்படியருளுஞ்செப்பரிதாலதுநிற்க
வெதிக்கும்புகழ்நினைக்கியவண்மணநன்காயிற்றே.

## நாலடியார்.

1397 அறியாப்பருவத்தடங்காரோடொன்றி
நெறியல்லசெய்தொழுகியவ்வு —நெறியறிந்த
நற்சார்வுசாரக்கெடுமேவெயின்முறுகப்
புற்பனிப்பற்றுவிட்டாங்கு.

1398 இறப்பவினையுங்காலின்றொ தனினும்
பிறப்பினையாருமுனியார்—பிறப்பினுட்
பண்பாற்றநெஞ்சத்தவர்களோடெஞ்ஞான்று
நண்பாற்றிநட்கப்பெறின்.

1399 ஊரங்கணநீருரவுநீர்ச்சேர்ந்தக்கால்
பேரும்பிறிதாகித்தீர்த்தமா—மோரும்
குலமாட்சியில்லாருங்குன்றுபோனிற்பர்
நலமாட்சிநல்லாரைச்சார்ந்து.

1400 ஒண்கதிர்வாண்மதியஞ்சேர்தலாலோங்கிய
வங்கண்விசும்பின்முயலுந்தொழப்படூஉங்
குன்றியசீர்மையராயினுஞ்சீர்பெறுவர்
குன்றன்னார்கேண்மைகொளின்.

1401 பாலோடளாயநீர்பாலாகுமல்லது
நீராய்நிறந்தெரிந்துதோன்றாதாந்—தேரிற்
சிறியார்சிறுமையுந்தோன்றாதாநல்ல
பெரியார்பெருமையைச்சார்ந்து.

## நான்மணிக்கடிகை.

1402 இரும்பினிரும்பிடைபோழ்பபெருஞ்சிறப்பி
னீருண்டார்நீரால்வாய்பூசுப—தேரி
னரியவரியவற்றாற்கொளபபெரிய
பெரியாரானெய்தப்படும்.

1403 *கந்திற்பிணிப்பர்களிற்றைக்கதந்தவிர
மந்திரத்தினாற்பிணிப்பர்மாநாகங்—கொந்தி
யிரும்பிற்பிணிப்பர்கயத்தைச்சான்றோரை
நயத்திற்பிணித்துவிடல்.

## அறநெறிச்சாரம்.

1404 *நட்டாரைவேண்டினாறுமென்கருப்பினுய்
விட்டாரையல்லாறுகொள்வேண்டா—விட்டார்

பொறிசுணங்குமென்பூலைப்பொன்னனையுய்ப்பர்
மறிதரவில்லாக்கதி.

1405 *காலொடுகைபமுக்கிப்பிள்ளையைவாய்நெரித்துப்
பாலொடுநெய்பெய்யுந்தாயனையர்—சால
வடக்கத்தைவேண்டியறன்வலிதுநாளுங்
கொடுத்துமேற்கொண்டொழுகுவார்.

மூதுரை.

1406 *நல்லாரைக்காண்பதுவுநன்றேநலமிக்க
நல்லார்சொற்கேட்பதுவுநன்றே—நல்லார்
குணங்களுரைப்பதுவுநன்றேயவரோ
டிணங்கியிருப்பதுவுநன்று.

திருக்குறள்.

1407 அறனறிந்துமூத்தவறிவுடையார்கேண்மை
திறனறிந்துதேர்ந்துகொளல்.

1408 அரியவற்றுளெல்லாமரிதேபெரியாரைப்
பேணித்தமராக்கொளல்.

1409 தம்மிற்பெரியார்தமராவொழுகுதல்
வன்மையுளெல்லாந்தலை.

1410 பல்லார்பகைகொளலிற்பத்தடுத்ததீமைத்தே
நல்லார்தொடர்கைவிடல்.

ஆகச் செய்யுள் 33, பெரியாரைத்துணைக்கோடல் முற்றிற்று.

---

## ௬௯-அதி. பெரியாரைப்பிழையாமை.

---

விநாயகபுராணம்.

1411 தீத்தவாக்கியோர்நெருப்புயிர்த்திடிற்
காத்திடுங்கடவுளுங்கலக்குமாதலா
லேத்துவதேகடனென்றமைந்தனை
யாத்தர்கள்பொறுப்பரோவமதித்திடேல்.

1412 குரவரைப்பெரியரைக்கூறுமாகம
விரவுறுமறைகளேமேதகும்படி
பரவுதலலதவர்பாங்கர்நிந்தனை
கரவுறவுளத்தினுங்கருதொணாததே.

1413 ஆற்றன்மிகுந்தவேந்தரையுமரியதவத்துமுனிவரையும்
போற்றியொழுகினெப்பொருளும்போற்றலாகுமவமதிப்பிற்
றேற்றமிகுஞ்சார்பினரேனுஞ்சிதைவர்திகழ்முப்புரர்சூரன்
சாற்றிந்திரன்மாலாதியருந்தளர்ந்தாரெனிற்சாற்றுவதென்னே.

### கூர்மபுராணம்.

1414 கடவுளர்தம்மைவேதமுனிவரைக்கடவுட்கற்பின்
மடநலார்தம்மைக்கூர்வேன்மன்னரைமுனிந்துசீறிச்
சுடுசொலாலிகழ்வோர்பாவந்தொலைந்திடவேண்டினவைக்
கடியவெங்கொள்ளிதன்னாற்கருக்கிடவேண்டுமன்றே.

### சிவ - ஞானசாரம்.

1415 *பெரியமாமுனிவன்றன்னைப்பேதைமையதனின்மிக்குத்
தெரிவிலாதொருவன்சொல்லுந்தீமொழியதனினாலே
யரியதீநரகந்தன்னிலழுந்துமோர்கற்பமென்று
புரிவிலாமறைகளெல்லாம்புகன்றிடும்போதமிக்கோய்.

1416 *தேவர்க்குந்தேவனாகித்திகழ்தருஞானிதன்னைப்
பாவத்தினொருவன்மிக்குப்பண்ணியநிந்தைசொல்லிற்
றூவற்றயன்மாலீசனாருண்முதற்சகத்தியார்க்கு
மோவற்றகொடியநிந்தையெனமறையுரைக்குமன்றே.

1417 *தன்னுணர்பரமபோகிதனக்கிழுக்கதனைச்சொல்லன்
முன்னூறுமறையோர்தம்மைவதைத்தபாவத்திற்கோடி
சொன்னதுகேட்டலொக்கத்துணிதல்கோவதையிற்கோடி
யென்னவேமறைகளெல்லாமெடுத்துரைசெய்ததன்றே.

1418 *தத்துவவித்தாமேலோன்றனக்கொருதீமைதன்னைப்
புத்தியானினையினுந்தான்பொருட்களவதனிற்கோடி
மத்தமாமலரிற்கூடன்மத்யபானத்திற்கோடி
யொத்தபாகங்களென்றேயுரைத்தனமறைகளன்றே.

19 *கொடுங்கடுமொழிகொடுங்கோதின்ஞானியை
வடுவதுபேசிடுமறுவில்பாதக
னிடைவிடலறவெரிநரகில்வீழ்ந்தழிந்
துடுமதியளவுமங்குழைத்துமாயுமே.

20 *அறிவினிலதிர்தருமரியயோகியை
மறுவதுபேசிடுமதியில்பாதக
னுறுபுழுநரகில்வீழ்ந்தூழியூழியங்
கிறுதுயர்படுவதையியம்பலாகுமோ.

21 *உன்னருமறிவினமிக்குணருஞானியை
யின்னல்செய்பாதகனெழுகுலத்துள
துன்னரும்பிதிரர்களொடுஞ்சுழன்றுதாம்
வெந்நரகில்விழுவேதமோதுமே.

22 *தோமறுஞானியைத்துகளுரைத்தவ
ரேழுறக்கேட்டவரிசைந்திருந்தவ
ராமெனமதித்தவரவரிற்கூடியோர்
தாமிவர்பஞ்சபாதகரிற்றண்ணியோர்.

23 *உள்ளத்தேயுணர்வுநட்டயோகியைநிந்தைகேட்கிற்
றுள்ளத்தன்செவிபுதைத்துத்தூரத்தாய்போலவேயாங்
கள்ளத்தார்தம்மைக்காணல்கருதுதன்மொழிதல்வேண்டா
வள்ளற்பாதகரைக்கோறலறத்தையுமவித்ததன்றே.

### சிவ-தத்துவப்பிரகாசம்.

24 *ஒழுக்கமேபுரிந்தோருதலதனைவிட்டொழிந்தோருத
விழுக்கஞ்செய்மூர்க்கருதல்பண்டிதருதலெண்ணில்
பழிப்பருஞானர்தன்னின்முயல்பவன்பணியத்தக்கோன்
றொழத்தகுஞானியென்றேசொல்லவேண்டுவதுமுண்டோ.

### நீதிநெறிவிளக்கம்.

1425 பணியப்படுவார்புறக்கடையராகத்
தணிவில்களிப்பினுட்டாழ்வார்க்—கணிய
கிளையாண் முயக்கெனினுஞ்சேய்த்தன்றேமுத்தாள்
புணர்முலைப்போகங்கொளல்.

### இராமாயணம்.

1426 தகையுறுதம்முனைத்தாயைத்தந்தையை
மிகையுறுதாவரையுலகின்வேந்தனைப்
பகையுறவநதலுந்துறந்தபண்பிது
நகையுறலன்றியுநயக்கற்பாலதோ.

### நாலடியார்.

1427 பொறுப்பரென்றெண்ணிப்புரைதீர்ந்தார்மாட்டும்
வெறுப்பனசெய்யாமைவேண்டும்—வெறுத்தபி
னார்க்குமருவியணிமலைநன்னாட
பேர்க்குதல்யார்க்குமரிது.

### பழமொழி.

1428 நெறியாலுணராதுநீர்மையுமின்றிச்
சிறியாரெளியார்களென்று—பெரியாரைத்
தக்கனைவைத்துத்தகவல்லகூறுத
றிங்களைநாய்குரைத்தற்று.

### ஆசாரக்கோவை.

1429 * நின்றக்கானிற்கவடக்கத்தாலென்று
மிருந்தக்காலேவாமையேகார்—பெருந்தக்கார்
சொல்லிடைச்செவிசாய்த்துக்கேட்டிகவீட்டும்
வினவற்கசொல்லொழிந்தக்கால்.

### திருக்குறள்.

1430 பெரியாரைப்பேணுதொழுகிற்பெரியாராற்
பேராவிடும்பைதரும்.

1431 எரியாற்சுடப்படினுமுய்வுண்டாமுய்யார்
பெரியார்ப்பிழைத்தொழுகுவார்.

1432 இறந்தமைந்தசார்புடையாராயினுமுய்யார்
சிறந்தமைந்தசீரார்செறின்.

ஆகச்செய்யுள் 22, பெரியாரைப்பிழையாமை முற்றிற்று.

---

## ௯௰௧-ம் அதி. குடிமை.

---

### விநாயகபுராணம்.

1433 உன்னன்மொழிதல்செயலாமுன்னெறித்தொழுங்கட்வாய்மையுநாணி
ழுக்கார், மன்னுமனையிற்பிறந்தார்களாபலர்நம்மிகையிகழாமை
நன்னர்மொழியுமவர்நகையாநனையப்பவாவின்னாவழும்ம
யின்னாவிடத்தும்புரியார்களோமநண்டாவினிபறியோ.

### அரிச்சந்திரசரிதை.

1434 நிலத்தியல்பற்றேகொண்முநீரியல்பதனாற்றங்கள்
குலத்தியல்பெவர்க்குமன்னவாழினுங்கெடினுங்குன்று
தலத்தரசனன்றுநீங்கித்தவத்தனானுந்தொல்லை
நலத்ததுபோமோவெனாநரபதிகளினிதுரைத்தான்.

### நீதிநெறிவிளக்கம்.

1435 நத்தநிலைக்குங்குடிமைக்குந்தப்பாமே
பொத்தகடப்பாட்டிற்றானென்றி—யெப்புக
மறங்கடையிற்செல்லார்பிறன்பொருளும்வெஃகார்
புறங்கடையதாகும்பொருள்.

### இராமாயணம்.

1436 பிறந்திறந்துபோய்ப்பெறுவ தியாதெனிற்பயத்துமம்புயமே
னிறந்திறப்பினுநியாயமேதிறப்பினுநெறியின்
றிறந்திறம்பினுஞ்செய்தவந்திறம்பினுஞ்செயிர்தீர்
மறந்திறப்பினும்வரன்முறைதிறப்புதல்வழக்கோ.

### நாலடியார்.

1437 உடுக்கையுலறியுடம்பழிந்தக்கண்ணுங்
குடிப்பிறப்பாளர்தங்கொள்கையிற்குன்றா
ரிடுக்கண்டலைவந்தக்கண்ணுமரிமா
கொடிப்புற்கறிக்குமோமற்று.

1438 சான்றாண்மைசாயலொழுக்கமிவைமூன்றும்
வான்றோய்குடிப்பிறந்தார்க்கல்லது—வான்றோயு
மைதவழ்வெற்பபடாஅபெருஞ்செல்வ
மெய்தியக்கண்ணும்பிறர்க்கு.

1439 இனநன்மையின்சொலொன்றீதன்மற்றேனை
மனநன்மையென்றிவையெல்லாங்—கனமணி
முத்தோடிமைக்குமுழங்குவரித்தண்சேர்ப்ப
விற்பிறந்தார்கண்ணேயுள.

1440 ஒருபுடைபாம்புகொளினுமொருபுடை
யங்கண்மாஞாலம்விளக்குறூஉந்திங்கள்போற்
செல்லாமைசெவ்வனேர்நிற்பினுமொப்புரவிற்
கொல்கார்குடிப்பிறந்தார்.

1441 கடித்துக்கரும்பினைக்கண்டகரநூறி
யிடித்துநீர்கொள்ளினுமின்சுவைத்தேயாகும்
வடுப்படவைதிறந்தக்கண்ணுங்குடிப்பிறந்தார்
கூறார்தம்வாயிற்சிதைந்து.

1412 கள்ளார்கள்ளுண்ணார்கடிவகடிந்தொரீஇ
யெள்ளிப்பிறரையிகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய்கூறார்வடுவறுகாட்சியார்
சாயிற்பரிவதிலர்.

### திரிகடுகம்.

1413 கயவரைக்கையிகந்துவாழ்தனயவரை
நள்ளிருளுங்கைவிடாநட்டொழுகறெள்ளி

வடுவானவாராமற்காத்தலிம்மூன்றுங்
குடிமாசிலார்க்கேயுள.

திருக்குறள்.

1444 இற்பிறந்தார்கண்ணல்லதில்லையியல்பாகச்
செப்பமுநாணுமொருங்கு.

1445 அடுக்கியகோடிபெறினுங்குடிப்பிறந்தார்
குன்றுவசெய்தலிலர்.

1446 சலம்பற்றிச்சார்பிலசெய்யார்மாசற்ற
குலம்பற்றிவாழ்துமென்பார்.

1447 நலத்தின்கணாரின்மைதோன்றினவனைக்
குலத்தின்கணையப்படும்.

ஆகச்செய்யுள் 15, குடிமை முற்றிற்று.

---

௭௰-அதி. நட்பு.

---

விநாயகபுராணம்.

1448 அழிதருநெறியிற்செலவினைவிலக்கியாம்வழிச்செலுத்தியூழ்
வினையா, லழிவுவந்தடுப்பினதற்குடனல்லாந்தாக்கைவேறன்றி
யாருயிர்க, ளொழிவகையினறியுணர்ச்சியொத்தருநூலுணர்
தொழுமுறநயம்போலக், கழிமகிழ்நாளுநட்பயின்றொறும்வளரக்
கலப்பதேநட்பெனப்படுமால்.

1449 நன்மதியுடைமைகுடிகுணங்குற்றநல்வினைத்தானுமெத்திறத்தும்
பன்முறையாய்ந்துநட்பினைக்கொள்கபாயமொடுபழகினும்பிரித
லின்மையாமதனாலாய்ந்தலாலொருவரிடத்துநட்புறேலுறினவர்
செய், புன்மையும்பழியும்புணர்ந்திருபயனும்போக்குவதுண்மை
புத்திரனே.

1450 கெடுதியிலுதவவல்லவர்நட்பாற்கிளைத்திடாதொன்றனைச்செயினுங்
கெடும்வகைசெய்தல்வேண்டினதாமேகெழுவுதல்பணிவச்ச
மின்மை, பதெருமூழிற்புரியினுமவற்றைப்பழைமையென்
றறிந்துளமுவப்பி, னெடுநிலமுழுதுங்கேண்மையாமைந்தா
நேரலார்தாமுங்கேளாவார்.

1451 காதலரேனும்விடுவிலைமாதர்கள்வரிற்றமக்குறல்குறிப்போர்
பேதையர்கெடுதியுற்றழியுதவர்பெரும்பொருளைகுவித்துப்
பிரிப்பர, ராதருகருமநதம்மினுகாததாகவேநடிப்பவருளமு
மோதலுமொவ்வார்மனைக்கெழீஇமன்றினுறப்பழிப்பாரிவர்
தன்மையே.

## நன்னெறி.

1452 நல்லார்செயுங்கேண்மைநாடோறுநன்றாகு
மல்லார்செயுங்கேண்மையாகாதே—நல்லாய்கேள்
காய்முற்றிற்றின்றீங்கனியாமிளந்தளிர்நாள்
போய்முற்றினென்னாகிப்போம.

1453 கற்றறியார்செய்யுங்கடுநட்புந்தாங்கூடி
யுற்றழியுந்தீமைநிகழ்வுள்ளதே—பொற்றொடீஇ
சென்றுபடர்ந்தசெழுங்கொடிமென்பூமலர்ந்த
வன்றேமணமுடையதாம்.

## புறநானூறு.

1454 *விளைபதச்சீறிடநோக்கிவளைகதிர்
வல்சிகொண்டளைமல்கவைக்கு
மெலிமுயன்றனையராகியுடையதம்
வளன்வலியுறுக்குமுளமிலாளரொ
டியைந்தகேண்மையில்லாகியரோ
கடுங்கட்கேழலிடம்படவீழ்ந்தென
வன்றவணுண்ணாதாகிவழிநாட்
பெருமலைவிடரகம்புலம்பவேட்டெழுந்
திருங்களிற்றொருத்தனல்வலம்படுக்கும்
புலிபசித்தன்னமெலிவிலுள்ளத்
தூரனுடையாளர்கேண்மையோ
டியைந்தவைகலுளவாகியரோ.

1455 *பொன்னுந்துகிருமுத்து மன்னிய
மாமலைபயந்தகாமருமணியு
‡மிடைபடச்சேயவாயினுந்தொடைபுணர்ந்
தருவிலைநன்கலமமைக்குங்காலை
யொருவழித்தோன்றியாங்கென்றுஞ்சான்றோர்
சான்றோர்பாலராப
சாலார்சாலார்பாலராகுபவே.

## நாலடியார்.

1456 காதலார்சொல்லுங்கடுஞ்சொல்லுவந்துரைக்கு
மேதிலாரின்சொலிற்றீதாமோ—போதெலா
மாதர்வண்டார்க்குமலிகடற்றண்சேர்ப்ப
வாவதறிவார்ப்பெறின்.

1457 வேற்றுமையின்றிக்கலந்திருவர்நட்டக்காற்
றேற்றாவொழுக்கமொருவன்கணுண்டாயி
னாற்றுந்துணையும்பொறுக்கபொறானாயிற்
றூற்றாதேதூரவிடல்.

1458 இன்னாசெயினுமினியவொழிகென்று
தன்னையேதானோவினல்லது—துன்னிக்
கலந்தாரைக்கைவிடுதல்கானகநாட
விலங்கிற்கும்விள்ளலரிது.

1459 பெரியவர்கேண்மைபிறைபோலநாளும்
வரிசைவரிசையாநந்தும்—வரிசையால்
வானூர்மதியம்போல்வைகலுந்தேயுமே
தானேசிறியார்தொடர்பு.

1460 கனைகடற்றண்சேர்ப்பகற்றறிந்தார்கேண்மை
நுனியிற்கரும்புதின்றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின்றன்னதகைத்தரோபண்பிலா
வீரமிலாளர்தொடர்பு.

1461 கல்லாரேயாயினுங்கற்றாரைச்சேர்ந்தொழுகி
னல்லறிவுநாளுந்தலைப்படுவர்—தொல்சிறப்பி
னொண்ணிறப்பாதிரிப்பூச்சேர்தலாற்புத்தோடு
தண்ணீர்க்குத்தான்பயந்தாங்கு.

1462 களிகடற்றண்சேர்ப்பநாணிழற்போல
விளியுஞ்சிறியவர்கேண்மை—விளிவின்றி
யல்குநிழற்போலகன்றகன்றோடுமே
தொல்புகழாளர்தொடர்பு

1463 நறுமலர்த்தண்கோதாய்நட்டார்க்குநட்டார்
மறுமையுஞ்செய்வதொன்றுண்டோ—விறுமளவு
மின்புறுவவின்புற்றெழீஇயவரோடு
துன்புறுவதுன்புறுக்கால்.

1464 யானையனையவர்நண்பொரீஇநாயனையார்
கேண்மைதழீஇக்கொளல்வேண்டும்—யானை
யறிந்தறிந்தும்பாகனையேகொல்லுமெறிந்தவேல்
மெய்யதாவால்குழைக்குநாய்.

1465 பலநாளும்பக்கத்தாராயினுநெஞ்சிற்
சிலநாளுமொட்டாரோடொட்டார்—பலநாளு
நீத்தாரெனக்கைவிடலுண்டோதன்னெஞ்சத்
தியாத்தாரோடியாத்ததொடர்பு.

1466 கோட்டுப்பூப்போலமலர்ந்துபிற்கூம்பாது
வேட்டதேவேட்டதாநட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போன்முன்மலர்ந்துபிற்கூம்புவாரை
நயப்பாருநட்பாருமில்.

1467 கடையாயார்நட்பிற்கமுகனையரேனை
யிடையாயார்தெங்கினனையர்—தலையாயா
ரெண்ணரும்பெண்ணைபோன்றிட்டஞான்றிட்டதே
தொன்மையுடையார்தொடர்பு.

1468 ‡செறுத்தோறுடைப்பினுஞ்செம்புனலோடூடார்
மறுத்துஞ்சிறைசெய்வர்நீர்நசைவாழ்நர்
வெறுப்பவெறுப்பச்செயினும்பொறுப்பரே
தாம்வேண்டிக்கொண்டார்தொடர்பு.

1469 நல்லாரெனத்தாநனிவிரும்பிக்கொண்டாரை
யல்லாரெனினுமடக்கிக்கொளல்வேண்டும்
நெல்லுக்குமியுண்டுநீர்க்குநுரையுண்டு
புல்லிதழ்பூவிற்குமுண்டு.

1470 இன்னாசெயினும்விடுதற்கரியாரைத்
துன்னத்துறத்தறகுவதோ—துன்னருஞ்சீர்
விண்குத்துநீள்வரைவெற்பகளைபவோ
கண்குத்திற்றென்றுதங்கை.

1471 இலங்குநீர்த்தண்சேர்ப்பவின்னாசெயினுங்
கலந்துபழிகாணார்சான்றோர்—கலந்தபிற்
றீமையெடுத்துரைக்குந்திண்ணறிவில்லாதார்
தாமுமவரிற்கடை.

1472 தங்கண்மரபில்லார்பின்சென்றுதாமவரை
யெங்கண்வணக்குதுமென்பவர்—புன்கேண்மை
நற்றளிர்ப்புன்னைமலருங்கடற்சேர்ப்ப
கற்கிள்ளிக்கையிழந்தற்று.

1473 பெருகுவதுபோலத்தோன்றிவைத்தீப்போ
லொருபொழுதுஞ்செல்லாதேநந்து—மருகெல்லாஞ்
சந்தனநீள்சோலைச்சாரன்மலைநாட
பந்தமிலாளர்தொடர்பு.

## நான்மணிக்கடிகை.

1474 *பறைநன்றுபண்ணமையாயாழினிறைநின்ற
பெண்ணன்றுபீடிலாமாந்தரிற்—பண்ணழிந்
தார்தலினன்றுபசித்தல்பசைந்தாரிற்
றீர்தலிற்றீப்புகுதனன்று.

‡ செறுத்தோறு = அடைக்குந்தோறும்.

## பழமொழி.

1475 கண்பொன்றித்தம்மாலேநட்கப்பட்டார்களைக்
கண்கண்டகுற்றமுளவெனினுங்காய்ந்தீயார்
பண்கொண்டதீஞ்சொற்பணைத்தோளாயாருளரே
தங்கன்றுசாக்கறப்பார்.

1476 விலங்கேயுந்தம்மோடுடனுறைதன்மேவுங்
கலந்தாரைக்கைவிடுதலொல்லா—விலங்கருவி
தாவியிழியுமலைநாடவின்றே
பேனயொடானும்பிரிவு.

1477 கொழித்துக்கொளப்பட்டநண்பினவரைப்
பழித்துப்பலர்நடுவட்சொல்லாடாரென்கொல்
விழித்தலருநெய்தற்றுறைவவுரையா
ரிழித்தக்ககாணிற்கனு.

## அறநெறிச்சாரம்.

1478 *இம்மையடக்கத்தைச்செய்துபுகழாக்கி
யும்மையுயர்கதிக்குய்த்தலான்—மெய்ம்மையே
பட்டாங்கறமுரைக்கும்பண்புடையாளரே
நட்டாரெனப்படுவார்.

1479 *நட்டாரெனப்படுவார்நாடுங்கால்வையத்துப்
பட்டாம்பலபிறப்புத்துன்பமென்—றொட்டி
யறநெறிகைவிடாதாசாரங்காட்டிப்
பிறநெறிபோக்கிறபவர்.

1480 *காயவுரைத்துக்கருமஞ்சிதையாதார்
தாயரோடொவ்வாரோதக்கார்க்கு—வாய்பணிந்
துள்ளமுருகவுரைத்துப்பொருள்கொள்வார்
கள்ளரோடொவ்வாரோதாம்.

## மூதுரை.

1481 *அற்றகுளத்தினறுநீர்ப்பறவைபோ
லுற்றுழித்தீர்வாருறவல்ல—ரக்குளத்திற்
கொட்டியுமாம்பலுநெய்தலும்போலவே
யொட்டியுறுவாருறவு.

## திருக்குறள்.

1482 முகநகநட்பதுநட்பன்றுநெஞ்சத்
தகநகநட்பதுநட்பு.

1483 உடுக்கையிழந்தவன்கைபோலவாங்கே
யிடுக்கண்களைவதாநட்பு.

1484 இனையரிவரெமக்கின்னம்யாமென்று
புனையினும்புல்லென்னுநட்பு.

1485 ஆய்ந்தாய்ந்துகொள்ளாதான்கேண்மைகடைமுறை
தான்சாந்துயரந்தரும்.

1486 குணனுங்குடிமையுங்குற்றமுங்குன்றா
வினனுமறிந்தியாக்கநட்பு.

1487 குடிப்பிறந்துதன்கட்பழிநாணுவானைக்
கொடுத்துங்கொளல்வேண்டுநட்பு.

1488 அழச்சொல்லியல்லதிடித்துவழக்கறிய
வல்லார்நட்பாய்ந்துகொளல்.

1489 ஊதியமென்பதொருவற்குப்பேதையார்
கேண்மையொரீஇவிடல்.

1490 மருவுகமாசற்றார்கேண்மையொன்றீத்து
மொருவுகவொப்பிலார்நட்பு.

1491 பேதைமையொன்றோபெருங்கிழமையென்றுணர்க
நோதக்கநட்டார்செயின்.

1492 பருகுவார்போலினும்பண்பிலார்கேண்மை
பெருகலிற்குன்றலினிது.

1493 உறினட்டறினொரூஉமொப்பிலார்கேண்மை
பெறினுமிழப்பினுமென்.

1494 கனவினுமின்னாதுமன்னோவினைவேறு
சொல்வேறுபட்டார்தொடர்பு.

1495 முகத்தினினியநகாஅ வகத்தின்னா
வஞ்சரையஞ்சப்படும்.

ஆகச்செய்யுள் 48, நட்புமுற்றிற்று.

---

## ௪௧-அதி. பகை.

---

### கந்தபுராணம்.

1496 ஏற்றெழுவன்னிமேலினிதுதுஞ்சலாந்
தோற்றியவெவ்விடமெனினுந்துய்க்கலா
மாற்றலரிலத்திடவந்தவெந்துய
ராற்றரிதாற்றரிதலமிப்புன்மையே.

### விநாயகபுராணம்.

1497 இகலைமதித்தின்னமைமொழிபயற்றினோர்க்குப்புரியாமேற்
பகையுமுறவாம்பெருஞ்செலவமபலிக்குங்கெடாதபுகழுண்டா
மிகலின்மிகுந்தினைறங்கியற்றினினியதமருமோபெறிலராய்ப்
பகைமைவளருமவலிதொலையும்பாழ்க்கும்பாழாவாழ்க்கையுமே.

1498 மெலியதெனவெள்ளியபகையேமிகுந்துகெடுக்குமிகுகதிடுமு
னலிகவினைதாழ்வுறியமுறம்பிகதநல்லாரெனவுந்தெளியாது
மலினரெனவுநோதுமலரோமருவலொழிதல்புரியற்க
வலிசெய்பகையாநிகள்பெருக்கவகையாய்ந்திருக்கபகைமையறு.

### நீதிநெறிவிளக்கம்.

1499 சிறியபகையெனினுமோம்புதறேற்றார்
பெரிதும்பிழைபாடுடையா—நிறைகயத்
தாழ்நீர்மடுவிற்றவளைகுதிப்பினும
யானைநிழல்காண்பரிது.

1500 புறநட்டகம்வேர்ப்பார்நச்சுப்பகைமை
வெளியிட்டுவேறுதல்வேண்டும்—கழிபெருங்
கண்ணோட்டஞ்செய்யார்கருவியிட்டாற்றுவார்
புண்வைத்துமூடார்பொதிந்து.

1501 நட்பிடைக்குய்யம்வைத்தெய்யாவினைசூழ்ந்து
‡வட்கார்திறத்தராய்நின்றார்க்குத்—திட்பமா
நாளுநலந்தகைநேரநிவனடுவின்மை
வாளாகிடப்பன்மறந்து.

### சூளாமணி.

1502 எரியுந்தீத்திரளொட்டிணைத்தாயினுங்
கரியச்சுட்டிடுங்காந்திக்கனலுமேற்
றெரியிற்றெல்பகைதான்சிறிதாயினும்
விரியப்பெற்றபின்வென்றிகெடுப்பவே.

1503 முட்கொணச்சுமாமுளையாகவே
யுட்கிநீக்கினுகிரினுங்கொல்லலாம்
வட்கிநீண்டதற்பின்னமழுவுந்தழு
கட்குடாரமுந்தாங்கலாகாப்பகைவர்.

### சீவகசிந்தாமணி.

1504 அஞ்சனக்கோலினாற்றநாகமோருவிக்குக்கறிற்
குஞ்சரப்புலமயிர்முக்கூர்நுதிமடாவிற்றிற்கொல்லும்
பஞ்சிபின்மெல்லவித்தனுமபமாகத்திரிந்தலைவேவடா
வஞ்சித்தறக்காக்கவேண்டுமரும்பொருளாயவென்றான்.

‡ வட்கார் = பகைவர்.

1505 தொழுதகையினுள்ளுங்கறுமுடியகத்துஞ்சோர
வழுதகண்ணீரினுள்ளுமணிகலத்தகத்துமாய்ந்து
பழுதகண்ணரிந்துகொல்லும்படையுடனொடுங்கும்பற்று
தொழிகயார்கண்ணுந்தேற்றந்தெளிதற்றார்விளிதற்றாரே.

### திருக்குறள்.

1506 இகலின்மிகலினிதென்பவன்வாழ்க்கை
தவலுங்கெடலுநணித்து.

1507 இகலானாமின்னாதவெல்லாநகலானா
நன்னயமென்னுஞ்செருக்கு.

1508 பகையென்னும்பண்பிலதனையொருவ
னகையேயும்வேண்டற்பாற்றன்று.

1509 வாள்போல்பகைவரையஞ்சற்கவஞ்சுக
கேள்போல்பகைவர்தொடர்பு

1510 உடம்பாடிலாதவர்வாழ்க்கைகுடங்கருட்
பாம்போடுடனுறைந்தற்று.

ஆகச்செய்யுள் 15, பகை முற்றிற்று.

---

## ௬௨. அதி. சிற்றினஞ்சேராமை.

---

### விநாயகபுராணம்.

1511 நல்லவினைக்குநற்பயனுந்தீயவினைக்குத்தீப்பயனு
மில்லையெனும்வல்லிழுதையருமெள்ளுமவிடருந்தூர்த்தர்களுஞ்
சொல்லுநடருமுதலாகத்தொக்ககுழுவைச்சேர்ந்தொழுகின்
புல்லுமறிவைத்திரித்திருமைப்பொருளுங்கெடுக்குமடுகழோடே.

1512 பழிமுதனானசெய்வனதவிர்வபார்த்திடார்குடிப்பிறப்பொழுக்க
மெழில்வளர்கல்வியாதிகள்பேறாரெவரையுமுறிக்குஞ்சொற்
செயலார், கழியகிழ்வுடையார்கெடுதிகொண்டாக்கங்கைவிடுவார்
செல்வமுறினும், கொழிபன்னாய்த்தார்பிறர்க்கலாற்றமர்க்குக்
கொடாரிவர்பேதையரொழிக.

1513 தன்னையெப்பொருளுமறிந்தவனாகத்தான்மிகமதிக்கும்புல்லறிவின், வன்மையையுடையானாறுதிச்சொற்சேளான்வல்லதல்லாதுங்கொண்டுரைத்துப், புன்மையைத்தெரிப்பானவைபுரிந்துலகோர்போனடிப்பான்றன்னையுணர்ந்து, நன்மதியினனையறிவிலாரகாட்டுவனிவனையுநண்ணேல்.

சீகாளத்திப்புராணம்.

1514 உணுஞ்சுவையமுதையுமுயர்வொழித்திடும்
பிணம்படுமுடம்பினைப்பேணித்தீத்தொழி
லிணங்குபுதிரிதருமிழுதைமாந்தரைப்
பணிந்திடன்மக்களிற்பதடியென்பரால்.

பாகவதம்.

1515 *சீலமுற்றயர்ந்தவர்ச்சேரின்வீடுறு
மாலையுற்றறிவிலார்மருங்கடைந்திடின்
வேலையுற்றலைதரும்பென்னவெம்பவக்
கோலமுற்றிறந்திறந்துழல்கூடுமால்.

தாயுமானவர்பாடல்.

1516 ஆரிரஞ்சொன்னாலுமறியாதவஞ்சநெஞ்சப்
பேயரொடுகூடிற்பிழைகாண்பராபரமே.

இராமாயணம்.

1517 உடலிடைத்தோன்றிற்றொன்றையறுத்ததனுதிரமூற்றிச்
சுடருறச்சுட்டுவேறோர்மருந்தினாற்றுயரந்தீர்வர்
கடலிடைக்கோட்டந்தேய்த்துக்கழிவதுகருமமன்றா
மடலுடையலங்கன்மார்பமதியுடையவர்க்குமன்றே.

நாலடியார்.

1518 உள்ளத்தானள்ளாதுறதித்தொழிலாய்க்
கள்ளத்தானட்டார்கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்புநின்றலைக்கும்பூங்குன்றநாட
மனத்துக்கண்மாசாய்விடும்.

1519 இசைந்தசிறுமையியல்பிலாதார்கட்
பசைந்ததுணையும்பரிவாம்—அசைந்த
நகையேயும்வேண்டாதநல்லறிவினார்கட்
பகையேயும்பாடுபெறும்.

1520 ஆன்படுநெய்பெய்கலனுளதுகளைந்து
வேம்படுநெய்பெய்தனைத்தரோ—தேம்படு
நல்வரைநாடநயமுணர்வார்நட்பொரீஇப்
புல்லறிவினாரொடுநட்பு.

1521 உணரவுணருமுணர்வுடையாரைப்
புணரப்புணருமாமின்பம்—புணரிற்
றெரியத்தெரியுந்தெரிவிலாதாரைப்
பிரியப்பிரியுமாநோய்

1522 மனத்தான்மறுவிலரேனுந்தாஞ்சேர்ந்த
வினத்தாலிகழப்படுவர்—புனத்து
வெறிகமழ்சந்தனமும்வேங்கையும்வேமே
யெறிபுனந்தீப்பட்டக்கால்.

### நான்மணிக்கடிகை.

1523 மொய்சிதைக்குமொற்றுமையின்மையொருவனைப்
பொய்சிதைக்கும்பொன்போலுமேனியைப்—பெய்த
கலன்சிதைக்கும்பாலின்சுவையைக்குலஞ்சிதைக்குங்
கூடார்கட்கூடிவிடின்.

### அறநெறிச்சாரம்.

1524 * சுற்றத்தைநன்றென்றுங்கொண்டுகுணமின்றிச்
செற்றமுதலாவுடையாரைத்—தெற்ற
வறிந்தாரென்றேத்துமவர்களைக்கண்டாற்
றுறந்தொழுவார்தூய்க்காட்சியார்,

### முதுரை.

1525 *தீயாரைக்காண்பதுவுந்தீதேதிருவற்ற
றீயார்சொற்கேட்பதுவுந்தீதே—தீயார்
குணங்களுரைப்பதுவுந்தீதேயவரோ
டிணங்கியிருப்பதுவுந்தீது.

### நீதிவெண்பா.

1526 *நிந்தையிலாத்தூயவருநிந்தையரைச்சேரிலவர்
நிந்தையதுதப்பிடத்தேநிற்குமே—நிந்தைமிகு
தாலநிழற்கீழிருந்தானறன்பாலருந்திடினும்
பாலதெனச்சொல்லுவரோபார்.

1527 *நல்லொழுக்கமில்லாரிடஞ்சேர்ந்தநல்லோர்க்கு
நல்லொழுக்கமில்லாச்சொனண்ணுமே—சொல்லும்விடப்
பாம்பெனவன்றோபழுதையேயானாலுந்
தாம்பமரும்புற்றடுத்தாற்சொல்,

### திருக்குறள்.

1528 சிற்றினமஞ்சும்பெருமைசிறுமைதான
சுற்றமாச்சூழ்ந்துவிடும

1529 நிலத்தியல்பானீர்திரிந்தற்றாகுமாந்தர்க்
கினத்தியல்பதாகுமறிவு.

1530 மனத்தானாமாந்தர்க்குணர்ச்சியினத்தானா
மின்னானெனப்படுஞ்சொல்,

1531 நல்லினத்தினூங்குந்துணையில்லைதீயினத்தி
னல்லற்படுப்பதூஉமில்.

**ஆகச்செய்யுள் 21, சிற்றினஞ்சேராமை முற்றிற்று.**

---

### கந்தபுராணம்.

1532 பொருளலதொன்றினைப்பொருளெனக்கொடு
வெருவுதல்செய்வதும்வினையமோர்கிலா
தொருசெயல்விரைந்துசெய்துயங்கிவாழ்தலும்
பெரியவர்கடமையோபேதைத்தன்மையே.

1533 உறுதியையுரைத்தனனுணர்விலாதவன்
வறிதெனவிகழ்ந்தனன்வருவதோர்கில
னிறம்வகைநாடினன்யாதோர்புந்தியை
யறிவிலர்க்குரைப்பவரவரிற்பேதையோர்.

1534 உய்த்தனர்தேன்மழையுதவிப்போற்றினுங்
கைத்திடறவிருமோகாஞ்சிரங்கனி
யத்தகவல்லவோவறிவிலாதவன்
சித்தமதுணர்வகைதெருட்டுகின்றதே.

### விநாயகபுராணம்.

1535 அழுக்கற்றெவர்க்கும்வடுக்காண்பாரச்சமாசையாலன்றி
பொழுக்கம்புரியார்மறைபிறர்பாலுய்த்துமொழிவார்தம்போல
விழுக்குக்கேதுங்கவலார்முனேற்றமாகிச்செம்மாப்பார்
மழுக்குவார்க்கேபயன்படுவார்வறிதும்வறியார்க்கிடார்கயவர்,

### திருக்குற்றாலப்புராணம்.

1536 கிளர்பொருள்கல்விசெல்வங்கிளைகளும்படைத்துசீர்க்கா
விளமையும்பெற்றுன்வாழ்வோர்க்கிவைகளிலொன்றேபோதும்
வினைபொருளொருங்காமமிடரிடைவீழ்ப்பதானுன்
வளர்குடிப்பிறந்தாரேனும்வாழ்வுண்டோமதியற்றோர்க்கே,

## மாயூரப்புராணம்.

1537 *பயன்படுகல்வியில்லான்பிணிதவிர்சரீரம்பற்று
னயந்தருகுணச்சாதுக்கணட்புறான்சொற்றவார்த்தை
வியந்துகொண்மனைவிமைந்தர்மேவுறானிவன்மண்மேலா
லியங்குபுதிரிவானேனும்பிரேதமென்றிசைக்கலாமால்.

## ஞானவாசிட்டம்.

1538 *அவிவேகிக்குப்பாரஞ்சாத்திரமெய்யறிவிலோர்க்கங்கம்பார
நவில்சாந்தியில்லாதோர்க்குளம்பாரமவாவினர்க்குஞானம்பாரஞ்
செவிதானவுருவாழ்நாண்மனம்புந்தியகங்காரஞ்செயல்களெல்லாங்
குவிபாரமாஞ்சுமடர்சுமைபோலப்புந்திநலங்கூடாதார்க்கே.

## பட்டினத்தடிகள்பாடல்.

1539 வாதுக்குச்சண்டைக்குப்போவார்வருவார்வழக்குரைப்பார்
தீதுக்குதவியுஞ்செய்திடுவார்தினந்தேடிப்பொன்று
மாதுக்களித்துமயங்கிடுவார்விதிமாளுமட்டு
மேதுக்கிவர்பிறந்தாரிறைவாகச்சியேகம்பனே.

1540 கடுஞ்சொல்லின்வம்பரையீனரைக்குண்டரைக்காமுகரைக்
கொடும்பவமேசெயுநிர்மூடர்தம்மைக்குவலயத்து
ணெடும்பனைபோலவளர்ந்துநல்லோர்தநெறியறியா
விடும்பரையேன்வகுத்தாயிறைவாகச்சியேகம்பனே.

1541 ஓயாமற்பொய்சொல்வர்நல்லோரைநிந்திப்பருற்றுப்பெற்ற
தாயாரைவைவர்சதியாயிரஞ்செய்வர்சாத்திரங்க
ளாயார்பிறர்க்குபகாரஞ்செய்யார்தமையண்டினர்க்கொன்
றீயாரிருந்தென்னபோயென்னகாண்கச்சியேகம்பனே.

## நன்னெறி.

1542 அறிவுடையாரன்றியதுபெறுவர்தம்பாற்
செறிபழியையஞ்சார்சிறிதும்—பிறைநுதால்
வண்ணஞ்செய்வாள்விழியேயன்றிமறைநருட்டிக்
கண்ணஞ்சுமோவிருளைக்கண்டு.

## நீதிநெறிவிளக்கம்.

1543 கற்றனகல்லார்செவிமாட்டிக்கையுறூஉங்
குற்றந்தமதேபிறிதன்று—முற்றுணர்ந்துந்
தாமவர்தன்மையுணராதார்தம்முணரா
வேதிலரைநோவதெவன்.

1544 முடிப்பமுடித்துப்பின்மூசுவமூசி
யுடுப்பவுடுத்துண்பவுண்டு—விடித்திடித்துக்
கட்டுரைகூறிற்செவிக்கொளாகண்விழியா
நெட்டுயிர்ப்போடுற்றபிணம்.

1545 கண்கூடாப்பட்டது கேடெனினுங்கீழ்மக்கட்
குண்டோவுணர்ச்சிமற்றில்லாகு—மண்டெரி
தான்வாய்மடுப்பினுமாசுணங்கண்டுயில்வ
போபெருமூச்செறிந்து.

## வில்லிபாரதம்.

1546 ஒன்றுதவிசெய்யினுமவ்வுதவிமறவாமற்
பின்றையவர்செய்பிழைபொறுத்திடுவர்பெரியோர்
நன்றிபலவாகவொருநவைபுரிவரேனுங்
கன்றிடுவதன்றிமுதுகயவர்நினையாரே.

## நாலடியார்.

1547 இடம்படமெய்ஞ்ஞானங்கற்பினுமென்று
மடங்காதாரென்றுமடங்கார்—தடங்கண்ணா
யுப்பொடுநெய் பாறயிர்காயம்பெய்தடினுங்
கைப்பறாபேய்ச்சுரையின்காய்.

1548 பொன்னேகொடுத்துப்புணர்தற்கரியாரைக்
கொன்னேதலைக்கூடப்பெற்றிருந்து—மன்னோ
பயனில்பொழுதாக்கழிப்பரேநல்ல
நயமிலறிவினவர்.

1549 பன்றிக்கூழ்ப்பத்தரிற்றேமாவடித்தற்றா
னன்றறியாமாந்தர்க்கறத்தாறுரைக்குங்காற்
குன்றின்மேற்கொட்டுந்தறிபோற்றலைதகர்ந்து
சென்றிசையாவாகுஞ்செவிக்கு.

1550 அருளினறமுரைக்குமன்புடையார்வாய்ச்சொற்
பொருளாகக்கொள்வர்புலவர்—பொருளல்லா
வேழையதனையிகழ்ந்துரைக்கும்பாற்கூழை
மூழைசுவையுணராதாங்கு.

1551 அவ்வியமில்லாரறத்தாறுரைக்குங்காற்
செவ்வியரல்லார்செவிகொடுத்துங்கேட்கலார்
கவ்வித்தோறின்னுங்குணுங்கர்நாய்பாற்சோற்றின
செவ்விகொளறேற்றாதாங்கு.

1552 தாமேயுமின்புறார்தக்கார்க்குநன்றாற்றா
ரேமஞ்சார்நன்னெறியுஞ்சேர்கலார்—தாமயங்கி
யாக்கத்துட்டூங்கியவத்தமேவாழ்நாளைப்
போக்குவார்புல்லறிவினோர்

1553 கப்பிகடவதாக்காலைத்தன்வாய்ப்பெயினுங்
குப்பைகிளைப்போவாக்கோழிபோன்—மிக்க
கனம்பொதிந்தநூல்விரித்துக்காட்டினுங்கீழ்தன்
மனம்புரிந்தவாறேமிகும்

1554 பொற்கலத்தூட்டிப்புறந்தரினுநாய்பிற
ரெச்சிற்கிமைபார்த்திருக்கு—மச்சீர
பெருமையுடைத்தாகக்கொளினுங்கீழ்செய்யுங்
கருமங்கள்வேறுபடும்.

1555 சக்கரச்செல்வம்பெறினும்விழுமியோ
ரெக்கலுஞ்சொல்லார்மிகுதிச்சொல்—லெக்கலு
முந்திரிமேற்காணிமிகுவதேற்கீழ்தன்னை
யிந்திரனாவெண்ணிவிடும்.

1556 அள்ளிக்கொள்வன்ன குறுமுகிழவாயினுங்
கள்ளிமேற்கைநீட்டார்சூடும்பூவன்மையாற்
செல்வம்பெரிதுடையராயினுங்கீழ்களை
நள்ளாரறிவுடையார்.

1557 மைதீர்பசும்பொன்மேன்மாண்டமணியழுத்திச்
செய்ததெனினுஞ்செருப்புத்தன்காற்கேயா
மெய்தியசெல்வத்தராயினுங்கீழ்களைச்
செய்தொழிலாற்காணப்படும்.

1558 கடுக்கெனச்சொல்வற்றாங்கண்ணோட்டமின்றா
யிடுக்கண்பிறர்மாட்டுவக்கு—மடுத்தடுத்து
வேகமுடைத்தாம்விறன்மலைநன்னாட
வேகுமாமெள்ளுமாங்கீழ்

1559 ஒருநன்றிசெய்தவர்க்கொன்றியெழுந்த
பிழைநூறுஞ்சான்றோர்பொறுப்பர்—கயவர்க்
கெழுநூறுநன்றிசெய்தொன்றுதீதாயி
னெழுநூறுந்தீதாய்விடும்.

## நான்மணிக்கடிகை.

1560 *மாசுபடினுமணிதன்சீர்குன்றாதாம்
பூசிக்கொளினுமிரும்பின்கண்—மாசொட்டும்
பாசத்துளிட்டுவிளக்கினுங்கீழ்தன்னை
மாசுடைமைகாட்டிவிடும்.

## பழமொழி.

1561 மிக்குப்பெருகிமிகுபுனல்பாய்ந்தாலு
முப்பொழிதல்செல்லாவொலிகடல்போன் —மிக்க
வினைகலந்துடையவாயினுமென்று
மனநலமாகாவாங்கீழ்.

1562 தேர்ந்துகண்ணோடாதுதீவினையுமஞ்சலராய்ச்
சேர்ந்தாரையெல்லாஞ்சிறிதுரைத்துத்—தீர்ந்த

விரகர்கட்கெல்லாம்வெறுப்பனவேசெய்யு
நரகர்கட்கில்லையோநெஞ்சு.

1563 தொன்மையின்மாண்டதுணிவொன்றுமில்லாதார்
நன்மையின்மாண்டபொருள்பெறுத—வின்னொளிநீர்
கண்மேலிலங்குமலைநாடமாக்காய்த்துத்
தன்மேற்குணில்கொள்ளுமாறு.

அறநெறிச்சாரம்.

1564 *கல்லாவொருவனைக்காரணங்காட்டினு
மில்லைமற்றென்றுமறனுணர்தல்—நல்லாய்
நறுநெய்நிறையமுகப்பினுமூழை
பெறுமோசுவையுணருமாறு.

1565 *வைகலுநீருட்கிடப்பினுங்கல்லிற்கு
மெல்லென்றல்சாலவரிதாகு—மஃதேபோல்
வைகலுநல்லறங்கேட்பினுங்கீழ்கட்குக்
கல்லினும்வல்லென்றுநெஞ்சு.

மூதுரை.

1566 *வேங்கைவரிப்புலிக்குத்தீர்த்தவிடதாரி
யாக்கதனுக்காகாரமானாற்போற்—பாங்கறியாப்
புல்லறிவாளர்க்குச்செய்தவுபகாரங்
கல்லின்மேலிட்டகலம்,

நல்வழி.

1567 *பூவாதேகாய்க்குமரமுமுளமக்களு
மேவாதேநின்றுணர்வார்தாமுளரே—தூவா
விரைத்தாலுநன்றாகாவித்தெனவேபேதைக்
குரைத்தாலுந்தோன்றாதுணர்வு.

நீதிவெண்பா.

1568 *ஈக்குவிடந்தலையிலெய்துமிருந்தேளுக்கு
வாய்த்தவிடங்கொடுக்கில்வாழுமே—நோக்கரிய
பைங்கணரவுக்குவிடம்பல்லளவேதுர்ச்சனருக்
கங்கமுழுதும்விடமேயாம்,

1569 *துர்ச்சனரும்பாம்புந் துலையொக்கினும்பாம்பு
துர்ச்சனரையொக்குமோ தோகையீர் — துர்ச்சன
ரெந்தவிதத்தாலுமிணங்காரே பாம்புமணி
மந்திரத்தாலாமே வசம்.

1570 *கொம்புளதற்கைந்து குதிரைக்குப்பத்துமுழம்
வெம்புகரிக்காயிரந்தான் வேண்டுமே — வம்புசெறி
தீங்கினர்தங்கண்ணிற்றெரியாததூரத்து
நீங்குவதே நல்லநெறி

1571 *அவ்வியநெஞ்சத்தறிவிலாத் துர்ச்சனரைச்
செவ்வியராக்குஞ்செயலுண்டோ — திவ்வியநற்
கந்தம்பலவுங்கலந்தாலுமுள்ளியது
கந்தங்கெடுமோ கரை.

1572 *குணநன்குணரார்க்கொடியோரிடத்துக்
குணநன்குடையார்குறுகார் — குணமுடைமை
நண்ணுச்சமணநகரத்திற்றூசொலிக்கும்
வண்ணானுக்குண்டோ வழக்கு.

1573 *கற்பூரம்போலக்கடலுப்பிருந்தாலும்
கற்பூரமாமோ கடலுப்பு — பொற்பூரும்
புண்ணியரைப்போலவிருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியராவாரோ புகல்.

1574 *தூயவறிவினர்முன் சூழ்துன்பமில்லையாங்
காயும்விடங்கருடற்கில்லையா — மாயுங்காற்
பன்முகஞ்சேர்தீமுன் பயில்சீதமில்லையாந்
துன்முகருக்குண்டோ சகம்.

1575 *இயலர்பாற்கல்விசிறந்தாலுமற்றவரைத்
தூயவரென்றெண்ணியே துன்னற்க — சேயிழாய்

தண்ணொளியமாணிக்கஞ்சர்ப்பந்தரித்தாலு
நண்ணுவரோமற்றதனைநாடி.

1576 *கன்மமேபூசித்தகாயத்தோர் தஞ்செவியிற்
றன்மநூல்புக்காலுந்தங்காதே—†சன்மமெனும்
புண்டொபிக்குநாயுண்ணைவினெய்யதனை
யுண்டொபிக்குமோவோது.

1577 *வெய்யோன்கிரணமிகச்சுடுமேவெய்யவனிற்
செய்யோன்கிரணமிகத்தீதாமே—வெய்யகதி
ரெல்லோன்கிரணத்தெரியினிலுமெண்ணமில்லார்
சொல்லேமிகவுஞ்சுடும்.

திருக்குறள்.

1578 ஏவவுஞ்செய்கலான்றான்றேறானவ் வுயிர்
போஒமளவுமோர்நோய்.

1579 காணாதாற் காட்டுவான்றான்காணான் காணாதான்
கண்டானாந்தான்கண்டவாறு.

1580 உலகத்தாருண்டென்பதில்லென்பான்வையத்
தலகையாவைக்கப்படும்.

1581 மக்களேபோல்வர்கயவரவரன்ன
வொப்பாரியாங்கண்டதில்.

1582 அகப்பட்டியாவாரைக்காணினவரின்
மிகப்பட்டுச்செம்மாக்குங்கீழ்.

1583 அச்சமேகீழ்களதாசாரமெச்ச
மவாவுண்டேலுண்டாஞ்சிறிது.

1584 அறைபறையன்னர்கயவர்தாங்கேட்ட
மறைபிறர்க்குய்த்துரைக்கலான்.

1585 ஈர்ங்கைவிதிரார்கயவர்கொடிறுடைக்குங்
கூன்கையரல்லாதவர்க்கு.

**ஆகச்செய்யுள் 54, கயமை முற்றிற்று.**

† சன்மம் = சருமம், அது தோல்.

*

## சச-அதி. காமக்கேடு.

---

### திருமந்திரம்.

1586 *இலைநலவாயினுமெட்டிபழுத்தாற்
குலைநலவாங்கனிகொண்டுணலாகா
§விலையாண்முலைநலங்கொண்டுமுறுவல்செய்வார்மேல்
விலகுறுநெஞ்சினைவெய்துகொள்ளீரே.

1587 *மனைபுகுவார்கண்மனைவியைநாடிற்
சுனைபுகுநீர்போற்சுழித்துடன்வாங்குங்
கனவதுபோலக்கசிந்தெழுமின்பம்
நனவதுபோலவுநாடவொண்ணாதே.

### கந்தபுராணம்.

1588 தீமையுள்ளனயாவையுந்தந்திடுஞ்சிறப்புந்
தோமில்செல்வமுங்கெடுக்குநல்லுணர்வினைத்தொலைக்கு
மேமநன்னெறிதடுத்திருளுய்த்திடுமிதனாற்
காமமன்றியேயொருபகையுண்டுகொல்கருதில்.

1589 மண்ணுலகிலுள்ளவரம்பில்பெரும்பவத்தைப்
பெண்ணுருவமாகப்பிரமன்படைத்தனனு
லண்ணலஃதுணர்தியன்னவரைச்சிந்தைதனி
லெண்ணவரும்பாவமெழுமையினுநீங்குவதோ.

1590 பன்னாளும்பாரிற்பருவரலின்மூழ்குவிக்கும்
பின்னாணிரயப்பெரும்பிலத்தினூடுய்க்கு
மென்னாளிலாண்டகையோர்க்கின்பம்பயந்திடுமோ
மின்னார்கடம்மைவிழைவுற்றவேட்கையதே.

1591 துன்பநுகரும்வினையின்றொடர்ச்சியினோ
ரின்பநுகர்வார்போலேந்திழையார்கட்பட்டார்

---

§ யாப்பருங்கலவிருத்திகாரர், ஆரிடத்திற் சீர்மிக்குவருதற்கு இவ்வடியை மேற்கோள் காட்டினர். "முறுவலிக்கின்ற, வினையுடை நெஞ்சினை" என்பது அவ்விருத்தியிற்கண்ட பாடபேதம்.

தன்பன்மிகநிங்கஞானிதனையில்லா
வெண்புகறித்திட்டாலிருஞ்சுவையாய்ப்பெற்றிடுமோ.

1592 அஞ்சனவைவேற்கணிணையர்தம்பேராசை
நெஞ்சுபுகுமென்றுநவர்நீங்குநிலைமைத்தோ
வெஞ்சல்புரியாதுயிரையெக்காலுநீந்திடுமோ
னஞ்சுமினிதம்மவோநானுநலியாதே.

1593 ஓதலுமொன்றாயுளமொன்றாச்செய்கையொன்றாப்
பேதைநிலைமையிழுக்குப்பெருபவஞ்செய்
மாதர்வலைப்பட்டுமயக்குற்றாரல்லரோ
சாதல்பிறப்பிற்றடுமாறுகின்றாரே.

1594 உற்றவலைவாயினடையார்புலிகைமுட்டியர்காற்
கற்றைறவிசுட்டமீக்க [illegible] கனல் நிற்றார்
பற்றுதல்செல்லாதால [illegible] ப்பற்றிடுமோ
லற்றெனலாமீங்கோரிவைமுயங்காதாமே.

1595 சந்திரற்குநேருவமைசாலுந்திருமுகத்துப்
பைங்கொடிக்கைநல்லார்வநுமையுடைகுறுக
குறுதமொத்தநாட்டத்துக்கோதமனார்பன்னியாலு
மிந்திரற்குநீங்காவிடர்ப்பழியொன்றெய்தியதே.

1596 கூன்முகத்திங்கணெற்றிக்கோதையர்குழுவுக்கெல்லாந்
தான்முதலிறைவியாகத்தனைகையாற்சமைக்கப்பட்ட
மான்முகநோக்கின்முன்னோர்மலராயனமையலெய்தி
நான்முகனுனென்பநாமுணர்ந்ததன்றே.

1597 கண்டதோர்நறவமேகாமமேயென
வெண்டருந்தீப்பொருளிருமைத்தென்பரா
லுண்டுழியழிக்குமொன்றுணர்வையுள்ளமேற்
கொண்டுழியுயிரையுங்கொல்லுமென்றரோ.

1598 உள்ளினுஞ்சுட்டிடுமுணருங்கேள்வியிற்
கொள்ளினுஞ்சுட்டிடுங்குறுகிமற்றதைத்

தள்ளினுஞ்சுட்டிடுந்தன்மையிதினுங்
கள்ளினுங்கொடியதுகாமத்தீயதே.

1599 ஈட்டுறுபிறவியும்வினைகள்யாவையுங்
காட்டியதினையதோர்காமமாதலின்
வாட்டமில்புந்தியான்மற்றந்நோயினை
வீட்டினால்லரோவீடுசேர்ந்துளார்.

1600 நெஞ்சினுநினைப்பரோநினைந்துளார்தமை
யெஞ்சியதுயரிடையீண்டையுய்த்துமேல
விஞ்சியபவக்கடல்வீழ்த்துமாதலா
னஞ்சினுந்தீயதுநலமில்காமமே.

1601 எண்ணவுணர்தொகையல்லதையெந்தைமாய
முண்ணுறிவானோர்கருப்பெண்மையுற்றுநின்றார்
மண்ணாசைதனையிழபொருளாசையினைமாயவாழ்க்கைப்
பெண்ணாசைநீங்கலெளிதோபெரியோர்தமக்கும்.

## திருவிளையாடற்புராணம்.

1602 அணங்குநோயெவர்க்குஞ்செய்புமனங்கனுலைப்புண்டாயி
யுணங்கினுருள்ளஞ்செல்லுமிடனறிந்தோடிச்செல்லா
குணங்குலனொழுக்கங்குன்றல்கொலைபழிபாவம்பாரா
விணங்குமின்னுயிர்க்குமாகேகோபிறுதிவந்துறுவதெண்ணு

1603 கள்ளுண்டல்காமமென்பகருத்தறைபோக்குஞ்செய்வ
தெள்ளுண்டகாமம்போலவெண்ணினிற்காணிற்கேட்கிற்
றள்ளுண்டவிடத்தினஞ்சந்தலைக்கொண்டாலென்னவங்கே
யுள்ளுண்டவுணர்வுபோக்காதுண்டபோதழிக்குங்கள்ளுன்.

1604 காமமேகொலைகட்கெல்லாங்காரணங்கண்ணோடாத
காமமேகளவுக்கெல்லாங்காரணங்கூற்றமஞ்சுங்
காமமேகள்ளுண்டற்குங்காரணமாதலாலே
காமமேநரகபூமிகாணியாக்கொடுப்பதென்றான்.

### தணிகைப்புராணம்.

1605 வழும்புதடிகுடரென்புவார்நரம்புமேதைதசைத்தோல்
தழும்புழுக்கண்மூளைமயிர்சருமமாதிகள்குழூஉமுங்
கொழும்பொதியைப்பசுந்தினெக்காற்கோற்றொடியாளெவள்காட் [டாய்.
விழும்பிணத்தெவ்வுடம்பிலில்லைவிழையாமைவிடல்விளைவாய்.

### திருக்குற்றாலப்புராணம்.

1606 விண்டலவியவர்விண்ணவராயினும்
பெண்கள்காமம்பிடித்தவருய்வரோ
புண்களாகிப்புரந்தான்மெய்யெலாங்
கண்கனானதுகாமத்தினாலன்றோ.

### திருக்கூவப்புராணம்.

1607 கொடுங்கனன்மதுவிடங்குறுகினுண்டிடிற்
சுடுங்கருத்தழித்திடுந்தொலைவுசெய்யுமால்
கடுந்துயர்க்காமமோகநினைவுசெய்
திடும்பினுந்தொடர்ந்துவெந்நிரயத்திட்டிடும்.

### திருக்கழுக்குன்றப்புராணம்.

1608 *உண்மயக்கனைவர்க்குமுய்மைபுண்டதிற்
றிண்மயக்கொன்றுண்டுதெரியக்கேட்டிரால்
மண்மயக்கிராணியமயக்குமீங்கினும்
பெண்மயக்கரிதிறிற்பிழைத்துநீங்கலே.

### உறையூர்ப்புராணம்.

1609 *இருவகைவியக்சமீக்குநாலெவ்வளவைக்குநின்ப
மருவுமவ்வளவைதகேயாமதனைப்புணருமின்ப
மருவருட்புழுமிதமுசேபாயுள்ளாழப்பல்லிவீழ்ந்த
தொருவருட்‡வன்றிபோலுழுழுலயநுணர்விலாதார்.

1610 *குடம்புரைகொங்கைபெண்ணுயக்கால்புரைகயனமென்னும்
படம்புரைபலகுலென்றும்பாலபுரையின்சொலென்னும்
வடம்புரையுதரமென்றுமலர்புரைசெவ்வாயென்னுந்
திடம்புரைபடிமிறைப்பாண்மபங்குவர்தெளிவிலாரே.

---

‡வன்றி=பன்றி.

1611 *சுடருநெய்த்தோருமென்புங்கொழுவுமீருளும்வழும்புந்
தொடரும்வன்னரம்பும்போர்த்ததோலும்வெஞ்சுவேதநீரும்
படருங்கோழைபுழுத்துப்பாயுமூத்திரமும்பல்வி
யடருந்தீயழுக்குமல்லாலரிவையரிடத்தென்னுண்டே.

பாகவதம்.

1612 *அப்பொற்றூதுகோதஞ்சிறைவண்டுமிர்
வம்புலாங்குழன்மாதரெனப்படும்
பைம்புன்மூசியபாழ்ம்பெருங்கூவலி
னம்பிவீழுமவனிநகைப்பவே.

காசிரகசியம்.

1613 *காமமேபிறவித்தாருங்கண்ணிலாக்
காமமேசிவனடிக்கலப்புநீக்குமே
காமமேயவத்தையிற்கலக்கச்செய்திடுங்
காமமேநரகெலாங்காணியாக்குமே.

பிரபுலிங்கலீலை.

1614 பாவமும்பழிபுகல்லும்பல்வகைப்புகழ்தங்கள்
யாவையுமழிக்குமெய்துமிம்பருமதனாலெய்து
நோவுநன்மரபுஞ்செய்புநோய்புகல்லொழுக்கமென்னை
சாவுமென்னுறுமனிற்றந்தயங்குபுன்காமமென்பார்.

பிரபோதசந்திரோதயம்.

1615 *இருந்தாதலப்பாப்பிவிசேக்கண்மேவிச்சகனெனப்பிறிவினைப்பில்
வீந்து, வருந்துமாறுடப்பிறப்பிப்பமக்கைகல்லாமொப்பங்கி
மகிழ்ந்துகோடல், பருகினவாய்ப்பமாயம்பிடித்தமனதிகங்
கொள்சிறுபறவைசெக்கே, வருந்துமாறுப்பதனெலாங்கூடிற்
றின்பமெனலாயிற்றன்றே.

ஞானவாசிட்டம்.

1616 *மைந்தொடியாரமைசைநோய்கெப்பிரமவிதனையும்பழுபந்தன்னை
முகந்துமயக்கதாபோயுபிவிரவிக்குன்னைவிழுயின்முனைகூர்வாளும்

வெந்தவிருப்புப்பொறியுமெனக்கொடியமனவேட்கைமேருவொத்தோர்
சுந்தரஞானியர்தீரர்சூரரையெல்லாமிமைப்பிற்றுரும்புசெய்யும்.

1617 *முதுதுயர்பூட்டாப்பூட்டிமுடிவில்காமாதியென்னும்
புதுமணிவைத்தசெப்பாம்பூவையரின்பம்வேண்டே
ளிதுதசையிதுநெய்த்தோரென்பிதுநரம்பிதுவென்றெண்ணில்
ளிதுமுகமாதர்வேட்கைவிரோதமாஞ்சிறிதுநாளில்.

வைராக்கியசதகம்.

1618 *என்னைகண்டீர்மாதரார்வடிவமீதிச்சைவைத்துழல்கின்றாய்
பொன்னையுந்துகிலையும்பிரித்திடில்வெறும்புழுமலக்கூடல்லாற்
பின்னையுண்டுகொல்கண்டீரேயங்குதல்பிராந்திசங்கரன்பாதந்
தன்னைநாடிநெஞ்சமேபரசுகோததியுறப்பெறலாமே.

சிவ—துருந்திரட்டு.

1619 *கூடிற்கைப்பொருள்யாவையுங்கொள்ளுவர்
வீடிலாருயிர்தன்னையும்வீட்டுவா
ராடவர்க்கிவ்வரிவையரொப்பதோர்
கேடுமுண்டோமுழுதுங்கெடுக்கவே.

பட்டினத்தடிகள்பாடல்.

1620 திருமால்பயந்ததிசைமுகனமைத்து
வருமேழ்பிறவியுமானிடத்துதித்து
மலைமகள்கோமான்மலரடியிறைஞ்சிக்
குலவியசிவபதங்குறுகாதவமே
மாதரைமகிழ்ந்துகாதல்கொண்டாடு
மானிடர்க்கெல்லாம்யானெடுத்துரைப்பேன்
விளிவெளிமாக்கடெளிவுறக்கேண்மின்
முள்ளுங்கல்லுமுயன்றுநடக்கு
முள்ளங்காலைப்பஞ்செனவுரைத்தும்
வெள்ளெலும்பாலேமெலியகணைக்காற்

றுள்ளும்வாரலெனச்சொல்லித்துதித்துந்
தசையுமெலும்புந்தக்கபுன்குறங்கை
யிசையுங்கதலித்தண்டெனவியம்பியு
நெடுமுடற்றூங்கிநின்றிடுமிடையைத்
துடிபிடியென்றுசொல்லித்துதித்து
மலமுஞ்சலமும்பெய்யுந்திரையு
மலையுட்வயிற்றையாலிலையென்றுஞ்
சிலந்திபோலக்கிளைத்துமுன்னெழுந்து
திரண்டேவிம்மிச்சீப்பாய்ந்தேறி
யுகிராற்கீறவுலர்ந்துள்ளுருகி
நகுவார்க்கிடமாய்நான்றுவற்று
முலையைப்பார்த்துமுளரிமொட்டென்றுங்
குலையுங்காமக்குநடர்க்குரைப்பே
னீட்டவுமுடக்கவுநெடும்பொருள்வாங்கவு
மூட்டவும்பிசையவுமுதவியிங்கிபற்று
மங்கையைப்பார்த்துக்காந்தளென்றுரைத்தும்
வேர்வையுமழுக்குமேவியகழுத்தைப்
பாரினிலினியகமுகெனப்பகர்ந்தும்
வெப்புமூத்தையுமேவியவாயைத்
துப்புமுருக்கின்றாய்மலரென்று
மன்னமுங்கறியுமசைவிட்டிறக்கு
முன்னியபல்லைமுத்தெனமொழிந்து
நீருஞ்சளியுநின்றுநின்றொழுகுங்
கூரியமூக்கைக்குமிழெனக்கூறியுந்
தண்ணீர்பீளைதவிராதொழுகுங்
கண்ணைப்பார்த்துக்கழுநீரென்று
முள்ளுங்குறும்பியொழுகுங்காதை
வள்ளைத்தண்டின்வளமெனவாழ்த்தியுங்
கையுமெண்ணெயுங்கலவாதொழியில்
வெய்யவதரும்பேனும்விளையத்
தக்கதலையோட்டின்முளைத்தெழுந்த

சிக்கின்மயிரைத் திரண்முகிலென்றுஞ்
சொற்பலபேசித் துதித்துநீங்க
ணச்சிச்செல்லுநரகவாயி
ரேழுமிறைச்சியுந் துதைந்துசீப்பாயுங்
காமப்பாழிகருவிளைகழனி
தூமைக்கடவழிதொலைபெறுவாயி
லெண்சாணுடம்புமிழியும்பெறுவழி
மண்பாற்காமங்கழிக்குமறைவிட
நச்சிக்காமுகராய்நானென்று
மிச்சித்திருக்குமிடைகழிவாயி
றிங்கட்சடையோன்றிருவருளில்லார்
தங்கித்திரியுஞ்சவலைப்பெருவழி
புண்ணிதுவென்றுபுடைவையைமூடி
யுண்ணீர்பாயுமோசைச்செழும்புண்
மால்கொண்டறியாமாந்தர்புகும்வழி
நோய்கொண்டொழியாநுண்ணியர்போம்வழி
தருக்கியகாமுகர்சாரும்படுகுழி
செருக்கியகாமுகர்சேருஞ்சிறுகுழி
பெண்ணுமாணும் பிறக்கும்பெருவழி
மலஞ்சொரிந்திழியும்வாயிற்கருகே
சலஞ்சொரிந்திழியுந்தண்ணீர்வாயி
லித்தைநீங்களினிதெனவேண்டா
பச்சிலையிடினும்பத்தர்க்கிரங்கி
மெச்சிச்சிவபதவீடருள்பவனை
முத்திநாதனைமூவாமுதல்வனை
யண்டாண்டமுமனைத்துளபுவனமுங்
கண்டவண்ணலைக்கச்சியிற்கடவுளை
யேகநாதனையிணையடியிறைஞ்சுமின்
போகமாதரைப்போற்றுதலொழிந்தே.

1621 காதென்றுமூக்கென்றுகண்ணென்றுகாட்டியென்கண்ணெதிரே
மாதென்றுசொல்லிவருமாயைதன்னைமறலிவிட்ட
தூதென்றெண்ணாமற்சுகமென்றுநாடிமித்துற்புத்தியை
யேதென்றெடுத்துரைப்பேனிறைவாகச்சியேகம்பனே.

1622 சீறும்வினையதுபெண்ணுருவாகித்திரண்டுருண்டு
கூறுமுலையுமிறைச்சியுமாகிக்கொடுமையினாற்
பீறுமலமுமுதிரமுஞ்சாயும்பெருங்குழிவிட்
டேறுங்கரைகண்டிலேனிறைவாகச்சியேகம்பனே.

1623 பெண்ணாகிவந்தொருமாயப்பிசாசம்பிடித்திட்டென்னைக்
கண்ணால்வெருட்டிமுலையான்மயக்கிக்கடிதடத்துப்
புண்ணாங்குழியிடைத்தள்ளியென்போதப்பொருள்பறிக்க
வெண்ணாதுனைமறந்தேனிறைவாகச்சியேகம்பனே.

1624 முட்டற்றமஞ்சளையெண்ணெயிற்கூட்டிமுகமினுக்கி
மெட்டிட்டுப்பொட்டிட்டுப்பித்தளையோலைவிளக்கியிட்டுப்
பட்டப்பகலில்வெளிமயக்கேசெயும்பாவையர்மே
லிட்டத்தைநீதவிர்ப்பாயிறைவாகச்சியேகம்பனே.

1625 பிறந்துமண்மீதிற்பிணியேகுடிகொண்டுபேரின்பத்தை
மறந்துசிற்றின்பத்தின்மேன்மயலாகிப்புன்மாதருக்குட்
பறந்துழன்றேதடுமாறிப்பொன்றேடியப்பாவையர்க்கீந்
திறந்திடவோபணித்தாயிறைவாகச்சியேகம்பனே.

1626 நாறுங்குருதிச்சலதாரைதோற்புரைநாடொறுஞ்சீ
யூறுமலக்குழிகாமத்துவாரமொழிந்திடும்புண்
டேறுந்தசைப்பிளப்பந்தரங்கத்துளசிற்றின்பம்விட்
டேறும்பதந்தருவாய்திருக்காளத்தியீச்சுரனே,

1627 சீயுங்குருதிச்செழுநீர்வழும்புஞ்செறிந்தெழுந்து
பாயும்புடைவையொன்றில்லாதபோதுபகலிரவா
யீயுமெறும்பும்புகுகின்றயோனிக்கிரவுபகன்
மாயுமனிதரைமாயாமல்வைக்கமருந்தில்லையே,

1628 வாய்நாறுமூழண்மயிர்ச்சிக்குநாறிடுமைபிடுங்கண்
பீநாறுமங்கம்பிணவெடிநாறும்பெருத்தகொங்கை
சீநாறும்யோனியழுகுமிந்தியச்சேறுசிந்திப்
பாய்நாறுமங்கையர்க்கோவிங்ஙனேமனம்பற்றியதே.

## தாயுமானவர்பாடல்.

1629 மெய்வீசுநாற்றமெல்லாமிக்கமஞ்சளான்மறைத்துப்
பொய்வீசும்வாயார்புலையொழிவதெந்நாளோ.

1630 திண்ணியநெஞ்சப்பறவைசிக்கக்குழற்காட்டிற்
கண்ணிவைப்போர்மாயங்கடக்குநாளெந்நாளோ.

1631 கண்டுமொழிபேசிமனங்கண்டுகொண்டுகைவிலையாக்
கொண்டுவிடுமானார்பொய்க்கூத்தொழிவதெந்நாளோ.

1632 காமனைவாவென்றிருண்டகண்வலையைவீசுமின்னார்
நாமமறந்தருளைநண்ணுநாளெந்நாளோ.

1633 வீங்கித்தளர்ந்துவிழுமுலையார்மேல்விழுந்து
தூங்குமதன்சோம்பைத்துடைக்குநாளெந்நாளோ.

1634 கண்களில்வெண்பூளைகரப்பக்கருமையிட்ட
பெண்கண்மயறுப்பிப்பிழைக்குநாளெந்நாளோ.

1635 கச்சிருக்குங்கொங்கைகரும்பிருக்குமின்மாற்றம்
வைச்சிருக்குமாதர்மயக்கொழிவதெந்நாளோ.

1636 பச்சென்றகொங்கைப்பசப்பியர்பாழானமய
னச்சென்றறிந்தருளைநண்ணுநாளெந்நாளோ.

1637 உந்திச்சுழியாலுளத்தைச்சுழித்தகன
தந்தித்தனத்தார்தமைமறப்பதெந்நாளோ.

1638 ஆழாழியென்னவளவுபடாவஞ்சநெஞ்சப்
பாழானமாதர்மயற்பற்றொழிவதெந்நாளோ.

1639 தூயபனித்திங்கள்சுடுவதெனப்பித்தேற்று
மாயமடவார்மயக்கொழிவதெந்நாளோ.

### குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி.

1640 வேலிற்றிகழ்ந்துகயலிற்பிறழ்ந்துவிடமொப்பவெப்பமருவிப்
பாலிற்றெளிந்துபிணையைத்துரத்தியரிசூழ்பரந்துபடைவேள்
கோலிற்பயின்றுகுமிழின்மறிந்துகுழையூடுசெல்லும்விழியார்
மாலிற்படாதுனடியேவழுத்தவருளாய்குளந்தையானே.

### நீதிநெறிவிளக்கம்.

1641 கொலையஞ்சார்பொய்நாணார்மானமுமோம்பார்
களவொன்றோவேனையவுஞ்செய்வார்—பழியொடு
பாவமிஃதென்னார்பிறிதுமற்றென்செய்யார்
காமங்கதுவப்பட்டார்.

### இராமாயணம்.

1642 தூமகேதுபுவிக்கெனத்தோன்றிய
வாமமேகலைமங்கையரால்வருங்
காமமில்லையெனிற்கடுங்கேடெனு
நாமமில்லைநரகமுமில்லையே.

1643 திறந்திறம்பியகாமச்செருக்கினான்
மறந்துதத்தமதியின்மயங்கினா
ரிறந்திறந்திழிந்தேறுவதேயலா
லறந்திறம்பினராருளராயினார்.

1644 காமத்தாழ்கடன்ஞாலத்தவிந்தவ
ரீமத்தான்மறைந்தாரிளமாதர்பாற்
காமத்தாலிறந்தார்களிவண்டுறை
தாமத்தாரினரெண்ணினுஞ்சால்வரோ.

1645 பொருளுங்காமமுமென்றிவைபோக்கிவே
றிருளுண்டாமெனவெண்ணலரீதலு
மருளுங்காதலிற்றீர்தலுமல்லதோர்
தெருளுண்டாமெனவெண்ணலர்சீரியோர்.

1646 மாசிலாதகுடிப்பிறப்புமானங்கீர்த்தியிவைமாய
வாசைநோயானதுபெருகவனங்கசரத்தாலேவுண்டு
கூசலின்றிக்குலத்தவரைக்குலையச்செய்தார்குலத்தோடு
நாசமெய்திப்பழியோடுநரகமுறுவரெனவுரைத்தான்.

## குசேலோபாக்கியானம்.

1647 குடருநெய்த்தோருமென்புங்கொழுவும்வார்வழும்புந்தோலுந்
தொடருநாடிகளுநய்வைத்துச்சுமத்தியதடியுங்கொண்டு
படர்தரச்செய்தபவ்வீப்பாண்டமாமடந்தைநல்லா
ரிடனுடைவடிவமந்தோவிகற்குழூண்மயங்காநிற்பர்.

1648 கோதுறவமைத்தபவ்வீக்குழம்புபஃறுவாரந்தோறு
மோதுறவழியுங்கும்பமூத்திரபாத்திரங்கை
யாதுபல்கிருமிக்குப்பையடர்ந்ததீநாற்றக்கூடம்
மாதர்மெய்வடிவங்கண்டுமோழ்குவார்மாழ்கிநிற்க.

## சூளாமணி.

1649 தேமிடைநாவல்வேலிச்செழுமணற்றுவாலுங்குன்றும்
பூமிடைதடமுங்காவும்புக்கவர்க்கரணமாகா
தாமுடைமனமுங்கண்ணுநிறைவுந்தம்பாலவாகா
காமுடைமனத்தினோர்கட்கியாருளர்களைகணாவார்.

## யசோதரகாவியம்.

1650 எண்ணமதலாமைபண்ணும்பிறப்பிறப்பிடியநாறு
மண்ணியபுசழைமாய்க்கும்வரும்பழிவளர்க்குமானத்
திண்மையையுடைக்குமாண்மைதிருவொடுசிதைக்குஞ்சிந்தை,
கண்ணொடுகெலக்குமற்றிக்கடைப்படுகாமமென்றான்.

## சீவகசிந்தாமணி.

1651 காயமேகன்றிநின்றகழுதைகண்டருளினாலே
வாமனார்சென்றுகூடிவருந்தினீரென்றவையத்
தீமஞ்சேர்மாலைபோலவிழித்திடப்பட்டதன்றே
நாயவேற்றடக்கைவேந்தேநாமிதுதெரியினென்றான்.

1652 எரிதலைக்கொண்டகாமத்தின்பனீர்ப்புள்ளியற்றாற்
பிரிவின்கட்பிறந்ததுன்பம்பெருங்கடலனையதொன்றா
லூருகிநைந்துடம்புநீங்கினிம்மையோடும்மையின்றி
யிருதலைப்பயனுமெய்தாரென்றியாக்கேட்டுமன்றே.

1653 பெண்ணெனப்படுவகேண்மோபீடிலபிறப்புநோக்கா
வுண்ணிறையுடையவல்லவோராயிரமனத்தவாகு
மெண்ணிப்பத்தங்கையிட்டாவிந்திரன்மகளுமாங்கே
வெண்ணெய்க்குன்றெரியுற்றாற்போன்மெலிந்துபின்னிற்குமன்றே

## மணிமேகலை.

1654 முடிபொருளுணர்ந்தோர்முதுநீருலகிற்
கடியப்பட்டனவைந்துளவவற்றிற்
கள்ளும்பொய்யுங்களவுங்கொலையுந்
தள்ளாதாகுங்காமந்தம்பா
லாங்கதுகடிந்தோரல்லவைகடிந்தோரென
நீங்கினரன்றேநிறைதவமாக்க
ணீங்காரன்றேநீணிலவேந்தே
தாங்காநரகந்தன்னிடையுழப்போர்.

1655 சிறையுமுண்டோசெழும்புனன்மிக்குழீஇ
நிறையுமுண்டோகாமங்காழ்கொளின்.

## வளையாபதி.

1656 எண்ணின்றியேதுணியுமெவ்வழியானுமோடு
முண்ணின்றுருக்குமுராவோருரைகோடலின்று
நண்ணின்றியேயுநயவாரைநயந்துநிற்குங்
கண்ணின்றுகாமநணிகாமுறுவாரைவீழ்க்கும்.

1657 *சான்றோருநவப்பத்தனிநின்றுபழிப்பகாணு
ரான்றுங்கமைந்தகுரவர்மொழிகோடலீயார்
வான்றுங்கிநின்றபுகழ்மாசுபடுப்பர்காமன்
றுன்றுங்கிவிட்டகணைமெய்ப்படுமாயினக்கால்.

1658 *பாவென்றுரைத்துமடலேறுபமன்றதோறும்
பூவென்றெருக்கிணர்சூடுபுன்மைகொண்டே
பேயென்றெழுந்துபிறரார்ப்பவுநிற்பர்காம
நோய்நன்கெழுந்துநனிகாழ்க்கொள்வதாயினக்கால்.

## குண்டலகேசி.

1659 *வகையெழிற்றோள்களென்றுமணிநிறக்குஞ்சியென்றும்
புகழெழவிகற்பிக்கின்றபொருளில்காமத்தைமற்றோர்
தொகையெழுங்காதறன்னாற்றுய்த்தியாந்துடைத்துமென்பா
ரகையழலழுவந்தன்னைநெய்யினாலவிக்கலாமோ.

1660 *துனைவெனநினைப்பிற்பொத்தியகந்தலைக்கொண்டகாமக்
கனலினையுவப்புநீராற்கடையறவவித்துமென்னார்
நினைவிலாப்புணர்ச்சிதன்னானீக்குதுமென்றுநிற்பார்
புனலினைப்புனலினாலேயாவர்போகாமைவைப்பார்.

## நாலடியார்.

1661 குடருங்கொழுவுங்குருதியுமென்புந்
தொடருநரம்பொடுதோலு—மிடையிடையே
வைத்ததடியும்வழும்புமாமற்றிவற்று
ளெத்திறத்தாளீர்ங்கோதையாள்.

1662 அம்புமழலுமவிர்கதிர்ஞாயிறும்
வெம்பிச்சுடினும்புறஞ்சுடும்—வெம்பிக்
கவற்றிமனத்தைச்சுடுதலாற்காம
மவற்றினுமஞ்சப்படும்.

1663 ஊருளெழுந்தவுருகெழுசெந்தீக்கு
நீருட்குளித்துமுயலாகு—நீருட்
குளிப்பினுங்காமஞ்சுடுமேகுன்றேறி
யொளிப்பினுங்காமஞ்சுடும்.

### அறநெறிச்சாரம்.

1664 *பழிபொடுபாவத்தைப்பாராய்நீகன்றிக்
கழிபெருங்காமநோய்வாங்கி—வழிபடா
வோடுமனனேவிடுத்தென்னைவிரைந்துநீ
நாடிக்கொண்மற்றோரிடம்.

### நல்வழி.

1665 *அம்பிதுணைபாகவாறிழிந்தவாறெக்குங்
கொம்மைமுலைபகர்வார்க்கொண்டாட்ட—மிம்மை
மறுமைக்குநன்றன்றுமாநிதியம்போக்கி
வெறுமைக்குவித்தாய்விடும்.

1666 *நண்டுசிப்பிவேய்கதலிநாசமுறுங்காலத்திற்
கொண்டகருவளிக்குங்கொள்கைபோ—லொண்டொடீஇ
போதந்தனங்கல்விபொன்றவருங்காலமயன்
மாதர்மேல்வைப்பார்மனம்.

### நீதிவெண்பா.

1667 *ஊரூரெனும்வனத்தேயொள்வாட்கண்மாதரெனுங்
கூளுர்விடமுட்குழாமுண்டே—சீரூர்
விரத்திவயிராக்கியவிவாகத்தொடுதோ
ளூரத்தணியத்தையாவென்றோது.

### திருக்குறள்.

1668 பேணாதுபெண்விழைவானாக்கம்பெரியதோர்
நாணாகநாணுத்தரும்.

1669 பெண்ணேவல்செய்தொழுகுமாண்மையினாணுடைப்
பெண்ணேபெருமையுடைத்து.

1670 நட்டார்குறைமுடியார்நன்றாற்றார்நன்னுதலாட்
பெட்டாங்கொழுகுபவர்.

1671 எண்சேர்ந்தநெஞ்சத்திடனுடையார்க்கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம்பேதைமையில்.

**ஆகச் செய்யுள் 86, காமக்கேடு முற்றிற்று.**

## ௯௨-அதி. வரைவின்மகளிர்.

---

### திருவிளையாடற்புராணம்.

1672 இழிபவருயர்ந்தோர்மூத்தோரிளையவர்கழியநோயாற்
கழிபவர்யாவரேனுங்கண்வலைப்பட்டுநெஞ்ச, மழிபவர்
பொருள்கொண்டெள்ளுக்கெண்ணெய்போலளந்துகாட்டிப்
பழிபடுபோகம்விற்பாராவணப்பண்டுசொல்வாம்.

### காஞ்சிப்புராணம்.

1673 அலகினல்லறஞ்சூழ்காஞ்சியமர்பெருஞ்செல்வராயுங்
குலமுறைச்சார்பால்வெந்நோய்க்கோட்பட்டாரிழிஞரேனுஞ்
சிலகொடுப்பனவுங்கொண்டுசேர்ந்துபொய்வஞ்சமெல்லா
நிலைபெறவடைத்துவைத்தநெஞ்சினராகிவாழ்வார்.

### விநாயகபுராணம்.

1674 உறுப்பினாற்பெருவனப்பாலொள்ளணியாலிளமையினான்
மறுப்படாக்குலமகளிர்வழியொழுகித்தருஞ்சுகமும்
வெறுப்பவேகளையர்க்குமிகுபோகம்விளைக்கின்ற
சிறப்பினாற்பொருண்முழுதுந்திறைகொள்வர்விலைமாதர்.

1675 எழிலாற்பாடலாடலினாலிச்சைபெருக்கியுளமொவ்வா
மொழியிற்செயலால்வயமாக்கிமுற்றும்பொருளைப்பறித்துவிடும்
பழிசேணுதபாத்தையரைப்பற்றாய்ந்தபண்புடையா
ரொழியாரவரைப்பேதைமையிலொழியாரேமகண்டனே,

### பேரூர்ப்புராணம்.

1676 இளமையேகவினைகீர்த்தியெழிற்கலையிங்கிதத்தின்
வளமையயன்பேசல்லவருணமேயேகபோகம்
விளைவுசெய்திறனேமற்றுமிக்குளரேனும்பொன்னிற்
றளர்விலாயினஞ்சேயிருமனத்தையலார்க்கு.

## திருக்குற்றாலப்புராணம்.

1677 கைப்பொருளெலாங்கொடுத்துக்கல்விகேள்விகண்முதலா
மெய்ப்பொருளைக்கைவிடுத்துவேசைமுலைப்போகமெனும்
பொய்ப்பொருளைக்கொண்டான்பொதுமாதர்மயல்பூண்டா
னெப்பொருளுந்தெளிந்தாருந்தெளிவாரோவிருநிலத்தில்.

## சீகாளத்திப்புராணம்.

1678 கரியநீலவொண்கட்பொதுமாதரைக்கண்ணுற்
றறியமாதவவேடம்விட்டணைந்தவரநேக
ருரியமாநிதியனைத்துமீந்திரப்பதற்குன்னிப்
பரியுமாதவவேடமுற்றகன்றவர்பலரே.

1679 தெளித்தவொண்கலைப்பொருளினைத்தெளிதாச்சிந்தை
களித்துவந்தவர்மதியளவறைந்துமேற்காட்டா
தொளித்திடுங்குருபரனெனவிளங்குமொள்ளிழையா
ரளித்திடும்பொருளளவறிந்தன்புசெய்குவரால்.

1680 குனித்தவிற்றிறலரசிளங்குமாரராங்குடத்தை
யணிச்சமெல்லடிக்குவியிளமுலையவளழகாந்
தனிக்கயிற்றினிற்பூட்டிவிட்டனுதினந்தாழ்ந்த
மனைக்கிணற்றினிற்பொருட்சலம்வறந்திடமுகப்பாள்.

1681 இல்லையிழையாயினுமிசைத்தொர்பிழைதன்னைச்
சொல்லியணையாதெதிர்துனித்தழுதுதைத்து
மெல்லுணவொழிந்துசிலர்வேண்டுறவிருந்து
நல்லிளைஞர்கொள்ளமயனங்கையர்களிப்பார்.

1682 ஆடவர்முழுதுடைமையவிழ்த்தனருடுத்துங்
கூடுமுலைதூசொடுகுலுங்குறநடந்து
நாடகநடித்துமிசைநல்லனபயின்றும்
வீடலரிதாயமயல்வேலையுளமிழ்ப்பார்.

1683 உள்ளுறவிலாவெளியுறவுசெய்துதான்
றெள்ளுறுமிளைஞர்தந்திருவெலாங்கவர்ந்
தெள்ளுறுமாகினுமிடுதலால்வெறுங்
கள்ளிற்கொடியவர்கணிகைமாதரே.

## பட்டினத்தடிகள்பாடல்.

1684 நாவாரவேண்டும்விதஞ்சொல்லுவாருனைநான்பிரிந்தாற்
சாவேனென்றேயிருந்தொக்கவுண்பார்கள்கைதான்வறண்டாற்
போய்வாருமென்றுநடுத்தலைக்கேகுட்டும்பூவையருக்
கீவார்தலைவிதியோவிறைவாகச்சியேகம்பனே.

1685 எத்தனைபேர்நட்டகுழியெத்தனைபேர்தொட்டமுலை
யெத்தனைபேர்பற்றியிழுத்தவிதழ்—நித்தநித்தம்
பொய்யடாபேசும்புவியின்மடமாதரைவிட்
டுய்யடாவுய்யடாவுய்.

## வளையாபதி.

1686 வீபொருளானையகன்றபின்னுமோர்
மாபொருளான்பக்கமாணநயத்தலின்
மேய்புலம்புல்லறமற்றோர்புலம்புகு
மாவும்புரைபமலரனவுண்கணார்.

1687 நாயும்போல்வர்பல்லெச்சிலுநச்சலாற்
தீயும்போல்வர்செய்ந்நன்றிசிதைத்தலா
னோயும்போல்வர்நுகர்தற்கருமையால்
வேயும்போல்வரிவ்வேனெடுங்கண்ணினார்.

1688 நுண்பொருளானைநுகர்ந்திட்டுவான்பொரு
ணன்குடையானைநயந்தனர்கோடலின்
வம்பிழிமென்முலைவாணெடுங்கண்ணவர்
கொம்பிடைவாழுங்குரங்கும்புரைப.

## சீவகசிந்தாமணி.

1689 அன்புநூலாகவின்சொலலர்தொடுத்தமைத்தகாத
லின்பஞ்செய்காமச்சாந்திற்கைபுனைந்தியற்றிமாலை
நன்பகற்சூட்டிவிள்ளாதொழுகினுநங்கைமார்க்குப்
பின்செலும்பிறர்கணுள்ளம்பிணையனார்க்கடியதன்றே.

### சாந்திபுராணம்.

1690 ஆசையல்குற்பெரியாரையருளுமிடையுஞ்சிறியாரைக்
கூசுமொழியும்புநவழுங்குடிலமாகியிருப்பாரை
வாசக்குழலுமலர்க்கண்ணுமணமுங்கரியமடவாரைப்
பூசல்பெருக்கவல்லாரைப்பொருந்தல்வாழிமடநெஞ்சே.

### நாலடியார்.

1691 புதுப்புனலும்பூங்குழைபார்கட்புமிரண்டும்
விதுப்பறநாடின்வேறல்ல—புதுப்புனலு
மாரியறவேயறுமேயவான்பும்
வாரியறவேயறும்.

1692 விளக்கொளியும்வேசையர்நட்புமிரண்டுந்
துளக்கறநாடின்வேறல்ல—விளக்கொளியு
நெய்யற்றகண்ணேயறுமேயவான்புங்
கையற்றகண்ணேயறும்.

1693 அங்கண்விசும்பினமரர்தொழப்படுஞ்
செங்கண்மாலாயினுமாகமற்—றங்கைக்
கொடுப்பதொன்றில்லாரைக்கொய்தளிரன்னார்
விடுப்பர்தங்கையாற்றொழுது.

1694 ஆணமினெஞ்சத்தணிநீலக்கண்ணார்க்குக்
காணமிலாதார்கடுவனையர்—காணவே
செக்கூர்ந்துகொண்டாருஞ்செய்தபொருளுடையா
ரக்காரமன்னாரவர்க்கு.

1695 பாம்பிற்கொருதலைகாட்டியொருதலை
தேம்படுதெண்கயத்துமீன்காட்டு—மாங்கு
மலங்கன்னசெய்கைமகளிர்தோள்சேர்வார்
விலங்கன்னவெள்ளறிவினார்.

1696 ஆமாபோனக்கியவர்கைப்பொருள்கொண்டு
சேமாபோற்குப்புறாஉஞ்சில்லைக்கணம்பினை
யேமாந்தெமதென்றிருந்தார்பெறுபவே
தாமாம்பலரானகை.

திருக்குறள்.

1697 பொருட்பெண்டிர்பொய்ம்மைமுயக்கமிருட்டறையி
லேதில்பிணந்தழீஇயற்று.

1698 பொதுநலத்தார்புன்னலந்தோயார்மதிநலத்தின்
மாண்டவறிவினவர்.

1699 ஆயுமறிவினரல்லார்க்கணங்கென்ப
மாயமகளிர்முயக்கு.

1700 வரைவிலாமாணிழையார்மென்றோள்புரையிலாப்
பூரியர்களாழுமளறு.

ஆகச்செய்யுள் 29, வரைவின்மகளிர் முற்றிற்று.

---

## சகூ. அதி. கள்ளுண்ணாமை.

---

திருமந்திரம்.

1701 *மயங்குந்தியங்குங்கள்வாய்மையழிக்கு
மியங்குமடவார்தம்மின்பமேயெய்தி
முயங்குநயங்கொண்டஞானத்துமுந்தா
ரியங்குமிடையறுவானந்தமெய்துமே.

1702 *உள்ளுண்மையோராருணரார்பசுபாசம்
வள்ளன்மைநாதனருளினின்வாழ்வுறார்
தெள்ளுண்மைஞானச்சிவயோகஞ்சேர்வுறார்
கள்ளுண்ணுமாந்தர்கருத்தறியாரே.

1703 *மயக்குஞ்சமயமலமன்னுமூடர்
மயக்குமதுவுண்ணுமாமூடர்தேரார்
மயக்குறுமாயையின்மாமாயைவீடு
மயக்கிற்றெளியின்மயக்குறுமன்றே.

### கந்தபுராணம்.

1704 விள்ளுறுநாணினர்விரகத்தீயின
ருள்ளுறுமுயிர்ப்பினருலையுநெஞ்சினர்
தள்ளுறுதம்முணர்வின்றிச்சாம்பினார்
கள்ளினுமுளதுகொல்கருத்தழிப்பதே.

1705 பளிக்கறையன்னதோர்படிகர்ப்பாங்கினுந்
தளிர்ப்புறுசெறுவினுந்தவறுற்றேகுவார்
தெளிப்பவரின்மையினெறியிற்சென்றிலர்
களிப்பவர்தமக்குமோர்கதியுண்டாகுமோ.

### விநாயகபுராணம்.

1706 அறிவையழிக்குஞ்செயலழிக்குமழியாமானந்தனையழிக்குஞ்
செறியுமறிஞர்மதியாதசெருக்கைவிளைக்குமீன்றாளு
முறியும்வெறுப்புமிகவிளைக்குமுனிவுவிளைக்கும்பகையஞ்சாக்
குறிகள்விளைக்குநகைவிளைக்குங்கொள்ளேல்கள்ளுண்டலைமைந்தா.

### திருக்குற்றாலப்புராணம்.

1707 வீறுயபவக்கடலின்வீழ்ந்தவரைத்தவவரம்பி
லேறுமலழுத்துசுழியறிவுவெளிக்கிருட்படலந்
தூறுயகொடுநரகினழுத்திவிடுந்தோட்டிகதி
பேறுணவழியடைக்குங்கதவமேபெறாநறவூண்.

1708 எவ்வமுறநுகர்ந்தாரையியம்புவதென்னுங்கவரைக்
கவ்வையுறப்புகன்றாலுங்கண்டாலும்பெரும்பாவ
மெய்வளருநெறியோர்கள்விலக்குவதுவிலக்காத
பொய்வழியைவிரும்பினரும்விரும்பாதபுலைமதுவே.

1709 பின்னவருண்டாலவரேபெரும்புலையர்வணிகரொடு
மன்னவருமுண்டாரேன்மற்றையவரினுங்கடைய
ரன்னவர்க்கேயவையாகிலம்புலிக்குக்கடவுளரா
முன்னவர்க்குமதுவநுந்தன்முறைமையோமடமையோய்.

கூர்மபுராணம்.

1710 கள்விலைபகர்வோர்கள்ளினைநுகர்ந்தோர்கள்ளருந்துதற்குடன்படு வோர், கள்ளருந்தினரைமகிழுநர்நரகிற்கற்பகாலங்கிடந்தழுந்தி யெள்ளுறுந்தீயமலப்புழுவாகிமலத்தினைநுகர்ந்துபின்னிறந்து விள்ளருங்கொடியரவுரவநரகின்மீட்டுமீட்டுமூன்றுநாள்கழிப்பர்.

திருப்பூவணப்புராணம்.

1711 *வள்ளத்தேயுறவாக்குமதுநுகர்ந்
துள்ளத்தேயுணர்வோடிடவோடிவீழ்ந்
தள்ளற்பள்ளத்தழுந்தினர்மள்ளர்தாங்
கள்ளுண்பார்க்குக்கதியுமுண்டாங்கொலோ.

சூதசங்கிதை.

1712 தீமையபக்குஞ்சுராபானஞ்செய்தபாவிமலம்புசித்துத்
தூய்மையடையாவுடல்விக்கித்துக்கத்துழலுமுயிர்களா
நாமதடையும்பறவைகளாநலமில்கிருமிகிடமாத்
தோமதுறுபல்பவமெடுத்துச்சுழன்றுதிரிவான்பற்பலநாள்.

இராமாயணம்.

1713 வஞ்சமுங்களவும்பொய்யுமயக்கமுமாயில்கொட்புந்
தஞ்சமென்றுணரீக்குந்தன்மையுங்களிப்புந்தாக்குங்
கஞ்சமெல்லணங்குந்தீருங்கள்ளினாலருந்தினோரை
நஞ்சமுங்கொல்வதல்லானரகினைநல்காதன்றே.

சீவகசிந்தாமணி.

1714 மாலைப்பந்தும்மாலையுமேந்திமதுவார்பூஞ்
சோலைம்மஞ்ஞைச்சூழ்வளையார்தோள்விளையாடி
ஞாலங்காக்கும்மன்னர்களாவார்நறவுண்ணுச்
சீலங்காக்குஞ்சிற்றுபகாரமுடையாரே.

### திரிகடுகம்.

1715 கிளைஞர்க்குதவாதான்செல்வமும்பைங்கூழ்
விளைவின்கட்போற்றானுழவு—மிளையனாய்க்
கள்ளுண்டுவாழ்வான்குடிமையுமிம்மூன்று
முள்ளனபோன்றில்லாப்பொருள்.

### அறநெறிச்சாரம்.

1716 ஒளியுமொளிசான்றசெய்கையுஞ்சான்றோர்
தெளிவுடையரென்றுரைக்குந்தேசுங்—களியென்னுங்
கட்டுரையார்க்கோதப்படுமேலிவையெல்லாம்
விட்டொழியும்வேறாய்விரைந்து.

### திருக்குறள்.

1717 உண்ணற்ககள்ளையுணிலுண்கசான்றோரா
னெண்ணப்படவேண்டாதார்.

1718 நாணென்னுநல்லாள்புறங்கொடுக்குங்கள்ளென்னும்
பேணாப்பெருங்குற்றத்தார்க்கு.

1719 கையறியாமையுடைத்தேபொருள்கொடுத்து
மெய்யறியாமைகொளல்.

1720 துஞ்சினார்செத்தாரின்வேறல்லரெஞ்ஞான்று
நஞ்சுண்பார்கள்ளுண்பவர்.

ஆகச்செய்யுள் 20, கள்ளுண்ணாமை முற்றிற்று.

## விநாயகபுராணம்.

1721 வென்றிவரினுயதனன் முன்மேவுமொன்றற்காயிரம்பின்
மன்றவிழக்குமது வன்றிவைத்தபொருளும்வருவாயு
மன்றியனைத்தும்பகைகொள்ளுமமைச்சராதியுறப்பொழியு
மொன்றுமொளிகல்விகண்மறுமையுறநிலையாஞ்சூதாடேல்.

## வில்லிபாரதம்.

1722 தீதினல்வரித்துநெஞ்சந்தியவாரமாயச்
சூதினல்வென்றுகொள்கைதோற்றமும்புகழுமன்று
போதினான்முகனுமாலும்புரிசடைபவனுங்கேள்வி
யாதினான்மறையுமுள்ளவளவுமிவ்வசையறாதே.

1723 அடியுமாண்மையும்வலிமையுஞ்சேனையுமழகும்வென்றியுந்தத்தங்
குடியுமானமுஞ்செல்வமும்பெருமையுங்குலமுமின்பமுந்
தேசும், படியுமாமறையொழுக்கமும்புகழுமுன்பயின்ற
கல்வியுஞ்சேர, மடியுமான்மதியுணர்ந்தவர்சூதின்மேல்வைப்பரோ
மனம்வையார்,

1724 குழகராயிளமடந்தையர்க்குருகுவோர்குறிப்பிலாமையினாலும்
பழகுவார்மிகச்சிந்தைநோய்தாங்களேபடிக்குமாறணாமம
லழகுபோறிவாகவேகொண்டவாறத்தொழில்புரியாமற்
கழகமாடவும்பெறுவரோவிதனினுங்களைவினிதன்றே.

1725 மேதகத்தெரிஞானநூற்புலவரும்வேத்தநூலறிந்தோரும்
பாதகத்திலொன்றென்னவேமுன்னமேபலபடப்பழித்திட்டார்
தீதகப்படுபுன்றொழிலினானசிற்சிந்தனைசிறிதின்றித்
தோதகத்துடனென்னையோசகுனிதன்சூதினுக்கெதிரென்றான்.

### நளவெண்பா.

1726 அறத்தைவேர்கல்லுமருநரகிற்சேர்க்குந்
திறத்தையேகொண்டருளைத்தேய்க்கு—மறத்தையே
பூண்டுவிரோதஞ்செய்யும்பொய்ச்சூதைமிக்கோர்க
ளீண்டுவரோவென்றார்தெரிந்து.

1727 உருவழிக்குமுண்மையுயர்வழிக்கும்வண்மைத்
திருவழிக்குமானஞ்சிதைக்கு—மருவு
மொருவரோடன்பழிக்குமொன்றல்லசூது
பொருவரோதக்கோர்புரிந்து.

### நைடதம்.

1728 *சீலநற்றருமமெய்சிதைக்குந்தெண்டிரை
வேலைமுற்றிருநிலக்கிழமைவீழ்த்திடு
மாலுறுத்திடுங்கவறுடன்மன்னகேள்
கோலிழுக்கரசர்தங்கொள்கைத்தென்பவே.

1729 *ஐயநீயாடுதற்கமைந்தசூதுமற்
றெய்துநல்குரவினுக்கியைந்ததூதுவெம்
பொய்யினுக்கருந்துணைபுன்மைக்கீன்றதாய்
மெய்யினுக்குறுபகையென்பர்மேலையோர்.

1730 *எள்ளுநகசூதினையிகலிவென்றதூஉங்
கள்ளமேற்கொடுவலைகரந்துவேட்டுவ
ருள்ளுறவமைத்திடுமுணவையோர்கிலாப்
புள்ளினமருந்தினைபோலுமென்பவே.

### சீவகசிந்தாமணி.

1731 பொய்யொடுமிடைந்தபொருளாசையுநளாய
மைபடும்வினைத்துகள்வழக்குநெறிமாயஞ்
செய்தபொருள்பெய்தகலன்செம்மைசுடுசெந்தீக்
கைதவநுனித்தகவறாடலொழிகென்றான்.

### திரிகடுகம்.

1732 புலைமயக்கம்வேண்டிற்பொருட்பெண்டிர்த்தோய்தல்
கலைமயக்கங்கள்ளுண்டுவாழ்தல்—கொலைமுனிந்து
பொய்ம்மயக்கஞ்சூதின்கட்டங்கலிவைமூன்று
நன்மையிலாளர்தொழில்.

### அறநெறிச்சாரம்.

1733 ஓதலுமோதியுணர்தலுஞ்சான்றோரான்
மேதையெனப்படுமேன்மையுஞ்—சூது
பொருமென்னுஞ்சொல்லினாற்புல்லப்படுமே
லிருளாமொருங்கேயிவை.

### திருக்குறள்.

1734 வேண்டற்கவென்றிடினுஞ்சூதினைவென்றதூஉந்
தூண்டிற்பொன்மீன்விழுங்கியற்று.

1735 ஒன்றெய்திநூறிழக்குஞ்சூதர்க்குமுண்டாங்கொ
லன்றெய்திவாழ்வதோராறு.

1736 சிறுமைபலசெய்துசீரழிக்குஞ்சூதின்
வறுமைதருவதொன்றில்.

1737 அகடாராரல்லலுழப்பர்சூதென்னு
முகடியான்மூடப்பட்டார்.

1738 உடைசெல்வமூணொளிகல்வியென்றைந்து
மடையாவாமாயங்கொளின்.

ஆகச்செய்யுள் 18, சூது முற்றிற்று.

## ௬௮-அதி. செல்வச்செருக்கு.

---

**கந்தபுராணம்.**

1739 அண்ணலந்திருவிடையழுந்தியாரையு
மெண்ணலன்செந்நெறியியற்றவோர்கலன்
கண்ணிலன்மதியிலன்களிப்பினேர்மகன்
மண்ணிடைவிரைவொடுவழிக்கொண்டாலென.

**செவ்வந்திப்புராணம்.**

1740 *வாலிபம்பெருநிலக்கிழமைமாண்பொருண்
மேலறிவிலாமையிலொன்றுமேவினுஞ்
சீலமுங்குடிமையுஞ்சிதையுமாலிவை
நாலுமுள்ளவர்செபணவிலவேண்டுமோ.

1741 *விழிதெரிந்திருக்கவுங்குருடுமேவுவர்
மொழிதெரிந்திருக்கவுமூகராகுவர்
பொழிமதுவன்றியுமயக்கம்பூணுவ
ரழிதருகாலமாமரசர்வண்ணமே.

**காசிகண்டம்.**

1742 தனித்தனிமுச்சுடரியற்றித்தங்கிய
வனைத்துலகிருளையுமகற்றுநாண்முக
னினைப்பருஞ்செல்வம்வந்தெய்தினீடிய
மனச்செருக்கெனுமிருளகற்றவல்லனே.

1743 ஏர்பெறுமிருநிதிச்செருக்கையெய்திடிற்
றேர்செவியுடையருஞ்செவிடராகுவ
ரோர்தருமுரைவலோரூமராகுவர்
கூர்விழியுடையருங்குருடராவரே.

**நன்னெறி.**

1744 தொலையாப்பெருஞ்செல்வத்தோற்றத்தோமென்று
தலையாயவர்செருக்குச்சார்த—லிலையா
மிரைக்கும்வண்டூதுமலர்நீர்க்கோதாய்மேரு
வரைக்கும்வந்தன்றுவளைவு.

## இராமாயணம்.

1745 அறநிரம்பியவருளுடையருந்தவர்க்கேனும்
பெறலருந்திருப்பெற்றபின்சிந்தனைபிறிதா
மறநினைந்துமைவலிகிலாரயினுமனத்தா
லிறனுறப்படியியற்றவரிடையறாவின்னல்.

1746 மன்னவர்வலிதின்வௌவாவளமனைக்கள்ளர்கொள்ளா
வின்னுயிர்க்கிறுதிசெய்யாவிழந்தபினிரங்கல்வேண்டா
துன்னியதுயிலையோட்டாதோகையர்காதல்கூட்டா
வுன்னியபொருளதீட்டாமுடைமையினின்மைநன்றால்.

## வில்லிபாரதம்.

1747 செல்வம்வந்துற்றகாலைத்தெய்வமுஞ்சிறிதுபேணார்
சொல்வனவறிந்துசொல்லார்சுற்றமுந்துணையுநோக்கார்
வெல்வதேநினைவதல்லால்வெம்பகைவலிதென்றெண்ணார்
வல்வினைவிளைவுமோரார்மண்ணின்மேல்வாழுமாந்தர்.

## குசேலோபாக்கியானம்.

1748 சிறியரேமதிக்குமிந்தச்செல்வம்வந்துற்றஞான்றே
வறியபுன்செருக்குமூடிவாயுளாரூமைகராவர்
பறியணிசெவியுளாருஞ்செவிடராவர்
குறிபெறுகண்ணுளாருங்குருடராய்முடிவான்றே.

## பழமொழி.

1749 அறியாமையோடிளமைகூடுவதாமாங்கே
செறியப்படுவதாஞ்செல்வஞ்—சிறிய
பிறைபெற்றவாணுதலாய்தானேயரும்பேய்
பறைபெற்றலாடாதோபாய்ந்து.

ஆகச்செய்யுள் 11, செல்வச்செருக்கு முற்றிற்று.

---

## சசு-அதி. வறுமை.

### கந்தபுராணம்.

1750 சொற்றருகலையெலாந்தொடர்ந்து பற்பகல்
கற்றவராயினுங்கழிநிரப்பினு
லற்றவராலரேலாக்கம்வேண்டியே
பற்றலர்தம்மையும்பணிந்துநிற்பரால்.

### காஞ்சிப்புராணம்.

1751 நிரப்பெனும்பெரும்பகைவந்து நிலவலின்யாது
மிரப்பிலார்களுமிரப்பது துணிந்தனரம்மா
கரப்பிலார்களுங்கரப்பது துணிந்தனர்கருத்தின்
விருப்பிலார்களுமிழிந்தவும்விரும்புமா துணிந்தார்.

### விநாயகபுராணம்.

1752 வறுமைபோலவின்னு து வறுமையன்றிவேறில்லை
மறுவின்மொழிகள்சோர்வுபடும்வாய்த்தகுடிநற்செயன்மொழிக
ளிறுதிபடுமற்றிரப்பாதியெல்லாத்துயருமுடனுகும்
பிறனினுக்குமீன்றாளுப்பிள்ளாயது வந்திடினிறந்தல்.

### பட்டினத்தடிகள்பாடல்.

1753 தாயும்பகைகொண்டபெண்டீர்பெரும்பகைதன்னுடைய
சேயும்பகையுறவோரும்பகையிச்செகமும்பகை
யாயும்பொழுதிலருஞ்செல்வநீங்கிவிங்காதவினுற்
றேயுநெஞ்சேமருநீசர்பொற்பாதஞ்சுதந்திரமே.

### நீதிநெறிவிளக்கம்.

1754 எனைத்துணையவேனுமிலம்பாட்டார்கல்வி
தினைத்துணையுஞ்சீர்ப்பாடிலவா—மனைத்தக்காண்
மாண்பிலளாயின்மணமகனல்லறம்
பூண்டபுலப்படாபோல்.

## தசேலையாக்கியானம்.

1755 வருவாய்மிக்குடையாரயளவிறந்தசெல்வத்தின்வளமுள்ளார்க்கு
மொருவாவன்பொருமதலையெண்ணியவாறளித்தோம்பலொல்லா
தாகும், பொருவாவெங்கலைக்கூற்றாய்க்கொடுவிடமாய்வடவையாய்ப்
புகுந்துவாட்டித், திருவாநின்றிடுமிடியிற்பன்மகவுள்ளாள்
செய்கையெற்றேயெற்றே.

1756 தரித்திரமிக்கவனப்பிணையொடுக்கிச்சரீரத்தையுலர்த்தவாட்டுந்
தரித்திரமளவாச்சோம்பலையெழுப்புஞ்சாற்றருமுலோபத்தை
யிருக்கும், தரித்திரந்தலைவன்றலைவியர்க்கிடையேதடுப்பருங்
கலாம்பலவிளைக்கும், தரித்திரமவமானம்பொய்பேராசைதருமிதிற்
கொடியதொன்றிலையே.

1757 தரித்திரங்களிப்பாங்கடலுக்கோர்வடவைசாற்றுமெண்ணங்கள்
வாழிடமாம், தரித்திரம்பற்பலக்கமுந்தோன்றத்தக்கபே
ராகரமென்ப, தரித்திரநன்மைசாலொழுங்கென்னுந்தழைவனந்
தனக்கழறழலாம், தரித்திரங்கொடியவெவெற்றினுங்கொடிதத்
தகையதையொழித்தனன்றுமே.

1758 இருங்கடற்புவியிடத்தினில்லாரையெல்லாருமெள்ளுவரென்
றொருங்குணர்ந்தமுன்னோருரைத்திட்டவிதுண்மையென்
றுளங்கொண்ணீ, நெருங்குபற்றுறுதாய்தந்தையருநிரப்புறுநரை
வெறுப்பாரேற், சுருங்குமன்பிக்மற்றெவர்வெறுத்திடாதவர்
தூநகைமலர்க்கொம்பே.

1759 கோதறுகல்விசாலூர்க்குடியிருந்தறியானேனு
மோதருஞ்செல்வமிக்கோனொருவனேசிறந்தோனுவன்
காதலின்வேதமுன்னுங்கலைகள்கற்றுணர்ந்தோனேனுந்
தீதமைமிடியனுயிர்ச்சிறந்திடான்வேத்தவைக்கே,

### மணிமேகலை.

1760 குடிப்பிறப்பழிக்கும்விழுப்பங்கொல்லும்
பிடித்தகல்விப்பெரும்புணைவிடூஉ
நாணணிகளையுமாணெழில்சிதைக்கும்
பூண்முலைமாதரொடுபுறங்கடைநிறுத்தும்
பசிப்பிணியென்னும்பாவி.

1761 வித்திநல்லறம்விளைந்தவதன்பயன்
றுய்ப்போர்தம்மனைத்துணிச்சிதருடுத்து
வயிறுகாய்பெரும்பசியலைத்தற்கிரங்கி
வெயிலெனமுனியாதுபுயலெனமடியாது
புறங்கடைநின்றுபுன்கண்கூர்ந்துமு
னறங்கடைநில்லாதயர்வோர்பலரால்.

### வளையாபதி.

1762 பெண்டிர்மதியார்பெருங்கிளைதானது
கொண்டவிறுகாகுறிப்பினஃகுப
வெண்டரைநின்றுவெறுக்கையிலாயின்
மண்டினர்போல்வர்தம்மக்களுமொட்டார்.

1763 தொழுமகனாயினுந்துற்றுடையானைப்
பழுமாஞ்சூழ்ந்தபறவையிற்சூழ்ப
விழுமியோனும்வெறுக்கையுலந்தாற்
பழுமரம்வீழ்ந்தபறவையிற்போப.

1764 பொருளில்குலனும்பொறைமையினோன்பு
மருளிலறனுமமைச்சிலரசு
மிருளினுளிட்டவிருண்மயிரொன்றே
மருளில்புலவர்மனங்கொண்டுரைப்ப.

1765 *சொல்லவைசொல்லார்சுருங்குபுசூழ்ந்துணர்
நல்லவையாருநனிமதிப்பாரல்லர்
கல்வியுங்கைப்பொருளில்லார்பயிற்றிய
புல்லென்றுபோதலைமெய்யென்றுகொண்ணீ,

## நாலடியார்.

1766 காலாடுபோழ்திற்கழிகிளைஞர்வானத்து
மேலாடுமீனிற்பலராவர்—ஏலா
விடரொருவருற்றக்காலீர்ங்குன்றநாட
தொடர்புடையோமென்பார்சிலர்.

1767 நல்லாவின்கன்றாயினாகும்விலைபெறூஉங்
கல்லாரேயாயினுஞ்செல்வர்வாய்ச்சொற்செல்லும்
புல்லீரப்போழ்தினுழவேபோன்மீதாடிச்
செல்லாவாநல்கூர்ந்தார்சொல்.

1768 அத்திட்டகூறையரைச்சுற்றிவாழினும்
பத்தெட்டுடைமைபலருளும்பாடெய்து
மொத்தகுடிப்பிறந்தக்கண்ணுமொன்றில்லாதார்
செத்தபிணத்திற்கடை.

1769 நீரினுநுண்ணிதுநெய்யென்பர்நெய்யினும்
யாருமறிவர்புகைநுட்பம்—தேரி
னிரப்பிடும்பையாளன்புகுமேபுகையும்
புகற்கரியபூழைநுழைந்து.

1770 பிறந்தகுலமாயும்பேராண்மைமாயுஞ்
சிறந்ததங்கல்வியுமாயுங்—கறங்கருவி
கன்மேற்கழூஉங்கணமலைநன்னாட
வின்மைதழுவப்பட்டார்க்கு.

## திருக்குறள்.

1771 இன்மையினின்னாததியாதெனினின்மையி
னின்மையேயின்னாதது.

1772 இன்மையெனவொருபாவிமறுமையு
மிம்மையுமின்றிவரும்.

1773 நல்குரவென்னுமிடும்பையுட்பல்குரைத்
துன்பங்கள்சென்றுபடும்.

1774 நற்பொருணன்குணர்ந்துசொல்லினுநல்கூர்ந்தார்
சொற்பொருள்சோர்வுபடும்.

1775 அறஞ்சாராநல்குரவீன்றதாயானும்
பிறன்போலநோக்கப்படும்.

1776 நெருப்பினுட்டுஞ்சலுமாகுநிரப்பினுள்
யாதொன்றுங்கண்பாடரிது.

ஆகச் செய்யுள் 27, வறுமை முற்றிற்று.

---

## ருய- அதி. இரவாமை.

---

### விநாயகபுராணம்.

1777 கண்ணிற்சிறந்தார்தம்மிடத்துங்காழ்த்தமானங்கெடநாவாற்
பண்ணற்குரியவறங்குறித்தும்படர்ந்தொன்றிரவார்பெருமையினு
லெண்ணிற்சிறந்தார்முயற்சியினாலெலாவுப்பில்வறும்புற்கை
யுண்ணற்கமைந்ததமைத்ததெனவுவப்பாரேமகண்டனே.

### குசேலோபாக்கியானம்.

1778 பல்லெலாந்தெரியக்காட்டிப்பருவான்முகத்திற்கூட்டிச்
சொல்லெலாஞ்சொல்லிநாட்டித்துணைக்காம்விரித்துநீட்டி
மல்லெலாமகலவோட்டிமானமென்பதனைவீட்டி
யில்லெலாமிரத்தலந்தோவிழிவிழிவெந்தனுரன்றும்.

1779 தெறுநிரப்புளோர்வாழ்ந்திடுசெல்வர்பாற்செல்வரேன்மதியார்கண்
மறுவுறுத்தவமானமுமியற்றுவர்மானமுள்ளவராயிற்
குறுகுமவ்வவமானத்தாலுயிர்விடுகொள்கையிற்றலைநிற்பார்
நறுமலர்க்குழலாதலாலவரிடைநண்ணனன்றெனவெண்ணல்.

### நளவெண்பா.

1780 சினக்கதிர்வேற்கண்மடவாய்செல்வர்பாற்சென்றீ
யெனக்கென்னுமிம்மாற்றங்கண்டாய்—தனக்குரிய
தானந்துடைத்துத்தருமத்தைவேர்பறித்து
மானந்துடைப்பதோர்வாள்.

### நாலடியார்.

1781 மானவருங்கலநீக்கியிரவென்னு
மீனவிழிவினால்வாழ்வேன்மன்—னீனத்தா
லூட்டியக்கண்ணுமுறுதிசேர்ந்திவ்வுடம்பு
நீட்டித்துநிற்குமெனின்.

1782 மறுமையுமிம்மையுநோக்கியொருவற்
குறுமாறியைவகொடுத்தல்—வறுமையா
லீதலிசையாதெனினுமிரவாமை
யீதலிரட்டியுறும்.

1783 திருத்தன்னைநீப்பினுந்தெய்வஞ்செறினு
முருத்தமனத்தோடுயர்வுள்ளினல்லா
லருத்தஞ்செறிக்குமறிவிலார்பின்சென
றெருத்திறைஞ்சிநில்லாதாமேல்.

1784 கரவாததிண்ணன்பிற்கண்ணன்னார்கண்ணு
மிரவாதுவாழ்வதாம்வாழ்க்கை—யிரவினை
யுள்ளுங்காலுள்ளமுருகுமாலென்கொலோ
கொள்ளுங்காற்கொள்வார்குறிப்பு.

1785 புறத்துத்தன்னின்மைநலியவகத்துத்த
னன்ஞானநீக்கிநிறீஇயொருவனை
யீயாயெனக்கென்றிரப்பானேலந்நிலையே
மாயானோமாற்றிவிடின்.

### திருக்குறள்.

1786 இரந்துமுயிர்வாழ்தல்வேண்டிற்பரந்து
கெடுகவுலகியற்றியான்.

1787 இன்மையிடும்பையிரந்துதீர்வாமென்னுட
வன்மையின்வன்பாட்டதில்.

1788 இடமெல்லாங்கொள்ளாத்தகைத்தேயிடமில்லாக்
காலுமிரவொல்லாச்சால்பு.

1789 ஆவிற்குநீரென்றிரப்பினுநாவிற்
கிரவினிளிவந்ததில்.

ஆகச்செய்யுள் 13, இரவாமை முற்றிற்று.

---

## ௫௧-அதி. அருமை.

---

### தணிகைப்புராணம்.

1790 அரிதாம்பிறப்புளுயர்மானிடத்தினடைவுற்றுவைகலிதனி
னரிதாகுநல்லகுலனிற்பிறத்தலறிவாளராதலதனி
னரிதாகும்வேதமுதலாய்ந்துமுக்கணமலற்கலத்தலதனி
னரிதாமுயர்ந்தகுலனுற்றும்வீணிலழிவாரிதென்கொலறிவே.

### பிரபுலிங்கலீலை.

1791 புன்மரநெளிபுழுப்புள்விலங்கெனும்
பன்மையதுயர்செயும்பவங்கடப்பியே
வன்மைகொணிலமிசைமக்களாகுத
னன்மைகொளுயிர்க்கலாலரிதுநந்தியே.

1792 நரர்வடிவாயினுநன்மையாற்றரு
மரபினிலுலகினில்வருதறப்புத
லரிதுநல்லறம்புரிவழிபடிப்பினு
மருவுதலரிதறம்வளர்க்குமங்கமே.

1793 அறத்துறப்பெய்தினுமன்பினுலறஞ்
சிறப்புறச்செய்தவமரிதுசெய்யினும
புறச்சமயங்களைப்போக்கியாகம
நெறிச்சமயங்களையரிதுசேர்தலே.

### வில்லிபாரதம்.

1794 உற்றயோனிகடம்பிலுற்பவியாமன்மானுடவுற்பவம்
பெற்றுவாழ்தலரிதுமற்றதுபெறினுமாயைசெய்பெருமயக்
கற்றஞானிகளாய்விளங்குதலரிதுவீடுறுமறிவுபின்
பற்றுமாறிஃதிங்குனக்கிவைபண்பினோடுபவித்தவே.

## சீவகசிந்தாமணி.

1795 பாவைவெண்டிரைவடகடற்படுநுகத்துளையுட்
டிரைசெய்தென்கடலிட்டதோர்நோன்கழிசிவணி
யாசவத்துளையகவயிற்செறிந்தெனவரிதாற்
பெரியயோனிகள்பிழைத்திவண்மானிடம்பெறலே.

1796 விண்டுவேய்நரலூன்விளைகானவரிடனுங்
கொண்டுகூர்ம்பனிகுலைத்திடுநிலக்களக்குறும்பு
பூண்டுநீரெனவுரையினுமரியனவொருவி
மண்டுதீம்புனல்வளங்கெழுநாடெய்தலரிதே.

1797 வில்லின்மாக்கொன்றுவெண்ணிணத்தடிவிளிம்படுத்த
பல்லினார்களும்படுகடற்பரதவர்முதலா
வெல்லைநீங்கியவிழிதொழிலிழிகுலமொருவி
நல்லதொல்குலம்பெறுதலுநாபதியரிதே.

1798 கருவிமாமழைகனைபெயல்பொழிந்தெனவழிநா
ளருவிபோற்றொடர்ந்தறுதனவறும்பிணியழலுட்
கருவிற்காய்த்தியகட்டளைப்படிமையிற்பிழையா
துருவின்மிக்கதோருடம்பதுபெறுதலுமரிதே.

## வளையாபதி.

1799 *வினைபலவலியினாலேவேறுவேறியாக்கையாகி
நனிபலபிறவிதம்முட்டுன்புறாஉம்பல்லுயிர்க்கு
மனிதரினரியதாகுந்தோன்றுதறோன்றினாலு
மினியவைநுகரவெய்துஞ்செல்வமுமன்னதேயாம்.

1800 *உயர்குடிநனியுட்டோன்றலூனமிலயாக்கையாதன்
மயர்வறுகல்விகேள்வித்தன்மையால்வல்லராதல்
பெரிதுணர்வறிவேயாதல்போறங்கோடலென்றாங்
கரிதிவைபெறுதலேடாபெற்றவர்மக்களென்பார்.

ஆகச்செய்யுள் 11, அருமை முற்றிற்று.

---

## ௫௨- அதி. ஒழிபு.

---

### கந்தபுராணம்.

1801 உற்றுழியுதவிசெய்வோ னலப்பிலாதெவையுமீவோ
ரற்றமிறவத்தாறுறன்றோமாபுரிவீரராவோர்
மற்றொருபொருளும்வெஃகார்வருத்தமுமோராராவி
யிற்றிடவரினுமெண்ணாரினிதெனமகிழ்வான்றே.

1802 ஆயவமுதத்தினுநஞ்சுளப்புண்குநரையவ்விடமலாற்
றாயவமுதோவுயிர்தொலைக்குமதுபோலுனதுதொல்லநளினு
லேயதிருவெய்திடவிருந்தனமுன்னோடமரியற்றியதனு
னீயெமைமுடித்தியிலையனைதவறெமதுயிரைநீக்கியதரோ.

1803 ஆதலினெமக்கடிகள்செய்தவருளுக்குநிகராற்றுவதுதா
னேதுளதுமற்றெமைபுனக்கடியராகவிவணீதுமெனினு
மாதிபரமாகியவுனக்கடியமயாம்புதிதளிப்பதெவனோ
தாதையர்பெறச்சிறுவர்தங்களையவர்க்கருள்கைதக்கபரிசோ.

1804 பாங்காய்நின்றதானையுமூரும்பகடுந்தா
னேங்காநின்றேபார்மிசைவீழாவிறவுற்ற
தீங்காய்நின்றசெய்வினையாளர்சிதைவாகப்
போங்காலத்திற்சேர்ந்தவர்தாமும்போகாரோ.

1805 தீங்கியாவர்க்குஞ்செய்திடாதவர்
தாங்கடுன்புறார்தமக்குவேண்டினோ
ராங்கெவர்க்குமூனலல்லல்செய்வார
னீங்குதீயிவைபெண்ணலாற்கொலோ.

1806 கள்ளுற்றகூந்தற்கனங்குழைநல்லார்கருத்திற்
கொள்ளப்படுமெண்ணுணிக்குந்தகைமைத்தோ
தள்ளற்கரிதாகித்தம்மொடுபன்னாட்பழகி
யுள்ளுற்றதேவுமுணர்தற்கரிதன்றோ.

## திருவிளையாடற்புராணம்.

1807 மருட்சிசெய்காமநோயான்மதிகெடுமாறுபோல
வருட்சிவஞானநோக்கால்வலிகெடுமவிச்சைபோலத்
தருக்குறுமுவணஞ்சிறத்தழலராவிளியுமாபோற்
செருக்குறவழியுங்கற்றகல்விபோற்சிதையுமன்றே.

1808 கோதறுகற்பினுங்கொழுநன்கைத்தலங்
காதலன்கைத்தலமன்றிக்கன்றின்வா
லாதலிம்மூன்றிலொன்றங்கைபற்றியே
யோதநீராடுதன்மரபென்றோதினார்.

1809 வயிறதுகுழியவாங்கலழுமுகங்காட்டல்வாங்குஞ்
செயிரறுபுருவமேறல்சிரநடுக்குறல்கண்ணுடல்
பயிறருமிடறுவீங்கல்பையெனவாயங்காத்த
* லெயிறதுகாட்டலின்னவுடற்றொழிற்குற்றமென்ப.

1810 வெள்ளைகாகுளிகீழோசைவெடிகுரனுசியின்ன
வெள்ளியவெழாவின்குற்றந்தெரிந்துநின்றிரட்டலெல்லை
தள்ளியகழிபோக்கோசையிளைத்தநெட்டுயிர்ப்புத்தள்ளித்
துள்ளலென்றின்னபாடற்றொழிற்குற்றப்பிறவுந்தீர்ந்தே

## காஞ்சிப்புராணம்.

1811 அல்லலேபெண்ணெனப்பிறத்தலாங்கதி
னல்லலேயிளமையிற்சிறத்தலாங்கதி
னல்லலேகட்டழகுடைமையாங்கதி
னல்லலேயிரவலர்சார்பினாகுதல்.

1812 இல்லைவைதிகநெறியில்லைநல்லற
மில்லைநால்வருணமாச்சிரமமில்லையா
லில்லைமாணாக்கர்களில்லையாரிய
ரில்லைநல்லொழுக்கமுங்கலியினெய்பவே.

## தணிகைப்புராணம்.

1813 தேவராயினரின்பமேநாகினிற்றிளைக்கும்
பாவராயினர்துன்பமேபடரிருபயனும்
பூவராயினரோநுகர்வாரெனப்புகல்வார்
காவலன்முகனிடும்பைநோய்கண்டிலர்போலும்.

1814 ஒருவன்பால்வெற்றிகொண்டோனொருவன்பாற்றோல்விகொள்ளு
மொருவன்பாற்சீர்த்திகொண்டோனொருவன்பாலிளிவந்துட்கு
மொருவன்பானட்புக்கொண்டோனொருவன்பாற்பகைமைகொள்ளு
மொருவனேநட்பாவுள்ளோன்பகையுமாயுடற்றுமன்றே.

## விநாயகபுராணம்.

1815 தகைமையுடையவறிஞர்கள்சாலவெறுப்புச்செயுமன்றி
நகையும்விளைக்கும்வெளிற்றறிவைநவிற்றுநன்குமதிப்பொழிக்கு
மிகைசெய்விழுப்பந்தபுமதனால்விழையுமறமாதிகள்பயவா
வகையினுரைக்கும்பயனில்சொன்மைந்தாவுரையலுரையேலே.

1816 மனமெய்மொழிகள்வருந்தாவண்வகுத்தத்தொழிலைமாறுபடா
வினியவுணவைமிகப்பசித்தவிடத்தினுடற்குப்பொருந்தவுணின்
முனிசெய்பிணிகட்கிடனின்றுபுறைகள்பிறழ்ந்துவந்துவிடிற்
புனிதமுடையவயித்தியரால்வழிநின்றவற்றைப்போக்குகவே.

1817 தன்னாலாளப்படுமனைவிதன்னாலாளப்படுவானே
லன்னாற்கறனும்பொருளுமுளவாகாதொல்லைப்பொருளானு
மன்னாபயன்கள்வினைமுடியாமறுமையனுகாதெப்பிழையு
முன்னும்பின்னும்பெருநாணுமுவாப்பழியுமறிமைந்தா,

## திருவானைக்காப்புராணம்.

1818 பொருள்விழைந்தணங்கைக்கொடுத்தவன்றனக்கும்புகன்றமுற்
குற்றமேயடுக்கும், பொருள்விழைந்தளித்தபூவையுந்தூய்மை
புணர்இலள்புழுக்கையேபோப்பா, டருமுறையின்றிவளியினாற்
சவர்த்தலையனுங்கருதிலியாதி, கருமமில்லவனும்
விதியுளிவருவைகாணினுமத்தகைமையரே.

1819 பிரமமேபிரசாபத்தியந்தெய்வம்பெணுமாரிடம்வளாசுரம்
பரவுகாந்தருவமிராக்கதம்பசாசமெனப்பகர்மன்றலோரெட்டாங்
காவுதீர்பிரமசரியனோற்றவர்க்குக்காமருசெல்வமிக்குடைய
வாவமேகலையையங்கிமுன்றானமாகநன்றளிப்பதுபிரமம்.

1820 அரிவையைக்கோட்குரியவன்கொடுத்தவாடகத்திரட்டியம்
மகளைப், பரிவொடுசார்த்திக்கொடுப்பதுபிரசாபத்தியம்வேள்வி
செய்தவர்க்காங், குரிமையின்மகளைத்தக்கணையாகவுதவுதறெய்வ
மீரவைப், புரியிழைபணிந்து நிறீஇயிடைமகளைப்புரையிலார்க்
களிப்பதாரிடமே.

1821 மகட்பயந்தவனையிரந்திரந்தீந்துவாங்கலுமொக்கலார்க்கிரும்பொன்
மிகக்கொடுத்தவராற்பயந்தவனளிப்பமேவலும்பிறவுமாமசுரந்
தகப்பெருங்காதலாலெதிர்நோக்கித்தங்களுட்கூடல்காந்தருவம்
பகப்பயந்தவனையலைத்தணங்கலறப்பாழியிற்கொளலிராக்கதமே.

1822 களித்தவர்துயின்றோர்மூத்தவரவரைக்கரவினிற்கவர்வதுபசா
சந், தெளித்தனமன்றலெட்டினந்தணர்க்கேசிறந்தனமுந்திய
நான்கு, மளித்தணங்கேற்குமசுரநால்வருக்குமாகுஞ்சூத்திரர்
முதலோர்க்கு, வளைத்தகந்தருவமிராக்கதமுரியமருவுறுதொரு
வர்க்கும்பசாசம்.

## திருக்குற்றாலப்புராணம்.

1823 பூவையர்செய்யும்பாவம்புருடர்மேற்புருடர்பாவங்
கோவின்மேற்சுமையாமக்கொற்றவன்புரியும்பாவ
மேவுமேபுரோகிதன்பால்வீண்புரோகிதத்தாலின்னோன்
மூவர்பாதகமுந்தாங்குமுழுச்சுமைதாங்கிபோன்றான்.

1824 இருவருமிணங்குகளவுகாந்தருவமனந்தரிவிணங்கல்பைசாசம்
பெருவலியதனுன்மருவுதலாக்கம்பேரிலக்கெய்தலேயசுரம்
பொருளுகந்தளித்தலாரிடம்பிரசாபத்தியம்பொருள்கொளா
தளித்த, லருமகத்தனைவேட்பித்தலேதெய்வமழைத்தெதிர்
கொடுத்தலேபிரமம்.

1825 இருக்கினொடுதயித்திரியஞ்சாமமதர்வணமென்னும்
பெருக்கமறைநான்கோதிமந்திரஞ்சந்தோபிசித
நிருத்தஞ்சோதிட நிகண்டுவியாகரணமெனநிகழ்த்து
மருத்தியாறங்கபுணர்ந்தாகமத்தின்வகைதெரிந்து.

சீகாளத்திப்புராணம்.

1826 ஓவாவறுமையுழந்தாலுமற்றொருவ
ரேவாதுயிர்வாழ்ந்திருத்தலேநன்றாகுந்
தாவாதசெல்வந்தருமேனுங்குற்றேவ
லாவாகொடிதுகொடிதென்பாருமாயினார்.

1827 சீரிளைஞர்மார்புபொருசெய்கையறியாளும்
பாரமுலையீகையிலிபாணிலையபொன்னும்
பேரவையையஞ்சமொருபேதைபெறுநூலும்
வீரமறுபேடிகையில்வேலுநிகராமால்.

கூர்மபுராணம்.

1828 அறம்புரிந்தன்றியோங்குந்துறக்கத்தினடைதலாகா
சிறந்தநற்பொருள்செய்தல்லாற்றிகழ்தருமின்பஞ்சேரா
வுறைந்தகாரணத்தினன்றிக்காரியமாகாவோடு
கறங்குபோர்பிறவிஞானத்தல்லது கடக்கலாகா.

1829 தாயைப்பயந்தாடாய்க்கிளையாடாயின்மூத்தாடவ்வைதனக்
கேயதந்தைதனையீன்றாள்வளர்த்தாளத்தைகுருபன்னி
காயும்வடிவேன்மன்னவர்தங்கடிமாமனைவாழ்மடந்தையர்க
ணேயத்தோடுதனையீன்றவன்னையனையரெனநினைக.

1830 அருமாமறைகளோதுவித்தோர்தந்தைதமையனடல்வேந்த
னுரியவம்மான்மாதுலன்றனுய்யப்பரிந்தோன்றாய்தந்தை
மருவுந்தந்தைதனையீன்றோன்வருணசேட்டன்றந்தைக்குப்
பொருவின்முன்னோன்பின்னோன்மற்றின்னோர்குரவரெனப்புகல்
[வார்.

## இலிங்கபுராணம்.

1831 *கடையுகத்திற்றருமநிலைவேர்சாயப்பொய்மைகொடுங்களவுவஞ்ச
மநிகொலைமற்றிவைமுதலபாவங்கடழைத்திடலாலனிகள்பாட
படலவிபூங்கமலத்தார்மறையவர்வார்கழல்வேந்தர்வணிகர்
தொல்லை, யொடிவினைமறைநவில்கலாரொழுகாதநெறி
யதனிலொழுகுவாரே.

1832 *பின்னவராடகப்பசும்பொன்மடங்கலாசனத்திருப்பப்பிறங்கு
மொள்வாண், மன்னவர்வேதியாவர்தம்வனைகழற்கால்வணங்கி
முறையியவல்பூண்பா, ரன்னவர்வேதியரொழுகுநெறியதனி
லொழுகுவாரழிவிலாத, மன்னுமறையவர்நான்காம்வருணத்தார்
நெறியதனின்மன்னிவாழ்வார்.

1833 *உறைந்திடிமில்லமெழுக்கெறிநதிட்டாற்றூய்மையாமுறைசெய்
மட்கலங்க, ளுறைநதிக்கனலினிடையினிலிட்டுக்காய்த்திடிற
றுலங்கிடுமாக்கள், சிறந்திடமிதித்தநிலமெலாந்தூய்மைசேரு
மென்னிலக்குழியதனி, னிறைந்தநீர்பசுவொன்றருந்திமிஞ்சிடு
மேற்றூய்மையாமெனநிகழ்த்துவரால்.

1834 *கன்றினையருத்தியாவினன்மடியிற்கறந்தபாற்றூய்மையாம்பறவை
தின்றொழிந்திட்டபழமுநன்குறுமாற்செறிந்துவார்தெள்ளறல்
புரையுந், துன்றுபூங்குழலார்பூப்புறந்தோறுந்தூய்மையாகுவர்
கள்காழியர்தா, மன்றவிழ்ந்திட்டவாடைநீர்தெளிப்பிற்றூய்மையா
மெனவழங்குவரால்.

1835 *மயிர்வினைசெய்வோர்காங்கடுய்மையவாங்கூலத்திற்கொணர்ந்து
வந்தவைகள், செயிரிலவாநம்வேட்டையினுய்வாய்ப்பட்டசெந்
தடிகணன்குறுமாற், றுயரில்வேதியர்கடலங்குமெய்ந்நிழலும்
வேதஞ்சொல்போதில்வாய்நின்று, மயலுறத்தெறித்ததிவலையுந்
தேனுந்தூய்மையாமெனவறைகுவரால்.

1836 *அறைதருபுனலிற்படிந்திடுநான்காநாளிலாறுபநாளதனின்
முறையினிலெட்டாநாளினிற்பத்தாநாளினின்மொழியுமீராறு
நிறைதருநாளிலோர்பதினைங்கநாளினினிகழ்த்துமீரெட்டுச்
செறிதருநாளிற்கருவுறிற்புதல்வர்ப்பெறுகுவர்சேயிழைமடவார்.

### பாகவதம்.

1837 *துகளிற்சேர்ந்தநரகொடுதுன்னலர்
பகழிக்குப்பயமில்லைபழித்திடும்
புகழிற்கும்மறையோர்கள்புகன்றிடும்
வெருளிக்கும்வெருண்டோடுமென்னுள்ளமே.

1838 *கடக்கருவலிமைசான்றகலியெனுங்காலத்தாசை
யடக்கரிதாகியுண்மையருள்பொறைபுனிதமாயு
ளுடற்குறுதிண்மைபுந்தியுற்றிடுநினைவுபார்மே
னடக்குறுதருமமெல்லாநாட்குநாட்குறையுமம்மா.

### அரிச்சந்திரபுராணம்.

1839 கொஞ்சிப்பேசுங்குழவிசொற்குற்றத்தால்
வஞ்சித்தன்னைவளபுலைப்பாவினி
னஞ்சிட்டாலதைநாடிவிலக்குநன்
னெஞ்சத்தாருளரோவிந்நிலத்திலே.

### உபதேசகாண்டம்.

1840 உலகிறப்பதிலொருதனிநாடிறந்தொழித
லுலவுநாடிறந்தொழிவதற்கொருநகரிறத்த
லலைவிணமாநகரிறப்பதிலொருகுடியழித
லிலதுமோர்குடியிறப்பதிலொருவனிறினிதே.

### காசிகண்டம்.

1841 திருந்தலர்புகழொடுஞ்செல்வந்துய்த்திட
வருந்தியுங்கருணையோடடிசில்வாய்மடுத்
தருந்தியுந்துயிலுநல்லின்பமார்ந்தியு
மிருந்துயிர்சுமப்பதினிறத்தனன்றரோ.

1842 புந்தியைக்கொடியவெம்பசியைப்பொற்பினை
யந்தமின்முயற்சியைத்துயிலையாற்றலை
நந்தலிலுயிரினைநண்ணர்நெஞ்சினைச்
சிந்தையொன்றெய்தியுற்சிதைக்குமென்பவே.

1843 உருத்தெழுவெப்புநோய்பழுநினுய்யுமா
றருந்தியமருந்தினிலமையுஞ்சிந்தைவெப்
பெரித்து நாள்பற்பலகழியினீண்டுமோன்
மருத்துவரோவிது மாற்றவல்லரே.

1844 அறத்திறந்திறம்பினோரருளிலாதவர்
துறக்கமொன்றில்லெனச்சொல்லும்புன்மையோர்
சிறப்புடைப்பயனுறுத்தர்க்கஞ்செய்குநர்
பெறற்கருந்தீர்த்தநற்பயன்பெறார்களே.

1845 பொய்யுரைபுகலிற்றீமையாமென்னப்புகன்றனர்புலமைநன்
குணர்ந்தோர், ரையநுண்மருங்குற்செய்யவாய்மகளிர்புலவியி
லந்தணராவி, யுய்யுமென்புழியிலாவினையளிக்குமிடத்தினிலோடரி
நெடுங்கட், டையலார்மணத்திற்பொய்ம்மையுமெய்ம்மை
தன்னினும்விழுமிதாமன்றே.

## பிரபுலிங்கலீலை.

1846 பொறைக்கயிற்றிற்புகழையின்சொல்லெனும்
விறற்கயிற்றினவிருந்தைகரூரவர்சொண
மறைக்கயிற்றின்மனத்தைததிருவைநல்
லறக்கயிற்றினசைப்பவரெவருமே.

## பிரபோதசந்திரோதயம்.

1847 *சொற்றருமஞ்சிதைக்குமன்னர்சொன்னபடிசொன்னவரே
தொலையாச்செல்வம், பெற்றவர்களவைதிருத்திப்பேசினர்க்கு
முற்கேடுபிறக்கும்பித்தர்க், குற்றதுணைநூலினுஞ்செவ்
வொழுக்கனறேவூண்புசிக்குமுழுவைமுன்போய்க், கற்றறிநல்
லறமோதிற்கடுங்கொலைமாபாவமெனுங்கருத்துறுதே.

1848 *குருவாசனன்னைபிதாத்தம்முனைனத்தொழத்தகுமைங்குரவ
ரேனும், பெருமிதங்கொண்டுமடாதிதுவென்பதுணராமற்
பிழைசெய்வரேற், றருமநெறியுணர்ந்தமிக்கோராவாவர்க்குத்தக்க
தக்கதண்டஞ்செய்தன், மருவுநீரைக்கடலுடுத்தமாநிலத்திற்
பண்டையாறுவானமன்றோ.

1819 *கற்றறிவுகுலமேன்மைகருணைபெரும்புகழ்செல்வங்கைம்மா
றெண்ணு, ஆற்றுதவுங்கொடைசீர்மையொழுக்கமருந்தவநியம
முறவின்கேண்மை, மற்றெதிரிலாத்திண்மைவாய்மைமிகுந்
தூய்மைகுணம்வனப்பியாவும், பெற்றிடினுமடக்கமிலாப்
பெருமிதத்தாலத்தனைக்கும்பிழையுண்டாமால்.

1850 *பொல்லாதவர்நன்மைபொருந்துவது
நல்லார்மிகவன்றுயர்நண்ணுவதுந்
தொல்லார்வினையால்வரினுந்தொடர்பாய்
நில்லாதெனும்வாய்மொழிநிச்சயமே.

1851 *அறிவுகற்றகல்விவாய்மைபண்புமன்பநித்தநல்
லுறவுநட்பொழுக்கமேன்மையொருவர்செய்தவுதவிசீர்
பிறவுமினையசெய்கைமற்றதெவையுநெஞ்சுபேர்வென
மறதியுற்றபோதியாவர்மனிதர்தேவர்மதியுளார்.

ஞானவாசிட்டம்.

1852 *கொள்ளற்பாலதுதுயரிலாதவர்நிலைகுறுகத்
தள்ளற்பாலதுதீயவர்நெறியெனுஞ்சழக்கே
யெள்ளற்பாலதுவுலகமேதியாமெவனென்றே
தெள்ளற்பாலதுகுரவராலறிவினுற்றீர்.

சிவ மெய்ம்மொழி.

1853 *சத்திமாமுனிவர்றன்பாற்பராசரன்பராசரற்கு
மற்சிபகந்தையென்பாள்வயிற்றினிலவதரித்து
விச்சையின்மிகுதியாலேவியாசமாமுனியுமானான்
கொச்சைசேர்சாதிபேதமெங்கொலோகூறலுற்றாய்.

1854 *சாதியொன்றுயர்ந்ததுதாழ்ந்ததொன்றெனப்
பேதமேவல்லராய்ப்பிதற்றுவார்சிலர்
சோதியேயநாதியாய்த்துன்னிநின்றமை
போதியாமையில்வரும்புன்மைபாருமே.

### பட்டினத்தடிகள்பாடல்.

1855 ஓடாமற்பாழுக்குழையாமலோரமுரைப்பவர்பாற்
கூடாமனல்லவர்கூட்டம்விடாமல்வெங்கோபநெஞ்சி
னாடாமனன்மைவழுவாமலின்றைக்குநாளைக்கென்று
தேடாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே.

1856 கொல்லாமற்கொன்றதைத்தின்னாமற்றுத்திரங்கோள்களவு
கல்லாமற்கைதவரோடிணங்காமற்கனவிலும்பொய்
சொல்லாமற்சொற்களைக்கேளாமற்றோகையர்மாயையிலே
செல்லாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே.

1857 பொய்யையொழியாய்புலாலைவிடாய்காளத்தி
யையரையெண்ணாயறஞ்செய்யாய்—வெய்ய
சினமேயொழியாய்திருவெழுத்தைந்தோதாய்
மனமேயுனக்கென்னமாண்பு.

### தாயுமானவர்பாடல்.

1858 கல்லாதபேர்களேநல்லவர்கணல்லவர்கள்
கற்றுமறிவில்லாதவென்
கன்மத்தையென்சொல்கேன்மதியையென்சொல்லுகேன்
கைவல்யஞானநீதி

நல்லோருரைக்கிலோகன்மமுக்கியமென்று
நாட்டுவேன்கன்மமொருவ
னாட்டினாலோபழையஞானமுக்கியமென்று
நவிலுவேன்வடமொழியிலே

வல்லானொருத்தன்வரவுந்த்ராவிடத்திலே
வந்ததாவிவகரிப்பேன்
வல்லதமிழறிஞர்வரினங்ஙனேவடமொழியின்
வசனங்கள்சிறிதுபுகல்வேன்

வெல்லாமலெவரையும்வெருட்டிவிடவகைவந்த
வித்தையென்முத்திதருமோ
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகசித்தர்கணமே.

1859 மாறுபடுதர்க்கத்தொடுக்கவறிவார்சாண்
வயிற்றின்பொருட்டதாக
மண்டலமும்விண்டலமுமொன்றாகிமனதுமல
மாலாகிநிற்கவறிவார்

வேறுபடுவேடங்கள்கொள்ளவறிவாரொன்றை
மெணமெணென்றகம்வேறதாம்
வித்தையறிவாரமைப்போலவேசங்கைதபோ
மெய்ந்நூல்விரிக்கவறிவார்

சீறுபுலிபோற்சீறிமூச்சைப்பிடித்துவிழி
செக்கச்சிவக்கவறிவார்
திரமென்றுதந்தம்மதத்தையேதாமதச்
செய்கைகொடுமுளறவறிவா

ராறுசமயங்கடொறும்வேறுவேறாகிவிளை
யாடுமுனையாவறியா
ரண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே.

1860 எத்தனைவிதங்கடான்கற்கினுங்கேட்கினுமெ
னிதயமுமொடுங்கவில்லை
யானெனுமகந்தைதானெள்ளளவுமாறவில்லை
யாதினும்மபிமானமென்

சித்தமிசைகுடிகொண்டதீதைபொடிசக்கமென்
சென்மத்துகானறிகிலேன்
சீலமொடுதவவிரதமொருகனவிலாயினுந்
தெரிசனஞ்செய்துமறியேன்

பொய்த்தமொழியல்லான்மருந்துக்குமெய்ம்மொழி
புகன்றிடேன்பிறர்கேட்கவே
போதிப்பதல்லாதுசும்மாவிருந்தருள்
பொருந்திடாப்பேதைநானே,

யத்தனைகுணக்கேடர்கண்டதாக்கேட்டதா
வவனிமிசையுண்டோசொலா
யண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே.

நன்னெறி.

1861 ஆக்குமறிவானலதுபிறப்பினான்
மீக்கொளுயர்விழிவுவேண்டற்க—நீக்கு
பவாரரவின்பருமணிகண்டென்றுங்
கவரார்கடலின்கடு.

நீதிநெறிவிளக்கம்.

1862 அவையஞ்சிமெய்விதிர்ப்பார்கல்வியுங்கல்லா
ரவையஞ்சாவாகுலச்சொல்லு—நவையஞ்சி
யீத்துண்ணார்செல்வமுநல்கூர்ந்தாரின்னலமும்
பூத்தலிற்பூவாமைநன்று.

1863 நட்புப்பிரித்தல்பகைநட்டலொற்றிகழ்தல்
பக்கத்தார்யாரையுமையுறுத—றக்கார்
நெடுமொழிகோறல்குணம்பிறிதாதல்
கெடுவதுகாட்டுங்குறி.

1864 வாங்குங்கவளத்தொருசிறிதுவாய்தப்பிற்
றூங்குங்களிறோதுயருறா—வாங்கதுகொண்
டேருமெறும்பிங்கொருகோடியுய்யுமா
லாருங்கிளையோடயின்று.

1865 மனத்தகறுப்பெனினல்லசெயினு
மனைத்தெவையுந்தீயவேயாகு—மெனைத்துணையுந்
தீயவேசெய்யினுநல்லவாக்காண்டவே
மாசின்மனத்தினவர்.

1866 குலம்விற்றுக்கொள்ளும்வெறுக்கையும்வாய்மை
நலம்விற்றுக்கொள்ளுந்திருவுந்—தவம்விற்றூங்
கூனோம்பும்வாழ்வுமுரிமைவிற்றுண்பதூஉந்
தானோம்பிக்காத்தறலை.

1867 பொதுமகளேபோல்வதலையாயார்செல்வங்
குலமகளேயனையோர்செல்வங்—கலனழிந்த
கைமையார்பெண்மைநலம்போற்கடையாயார்
செல்வம்பயன்படுவதில்.

1868 ஏந்தெழின்மிக்கானிளையானிசைவல்லான்
காந்தையர்கண்கவர்நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடையின்சொல்லான்கேளொனினுமாதர்க்
கயலார்மேலாகுமனம்.

இராமாயணம்.

1869 விண்டுழியொருநிலைநிற்பர்மெய்ம்முகங்
கண்டுழியொருநிலைநிற்பர்கைப்பொருள்
கொண்டுழியொருநிலைநிற்பர்கூழுட
னுண்டுழியொருநிலைநிற்பருற்றவர்.

வில்லிபாரதம்.

1870 கற்றவர்க்குநலனிறைந்தகன்னியர்க்கும்வண்மைகை
யுற்றவர்க்கும்வீரரென்றுயர்ந்தவர்க்கும்வாழ்வுடைக்
கொற்றவர்க்குமுண்மையானகோதின்ஞானசரிதரா
நற்றவர்க்குமொன்றுசாதிநன்மைதீமையில்லையால்.

1871 அரிபிறந்ததன்றுதூணிலாணும்வெயிலாயினன்
பாவையுண்டமுனியுமிப்பாத்துவாசன்மைந்தனு
மொருவயின்கண்முன்பிறந்ததொண்சாத்தினல்லவோ
வரியவென்றிமுருகவேளுமடிகளும்பிறந்ததே.

1872 வெல்லுகவறமுமெய்ம்மையும்பொறையுமேகமேனியனும்
வெல்லாமற், செல்லுகபாவம்பொய்ம்மொழிகோபந்தயித்தியர்
குலமெனத்தெளிவுற், றல்லும்வெம்பகலுமென்மனநிகழ
மலகையாயன்னிலைமுன்னங், கொல்லுதல்புரிகதோவென்றனன்
முரசக்கோட்டியதோற்றவெங்கொடியோன்,

1873 பிறர்மனைவியரைப்பெற்றதாயெனவும்பிறர்பொருளேட்டியே
யெனவும், பிறர்வசையுரைத்தல்பெருமையன்றெனவும்பிறர்
துயரொன்றுயரெனவு, மிறுதியேவரினுமென்மனக்கிடக்கை
யெப்பிராணிவையெனவுரைத்தான், மறவியுமடியுமாறுமல்
லியற்கைவலிமைகூர்வாயுவின்மைந்தன்.

1874 ஒருமொழியன்னைவாம்பிலாஞானமுற்பவகாரணனென்றுந்
தருமமேதுணைவன்கருணைபேதோழன்சாந்தமேநலனுறுதார
மரியதிண்பொறையேமைந்தன்மற்றிந்தவறுவருமல்லதாருற
வென், றிருவரிலிளையோன்மொழிந்தனன்றன்பெரிதயமாமலர்க்
கிடையெடுத்தே.

1875 பொறையெனப்படுவதாடவர்தமக்குப்பூணெனப்புகலினும்
பொருந்தார், முறையறப்புரிந்தாலங்கணத்தவர்தம்முடித்தலை
துணிப்பதேமுழுப்பூ, ணறைமலர்க்குழலார்தமக்குமெய்யகலா
நாணமேநலஞ்செய்பூணெனினு, நிறையுடைப்பெரும்பூணமளி
வாய்நாணநிகழ்வுறுநிகழ்ச்சியேயன்றே.

1876 விரைந்துபாய்பரிமன்னவரிதம்படமெலிவுற்
றிரந்துவேண்டினுங்கிளைஞருக்கொருபொருளீயார்
பரந்தபோரினிலெதிர்த்தவர்படப்படப்பகழி
துரந்தபோதவர்க்குதவுவர்சொன்னவையெல்லாம்.

துசேலோபாக்கியானம்.

1877 மதலையைப்பெறுநாட்டுன்பம்வளர்த்திடுநாளுந்துன்பம்
விதலைநோயடையிற்றுன்பம்வியன்பருவத்துந்துன்பங்
கதமுறுகாலர்வந்துகைப்பற்றிற்கணக்கிறுன்ப
மிதமுறலென்னாள்சேயாலெற்றைக்குந்துன்பமாமால்.

1878 இளமையிலியற்றுந்தண்டமேற்றுமெய்வெறுப்புத்தானு
முளநடுநடுங்கிப்பின்னியுற்றுறப்பற்றிநிற்பார்
தளர்வறுபருவஞ்சார்ந்தாற்றந்தைதாய்நடுங்கச்சீறி
யளமருதம்மனஞ்செலவ்வாறேயொழுகிநிற்பார்.

1879 செறிதருதன்மனப்படியேசெய்தலொருவற்கினிதா
மறிவுறுக்குங்குருமொழிகேட்டாக்கலஃதினுஞ்சிறப்பா
முறிதருமேதிலர்சொற்கேட்டுஞற்றன்முனிதுயர்மனையாள்
வறியவுரைகேட்டுஞற்றன்மண்ணிறனோர்கெடுதியுறும்.

1880 ஆதலாலிம்மனைவாழ்க்கையகத்தேயிருந்துமுத்திதனைப்
போதவடையத்துணிவதுதான்புணையாமஞ்சுதுயில்பொருப்பைக்
காதன்மிகுதியாற்பெயர்த்தெக்கத்துந்தரங்கக்கடலிடையிட்
டேதமகலவதுபற்றியொருவன்கரையேறுதல்போலும்.

1881 மனையிற்பெருஞ்செல்வத்துறைவோன்மருவுதியானமுறச்சிறிது
நினையிற்காணவருவாரைநேர்சென்றழைத்துத்தழுவிடவும்
வினையத்தினும்விளைத்தும்விரும்பிப்பேசிடவுமவர்க
ணினையப்பட்டதளித்திடவும்பொழுதுகழியுநினைப்பழியும்.

1882 ஒன்றும்பெறுதலிலரெனினுமுற்றபெருஞ்செல்வத்தினர்பாற்
சென்றுகொளுநட்புடையரெனத்தோஞ்சொலற்கேசிலர்சூழ்வர்
மன்றவென்றுயினுமோர்பயன்வழங்கலாகுமெனமூட
றுன்றநறுநெய்க்குடத்தெறும்புசூழ்தல்போலுஞ்சிலர்சூழ்வர்.

1883 உரைத்தகன்முதலிடப்பல்லுயிர்க்கெலாமுணவேயின்று
வரைத்தவவ்வுயிரவ்வாறுவழங்குதலியல்பேயென்னிற்
றரைத்தலைவர்தஞான்றேசலமலம்விடுத்தலுண்டே
விரைத்தபூங்குழலாய்துய்க்குமுணவின்றிமேவுமோகொல்.

புறநானூறு.

1884 உண்டாலம்மவிவ்வுலகமிந்திர
ரமிழ்தமியைவதாயினுமினிதெனத்
தமியருண்டலுமிலரேமுனிவிலர்
துஞ்சலுமிலர்பிறரஞ்சுவதஞ்சிப்
புகழெனினுயிருங்கொடுக்குவர்பழியெனி

னுலகுடன்பெறினுங்கொள்ளலரயர்வில
ரன்னமாட்சியனையராகித்
தமக்கெனமுயலாநோன்றாட்
பிறர்க்கெனமுயலுநருண்மையானே.

1885 *நாடாகொன்றோகாடாகொன்றோ
வவலாகொன்றோமிசையாகொன்றோ
வெவ்வழிநல்லவராடவ
ரவ்வழிநல்லைவாழியநிலனே.

புறப்பொருள்வெண்பாமாலை.

1886 உழுதுபயன்கொண்டொலிநிரையோம்பிப்
பழுதிலாப்பண்டம்பகர்ந்து—முழுதுணர
வோதியழல்வழிப்பட்டோம்பாதவீகையா
னாதிவணிகர்க்கரசு.

1887 மூவருநெஞ்சமரமுற்றியவரவ
ரேவலெதிர்கொண்டுமீண்டுரையா—னேவல்
வழுவான்வழிநின்றுவண்டார்வயலு
ளுழுவானுலகுக்குயிர்.

சூளாமணி.

1888 பூவிரியுருவக்கண்ணிப்பொலங்குழையிலங்குசோதித்
தேவரேயெனினுந்தோன்றச்சில்பகல்செல்பவாயி
லேவரேபோலநோக்கியிகழ்ந்துரைத்தெழுவதன்றே
மாவிரிதானைமன்னுமனிதரதியற்கையென்றான்.

1889 ஒருவனதிரண்டியாக்கையூன்பயினரம்பின்யாத்த
வுருவமும்புகழுமென்றாங்கவற்றினுழ்காத்துவந்து
மருவியவுருவமிங்கேமறைந்துபோமற்றையாக்கை
திருவமர்ந்துலகமேத்தச்சிறந்துபின்னிற்குமன்றே.

## மேருமந்தரபுராணம்.

1890 *உற்றவரேயுறுபகைஞராகுவர்
செற்றவரேசிறந்தாருமாகுவர்
மற்றவரேமறித்திரண்டுமாகுவ
ரற்றவரொருவரிக்காருமில்லையே.

## சீவகசிந்தாமணி.

1891 வாரம்பட்டுழித்தீயவுநல்லவாந்
தீரக்காய்ந்துழிநல்லவுந்தீயவா
மோரும்வையத்தியற்கையன்றோவென
வீரவேனெடுங்கண்ணிவிளம்பினாள்.

1892 பகைவருள்ளமும்பாம்பின்படர்ச்சியும்
வகைசெய்மேகலைமங்கையர்நெஞ்சமு
மிகைசென்மேகத்துமின்னுஞ்செந்நில்லலா
புகைசெய்வேலினீர்போற்றுபுசென்மினே.

1893 திண்பொருளெய்தலாகுந்தெவ்வரைச்செகுக்கலாகு
நண்பொடுபெண்டிர்மக்கள்யாவையுநண்ணலாகு
மொண்பொருளாவதையாவுடன்பிறப்பாக்கலாகா
வெம்பியையீங்குப்பெற்றேனென்னெனக்கரியதென்றான்.

## மணிமேகலை.

1894 உற்றதையுணருமுடலுயிர்வாழ்வுழி
மற்றையவுடம்பேமன்னுயிர்நீங்கிடிற்
றடிந்தெரியூட்டினுந்தானுணராதெனி
னுடம்பிடைப்போனதொன்றுண்டெனவுணர்நீ
போனார்தமக்கோர்புக்கிலுண்டென்ப
தியானோவல்லேன்யாவருமுணர்குவ
ருடம்பீண்டொழியவுயிர்பலகாவதங்
கடந்துசேட்சேறல்கனவினுங்காண்குவை
யாங்கனம்போகியவ்வுயிர்செய்வினை
பூண்டயாக்கையிற்புகுவதுதெளிநீ.

### சீவகசிந்தாமணி.

1895 பனிமதியின்கதிர்பருகுமாம்பல்போன்
முனிமதிமுகத்தியர்முறுவனம்பினார்
துனிவளர்கதிகளுட்டோன்றிநாடகங்
கனியநின்றாடுவர்கடையில்காலமே.

### வளையாபதி.

1896 உண்டியுட்காப்புண்டுறுபொருள்காப்புண்டு
கண்டவிழுப்பொருள்கல்விக்குக்காப்புண்டு
பெண்டிரைக்காப்பதிலமென்றஞாலத்துக்
கண்டுமொழிந்தனர்கற்றறிந்தோரே.

1897 *பள்ளமுதுநீர்பழகினுமீனினம்
வெள்ளம்புதியதுகாணின்விருப்புறாஉங்
கள்ளவிழ்கோதையர்காமனோடாயினு
முள்ளம்பிறிதாயுருகலுங்கொண்ணீ.

1898 *தளிப்பெயற்றண்டுளிதாமரையின்மேல்
வளிப்பெறுமாத்திரைநின்றற்றொருவ
னளிப்பவர்க்காணுஞ்சிறுவரையல்லாற்
றுளக்கிலர்நில்லார்துணைவளைக்கையார்.

1899 *அந்தகனந்தகற்காறுசொல்லல்யாதொக்கு
முந்துசெய்குற்றங்கெடுப்பான்முழுவது
நன்கறிவில்லானதுவறியாதவர்க்
கின்புறவீட்டினெறிசொல்லுமாறே.

### நாரதசரிதை.

1900 வெவ்விடமமுதெனவிளங்குகண்ணினார்க்
கெவ்விடமுடம்பினிலிழிக்கத்தக்கன
வவ்விடமாடவர்க்கமிர்தமாதலா
லுய்விடம்யாதினியுரைக்கற்பாலையே,

### நாலடியார்.

1901 நிலையாமைநோய்மூப்புச்சாக்காடென்றெண்ணித்
தலையாயார்தங்கருமஞ்செய்வார்—தொலைவில்லாச்
சத்தமுஞ்சோதிடமுமென்றாங்கிவைபிதற்றும்
பித்தரிற்பேதையாரில்,

1902 அவமதிப்புமான்றமதிப்புமிரண்டு
மிகைமக்களான்மதிக்கற்பால—நயமுணராக்
கையறியாமாக்களிழிப்புமெடுத்தேத்தும்
வையார்வடித்தநூலார்.

1903 கல்லாதுபோகியநாளும்பெரியவர்கட்
செல்லாதுவைகியவைகலு—மொல்வ
கொடாஅதொழிந்தபகலு முரைப்பிற்
படாஅவாம்பண்புடையார்கண்.

1904 நல்லகுலமென்றுந்தீயகுலமென்றுஞ்
சொல்லளவல்லாற்பொருளில்லைத்—தொல்சிறப்பி
னொண்பொருளொன்றோதவங்கல்வியாள்வினை
யென்றிவற்றானாகுங்குலம்

1905 தெளிவிலார்நட்பிற்பகைநன்றுசாதல்
விளியவருநோயினன்று—லளிய
விகழ்தலிற்கோறலினிதேமற்றில்ல
புகழ்தலின்வைதலேநன்று.

1906 இன்னாசெயினும்விடற்பாலரல்லாரைப்
பொன்னாகப்போற்றிக்கொளல்வேண்டும்—பொன்னொ
நல்லிற்சிதைத்ததீநாடொறுநாடித்தம்
மில்லத்திலாக்குதலால்.

1907 தமரென்றுதாங்கொளப்பட்டவர்தம்மைத்
தமரன்மைதாமறிந்தாராயி—னவரைத்
தமரினுநன்குமதித்துத்தமரன்மை
தம்முளடக்கிக்கொளல்.

1908 வெம்பினிலையுட்கனியினும்வாளைதன்
தீஞ்சுவையாதுந்திரியாதா—மாங்கே
யினந்தீதெனினுமியல்புடையார்கேண்மை
மனந்தீதாம்பக்கமரிது.

1909 கற்றறிந்தநாவினார்சொல்லார்தஞ்சோர்வஞ்சி
மற்றையராவார்பகர்வர்பனையின்மேல்
வற்றியவோலைகலகலக்குமெஞ்ஞான்றும்
பச்சோலைக்கில்லையொலி.

1910 நல்லார்நயவரிருப்பநயமிலாக்
கல்லார்க்கொன்றாகியகாரணந்--தொல்லை
வினைப்பயனல்லதுவேனெடுங்கண்ணாய்
நினைப்பவருவதொன்றில்.

1911 ஓதியுமோதாருணர்விலரோதாது
மோதியனையாருணர்வுடையார்--தூய்தாக
நல்கூர்ந்துஞ்செல்வரிரவாதார்செல்வரு
நல்கூர்ந்தாரீயாரெனின்.

1912 உள்கூர்பசியாலுழைநசைஇச்சென்றார்கட்
குள்ளூரிருந்துமொன்றாற்றாதா--னுள்ளூ
ரிருந்துயிர்கொன்னேகழியாதுதான்போய
விருந்தினனாதலேநன்று.

1913 இழித்தக்கசெய்தொருவனாரவுணலிற்
பழித்தக்கசெய்யான்பசித்தறவன்றே
விழித்திமைக்குமாத்திரையன்றேவொருவ
னழித்துப்பிறக்கும்பிறப்பு.

1914 தம்மையிகழ்வாரைத்தாமவரின்முன்னிகழ்க
வென்னையவரோடுபட்டது--புன்னை
விறற்பூங்கமழ்கானல்வீங்குநீர்ச்சேர்ப்ப
வுறற்பாலயார்க்குமுறும்

1915 என்பாயுகினுமியல்பிலார்பின்சென்று
தம்பாடுரைப்பரோதம்முடையார்--தம்பா
டுரையாமைமுன்னுணருமொண்மையுடையார்க்
குரையாரோதாமுற்றநோய்.

1916 புத்தகமேசாலத்தொகுத்தும்பொருடெரியா
ருய்த்தகமெல்லாநிரப்பினு—மற்றவற்றைப்
போற்றும்புலவரும்வேறேபொருடெரிந்து
தேற்றும்புலவரும்வேறு.

1917 நல்லவைநாடோறுமெய்தாரறஞ்செய்யா
ரில்லாதார்க்கியாதொன்றுமீகலா—ரெல்லா
மினியார்தோள்சேராரிசைபடவாழார்
முனியார்கொறாம்வாழுநாள்.

1918 கற்றனவுங்கண்ணகன்றசாயலுமிற்பிறப்பும்
பக்கத்தார்பாராட்டப்பாடெய்துந்—தானுரைப்பின்
மைத்துனர்பல்கிமருந்திற்றணியாத
பித்தனென்றெள்ளப்படும்.

1919 தலையேதவமுயன்றுவாழ்தலொருவர்க்
கிடையேயினியார்கட்டங்கல்—கடையே
புணராதென்றெண்ணிப்பொருணசையாற்றம்மை
யுணரார்பின்சென்றுநிலை

1920 செந்நெல்லாலாயசெழுமுளைமற்றுமச்
செந்நெல்லேயாகிவிளைதலா—லந்நெல்
வயனிறையக்காய்க்கும்வளவயலூர
மகனறிவுதந்தையறிவு.

1921 யாஅரொருவரொருவர்தம்முள்ளத்தைத்
தேருந்துணைமையுடையவர்—சாரற்
கனமணிநின்றிமைக்குநாடகேண்மக்கண்
மனம்வேறுசெய்கையும்வேறு.

## நான்மணிக்கடிகை.

1922 பெருக்குகநட்டாரைநன்றின்பாலுய்த்துத்
தருக்குகவொட்டாரைக்காலமறிந்தே
யருக்குகயார்மாட்டுமுண்டிசுருக்குக
செல்லாவிடத்துச்சினம்.

1923 இளமைப்பருவத்துக்கல்லாமைகுற்றம்
வளமிலாப்போழ்தத்துவள்ளன்மைகுற்றங்
கிளைஞரில்போழ்திற்சினங்குற்றங்குற்றந்
தமரல்லார்கையகத்தூண்.

1924 *எள்ளற்கவென்றுமெளியரென்றென்பெறினுங்
கொள்ளற்ககொள்ளார்கைமேற்பட—வுள்சுடினுஞ்
சீறற்கசிற்றிய பிறந்தாரைக்கூறற்க
கூறல்லவற்றைவிரைந்து.

1925 *கள்ளிவயிற்றினகில்பிறக்குமான்வயிற்றி
னொள்ளரிதாரம்பிறக்கும்பெருங்கடலுட்
பல்விலையமுத்தம்பிறக்குமறிவார்யார்
நல்லாள்பிறக்குங்குடி.

1926 *நாற்றமுரைக்குமலருண்மைகூறிய
மாற்றமுரைக்கும்வினைநலந்தூக்கி
னகம்பொதிந்ததீமைமனமுரைக்குமுன்ன
முகம்போலமுன்னுரைப்பதில்.

இன்னாநாற்பது.

1927 பகல்போலுநெஞ்சத்தார்பண்பின்மையின்னா
நகையாயநண்பினார்நாரின்மையின்னா
விகலியெழுந்தவரொட்டின்னாவின்னா
நயமின்மனத்தவர்நட்பு.

ஆசாரக்கோவை.

1928 *ஈன்றாண்மகடன்னுடன்பிறந்தாளாயினுஞ்
சான்றோர்தமித்தாவுறையற்கவைம்புலனுந்
தாங்கற்கரிதாகலான்.

1929 *விரைந்துரையார்மேன்மேலுரையார்பொய்யாய
பரந்துரையார்பாரித்துரையா—ரொருங்கெனைத்துஞ்
சில்லெழுத்தினாலேபொருளடங்கக்காலத்தாற்
சொல்லுகசெவ்வியறிந்து.

1930 *அளையுறைபாம்புமரசுநெருப்பு
முளையுறைசீயமுமென்றிவைநான்கு
மிளையவெளியபயின்றனவென்றெண்ணி
யிகழினிழுக்கந்தரும்.

## அறநெறிச்சாரம்.

1931 *தன்சொல்லேமேற்படுப்பான்றண்டதடிபிணக்கன்
புன்சொல்லேபோதரவுபார்த்திருப்பா—னின்சொல்லை
யோராதிருந்துங்கேளாதவேழையெனவிவர்கட்
கான்றவர்கள்கூறாரறம்.

1932 *பிறர்க்கின்னாசெய்தலிற்பேதைமையில்லை
பிறர்க்கின்னாதெல்லாம்பேர்ட்மது—தனக்கின்னா
வித்திவினைத்துவினைவிளைப்பக்காண்டலிற
பித்துமுளவோபிற.

1933 *பெண்விழைவார்க்கில்லைபெருந்தூய்மைபேணாது
ஊண்விழைவார்க்கில்லையுயிரோம்ப—லெப்பொழுது
மண்விழைவார்க்கில்லைமறமின்மைமாணாது
†தன்விழைவார்க்கில்லைதவம்

1934 *ஞாயவாய்ச்சொல்லாடல்வன்மையுந்தண்பக
ளாயபொழுதாற்றமாற்றலுங்—காய்விடத்து
வேற்றுமைகொண்டாடாமெய்ம்மையுமிம்மூன்றுஞ்
சாற்றுங்காற்சாலத்தலை.

1935 *தானேதனக்குப்பகைவனுநட்டானுந்
தானேதனக்குமறுமையுமிம்மையுந்
தானேதான்செய்தவினைப்பயன்றுய்த்தலாற்
றானேதனக்குக்கரி.

1936 *செய்வினையல்லாற்சிறந்தார்பிறரில்லை
பொய்வினைமற்றைப்பொருளெல்லா—மெய்வினையிற்
றாயார்மனைவியார்தந்தையார்மக்களார்
நீயார்நினைவாழிநெஞ்சு.

† தம்விழைவார் - பாடபேதம்.

1943 *மடல்பெரிதுதாழைமகிழினிதுகந்த
முடல்சிறியவென்றிருக்கவேண்டா—கடல்பெரிது
மண்ணீருமாகாததனருகேசிற்றூற
லுண்ணீருமாகிவிடும்.

1944 *நஞ்சுடைமைதானறிந்துநாகங்கரந்துறையு
மஞ்சாப்புறங்கிடக்குநீர்ப்பாம்பு—நெஞ்சிற்
கரவுடையார்தம்மைக்கரப்பர்கரவார்
கரவிலாநெஞ்சத்தவர்.

நல்வழி.

1945 *தண்ணீர்நிலநலத்தாற்றக்கோர்குணங்கொடையாற்
கண்ணீர்மைமாறாக்கருணையாற்—பெண்ணீர்மை
கற்பழியாவாற்றாற்கடல்சூழ்ந்தவையகத்து
ளற்புதமாமென்றேயறி.

1946 *நீறில்லாநெற்றிபாழ்நெய்யில்லாவுண்டிபா
யாறில்லாவூருக்கழகுபாழ்—மாறி
லுடற்பிறப்பில்லாவுடம்புபாழ்பாழே
மடக்கொடியில்லாமனை.

1947 *உண்பதுநாழியுடுப்பதுநான்குமுழ
மெண்பதுகோடிநினைந்தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர்குடிவாழ்க்கைமண்ணின்கலம்போலச்
சாந்துணையுஞ்சஞ்சலமேதான்.

1948 *இழுக்குடையபாட்டிற்†கிசைநன்றுசால
வொழுக்கமுயர்குலத்தினன்று—வழுக்குடைய
வீரத்தினன்றுவிடாநோய்பழிக்கஞ்சாத்
தாரத்தினன்றுதனி.

† இசை - சொல்.

1949 *வெட்டெனவைமெத்தெனவைவெல்லாவாம்வேழத்திற்
பட்டுருவுங்கோல்பஞ்சிற்பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்குநெக்குவிடாப்பாறைபசுமரத்தின்
வேருக்குநெக்குவிடும்.

## நீதிவெண்பா.

1950 *அரிமந்திரம்புகுந்தாலானைமருப்பும்
பெருகொளிசேர்முத்தும்பெறலா—நரிநுழையில்
வாலுஞ்சிறியமயிரெலும்புங்கத்தபத்தின்
றோலுமல்லால்வேறுமுண்டோசொல்.

1951 *பகைசேருமெண்ணான்குபற்கொண்டேநன்று
வகைசேர்சுவையருந்துமாபோற்—றொகைசேர்
பகைவரிடமெய்யன்புபாவித்தவாற்
சுகமுறுதனல்லோர்தொழில்.

1952 *காந்தனில்லாதகனங்குழலாள்பொற்பவமாஞ்
சாந்தகுணமில்லார்தவமவமா—மேந்திழையீ
ரன்னையில்லாப்பிள்ளையிருப்பதவமவமே
துன்னெறியில்லாருண்சுவை.

1953 *பெற்றமையுமென்னும்பெரியோரும்பெற்றபொருள்
மற்றமையுமென்றேமகிழ்வேந்து—முற்றியநன்
மானமில்லாவில்லாளுமானமுறுவேசியரு
மீனமுறுவாரிவர்.

1954 *கற்றோர்கனமறிவர்சற்றோரேகற்றறியா
மற்றோரறியார்வருத்தமுறப்—பெற்றறியா
வந்திபரிவாய்மகவைப்பெறுந்துயர
நொந்தறிகுவாளோநுவல்.

1955 *அன்னைதயையுமடியாள்பணியுமலர்ப்
பொன்னினழகும்புவிப்பொறையும்—வன்னமுலை
வேசிதுயிலும்விறன்மந்திரிமதியும்
பேசிலிவையுடையாள்பெண்.

1956 *தன்னையளித்தாடையையம்மனைத்துருவின்
பன்னியரசன்பயிறேவி—தன்மனையைப்
பெற்றாளிவளாவர்பேசிலெவனுக்கு
நற்றாயென்றேநவில்.

1957 *வாவியுறைநீரும்வடநிழலும்பாவகமு
மேவனையகண்ணாரிளமுலையு—மோவியமே
மென்சீதகாலத்து வெம்மைதரும்வெம்மைதனி
லின்பாருஞ்சீதளமாமே.

1958 *அத்திமலருமருங்காக்கைவெண்ணிறமுங்
கத்துபுனன்மீன்பதமுங்கண்டாலும்—பித்தரே
காணார்தெரியற்கடவுளருங்காண்பாரே
மாணார்விழியார்மனம்.

1959 *ஆயுமலர்த்தேன்வண்டருந்துவதுபோலிரப்போ
ரீயுமவர்வருந்தாதேற்றலறந்—தூயவிளம்
பச்சிலையைக்கீடமறப்பற்றியரிப்பதுபோ
லச்சமுறவாங்கலகம்.

1960 *வல்லவர்பாற்கல்விமதமாணவம்போக்கு
மல்லவர்பாற்கல்வியவைபோக்கு—நல்லிடத்தில்
யோகம்பயில்வாருயர்ந்தோரிழிந்தோர்கள்
போகம்பயில்வார்புரிந்து.

1961 *போற்றுகுருகினையும்பொன்னாசையோர்க்கில்லை
தோற்றுபசிக்கில்லைசுவைபாகர்—தேற்றுகவி
நேசற்கிலைசுகமுநித்திரையுங்காமுகர்தம்
மாசைக்கிலைபயமானம்.

1962 *பெண்ணுதவுங்காலைபிதாவிரும்பும்வித்தையே
யெண்ணிறனம்விரும்புமீன்றதாய்—கண்ணிடையிற்
கூறியநற்சுற்றங்குலம்விரும்புங்காந்தனது
பொழுதுதான்விரும்பும்பெண்,

1963 *கற்றைக்குழலார்கவினெல்லாமோர்மகவைப்
பெற்றபொழுதேபிரியுமே—கற்றருளை
வேட்டபெரியோர்பெருமையெலாம்வேறொன்றைக்
கேட்டபொழுதேகெடும்.

1964 *உற்றமறையகத்திலுய்க்குமவனுத்தமனே
மற்றம்மறைபகர்வோன்மத்திமனே—முற்றிமறைபி
ரத்தமுறலாற்புகல்வானதமனென
வித்தகநூலோதும்விரித்து.

## தனிப்பாடல்.

1965 *புகழுந்தருமநெறிநின்றோர்பொய்காம
மிகழுஞ்சினஞ்சேர்தமில்லோர்—திகழுங்கலைக
ளெல்லாமுணர்ந்தோரிருந்தவிடமன்றோ
நல்லாயவைக்குநலம்.

1966 *நலனடக்கஞ்செம்மைநடுவுநிலைஞானங்
குலனென்றிவையுடையோர்கோதில்—புலனில்லோர்
சென்றமொழிந்தனவுங்கேட்போர்செறிந்தவிட
மன்றேநிறைந்தவவை.

1967 *ஒன்றாகக்காண்பதேகாட்சிபுலனைந்தும்
வென்றான்றன்வீரமேவீரமா—மென்றானுஞ்
சாகாமற்கற்பதேகல்விதனைப்பிற
ரேவாமலுண்பதேயூண்.

1968 *வெள்ளிலைவேலற்பநிழன்மெத்தவேமுட்டைக்குத்
துள்ளுநறுவாழைபலாச்சோலைக்கண்—மெள்ள
வடுக்கவொட்டாவாறுபோலற்பர்சிலர்கூடிக்
கொடுக்கவொட்டார்தாமுங்கொடார்.

1969 *புறந்தர்திருளரியப்பொன்னேமியுய்த்துச்
சிறந்தவொளிவளர்க்குந்தேரோன்—மறைந்ததனை
புறவாழிசூழ்ந்தபுவனத்தேதோன்றிப்
பிறவாதுவாழ்கின்றார்யார்.

1970 *எண்ணும்பயன்றாக்காதியார்க்கும்வரையாது
மண்ணுலகில்வாயனருள்வளர்க்குந்—தண்ணறுந்தேன்
பூத்தளிக்குந்தாரோய்புகழாளர்க்கெவ்வுயிருங்
காத்தளிக்கையன்றேகடன்.

1971 *வெய்யகுரற்றோன்றிவெஞ்சினவேறுட்கொளினும்
பெய்யுமழைமுகிலைப்பேணுவரால்—வையத்
திருள்பொழியுங்குற்றம்பலவெனினும்யார்க்கும்
பொருள்பொழிவார்மேற்றேபுகழ்.

1972 *எற்றேகொடிமுல்லைதன்னைவளர்த்தெடுத்த
முற்றிழையாள்வாடமுறுவலிக்கு—முற்று
முடியாப்பரவைமுழங்குலகத்தென்றுங்
கொடியார்க்குமுண்டோகுணம்.

1973 *ஆரவடமுமதிசீதசந்தனமு
மீரநிலவுமெரிவிரவும்—பாரிற்
றுதிவகையான்மேம்பட்டதுப்புரவுந்தத்தம்
விதிவகையால்வேறுபடும்.

1974 *கோவலர்வாய்வேய்ங்குழலேயன்றிக்குரைகடலுங்
கூவித்தமியோரைக்கொல்லுமாற்—பாவாய்
பெரியோரும்பேணாது செய்வரேபோலுஞ்
சிறியோர்பிறர்க்கியற்றுந்தீங்கு.

1975 *தலையிழந்தானெவ்வுயிருந்தந்தான்பிதாவைக்
கொலைபுரிந்தான்குற்றங்கடிந்தா—னுலகிற்
றனிமுதன்மைபூண்டுயர்ந்தோர்வேண்டுவரேற்றப்பாம்
வினையும்விபரீதமாம்.

திருக்குறள்.

1976 அளித்தஞ்சலென்றவர்நீப்பிற்றெளித்தசொற்
றேறியார்க்குண்டோதவறு.

1977 இன்னாதினனில்லூர்வாழ்தலதனினு
மின்னாதினியார்ப்பிரிவு.

1978 துப்பினெவனாவர்மற்கொறுயர்வரவு
நட்பினுளாற்றுபவர்.

1979 வாழ்வார்க்குவானம்பயந்தற்றால்வீழ்வார்க்கு
வீழ்வாரளிக்குமளி.

1980 நாங்காதல்கொண்டார்நமக்கெவன்செய்பவோ
தாங்காதல்கொள்ளாக்கடை.

1981 நோதலெவன்மற்றுநொந்தாரென்றஃதறியுங்
காதலரில்லாவழி.

ஆகச்செய்யுள் 181, ஒழிபு முற்றிற்று.

---

## ௫௧-அதி. கற்பனை.

---

### கந்தபுராணம்.

1982 மாறடுமள்ளருய்ப்பமருதத்தினிறைந்துவிஞ்சி
யேறியநாரமீட்டுமிருங்கடனோக்கிச்சென்ற
வேறுகொள்புலனைவென்றோர்மேலைநன்னெறியுய்த்தாலுந்
தேறியவுணர்விலாதோர்செல்வுழிச்செல்வரன்றே.

1983 ஒள்ளிதாகியதலைமையிற்பிறந்துளோருலக
மெள்ளுநல்குரவெய்தலாலிழிந்தவர்கண்ணுங்
கொள்ளுமாறொருபயன்குறித்தேகல்போற்கொடிய
கள்ளிதன்புடைநீழலுக்கொதுங்குவகரிகள்.

1984 முன்புதிண்டிறல்வாகுவின்வாகுவின்முழக்கத்தை
யன்பினுடியவமரர்களளவைதீர்மகிழ்வெய்திப்
பின்புசூர்மகன்சிலையொலிகேட்டலும்பேதுற்றே
யின்பதுன்பங்களொருவழிக்கண்டனமிவணென்றார்.

1935 ஆனபான்மைசேர்பகழியின்படலிகையவுணன்
சோனைவாளியாற்றுணித்திடைவீட்டியேசுரர்தஞ்
சேனைகாவலற்கண்டனன்வினைத்தளைசிந்தி
ஞானநாயகத்தானைக்காணுநற்றவர்போல்.

1986 படியிலா தமர்பண்ணவன்றேர்மிசைக்
கொடியதாய்நின்றுகுக்குடங்கூயது
கடியதானவர்கங்குல்புலர்ந்திடும்
விடியல்வைகறைவேலையைக்காட்டல்போல்.

1987 மாட்சியினுலவுசேனைவடிவெலாம்விடுத்துத்தொல்லை
மாட்சியினுயிரேதாங்கிமலைதுமென்றுன்னிப்பின்னுஞ்
சூட்சியின்வளைந்தவாபோற்சேரதிவேற்குமரன்றன்பாற்
சூட்சியின்மேவிற்றம்மாதுயநுண்டுகளீட்டம்.

1988 பங்கயம்வதனமென்பார்பாசிலைக்கூந்தலென்பார்
செங்கிடையதரமென்பார்புள்ளொலிசெப்பலென்பார்
சங்கினைக்களமேயென்பார்தடாகமுமொருத்தியல்ல
மங்கையர்பலரேயென்பார்திரைகளைமணித்தூசென்பார்.

1989 தூயதன்றாகியபுனலெலாநல்கியேசூழ்ந்தமெதங்கின்
காயின்வந்திடுபயன்கொள்ளுவார்போற்சிலகாளைமார்க
ளாயதண்டேறலைபரிவைமார்றுகருவானருளியன்னோர்
வாயின்வந்தூறுமெல்லமிர்தினைக்கொள்வதற்குள்ளம்வைத்தார்.

1990 மானிலமெலாந்தனைவழுத்தவருமன்னற்
கூனமுறுகாலைதனிலொண்குருதிவாரி
வானமுகில்கான்றனையடாண்டதொன்மரத்தின்
மேனிதருசெய்யபலவீழின்விரிமாலை.

1991 பொய்கொலையாற்றிய பூரியருக்கார்
செய்தவர்நன்றிசெறிந்துளரேனுங்
கைகெழுஞாளிகளைகறித்துண்ட
மைகெழுதானவர்மாண்டிடும்யாக்கை.

1992 எருத்தமேலிடிக்கும்பாகரிசைக்குறிகொள்ளாதாகி
மருத்தினும்விசைமேற்கொண்டுவன்கரித்தண்டநோக்கி
யுருத்திடுகொடிஞ்சொற்றுபரொறுக்கவுமொருவன்மாட்டே
கருத்துறுகணிகைநெஞ்சிற்போவதோர்கடுங்கண்வேழம்.

1993 பொற்பகல்சிகரியுட்பொருந்திவாழ்பவ
ரற்பகனுகருமினைவரைநுங்குமான்
முற்பகலோர்பழிமுடிக்கின்மற்றது
பிற்பகறமக்குறும்பெற்றியென்னவே.

1994 மெய்ந்நெறியுணர்கிலார்வெறுக்கைபெற்றது
துன்னியகிளைக்கொருதுன்பமாதல்போ
லொன்னலன்விடுங்கணையுலப்பின்றேடலாற்
றன்னுறுபடைகளைத்தானுங்கொன்றவே.

## திருவிளையாடற்புராணம்.

1995 இழிந்தமாந்தர்கைப்பொருள்களுமிகபரத்தாசை
கழிந்தயோகியர்கைப்படிற்றூயவாய்க்களங்க
மொழிந்தவாறுபோலுவரியுண்டுவர்கெடுத்தெழிலி
பொழிந்தநீரமுதாயினபுவிக்கும்வானவர்க்கும்.

1996 அன்புறுபத்திவித்தியார்வநீர்பாய்ச்சுந்தொண்டர்க்
கின்புருவானவீசனின்னருள்விளையுமாபோல்
வன்புறுகருங்கான்மள்ளர்வைகலுஞ்செவ்விநோக்கி
நன்புலமுயன்றுகாக்கவிளைந்தனநறுந்தண்சாலி.

1997 ஆறுசூழ்கழிப்புலால்பொறாதசைந்துகூன்கைதை
சோறுகால்வனவாம்பல்வாய்திறப்பனதுணிந்து
கூறுவாரெனக்குவளைகண்காட்டிடக்கூடித்
தூறுவாரெனச்சிரித்தலர்தூற்றுவமுல்லை.

1998 நட்டவர்க்கிடுக்கணெய்தநன்றிகொன்றவர்போற்கையில்
வட்டவாய்த்தொடியுஞ்சங்குமருங்குசூழ்கலையுநீக்க
விட்டபோதசிலம்பிட்டாங்கேநன்றியினிகவார்போற்கா
லொட்டியேகிடப்பநின்றுருகுத்தபூங்கொம்பனார்.

1999 கல்லார்கண்போற்கலங்கிக்கலைமாண்டகேள்வி
வல்லார்கவிபோற்பலவான்றுறைதோன்றவாய்த்துச்
செல்லாறுதோறும்பொருளாழ்ந்துதெளிந்துதேயத்
தெல்லாரும்வீழ்ந்துபயன்கொள்ளவிறுத்ததன்றே.

2000 ஆயிடையலகைத்தேருமடைந்தவர் வெயர்வுமன்றித்
தூயநீர்வறந்தவந்தச்சுடுபுலந்தோய்ந்தகாலு
மீயுயர்மதிநிலாவும்வெய்யவாய்ச்சுடுநெல்லோருந்
தீயவர்தம்மைச்சேர்ந்தாற்றீயவராவரன்றே.

2001 இரக்கமில்கொடியசெல்வர்மருங்குபோயிரப்பார்போல
வுருப்பமொண்டிறைக்குங்கள்ளிநீழல்புக்கொதுங்குவாருந்
தருக்கறவிரப்பாலெய்த்தோர்தம்மினும்வறியர்பாற்சென்
றிரப்பர்போலிலைதீந்துச்சமாநிழலெய்துவாரும்.

## காஞ்சிப்புராணம்.

2002 ஒருவருக்கொருசெல்லலுற்றுழி
தருகுளார்க்குமடுப்பது திண்ணமே
கருவிமள்ளர்கதிர்க்குலைதன்னொடும்
பருமென்பூக்களும்பறறியரிகுவார்.

2003 உடலினுயிபிரிந்தெனவூழ்வினைத்
தொடர்புநீங்குவதொப்பத்தொகுத்தநெற்
படலைவைபினினீங்கப்பகட்டின
மடையவுந்தொடர்நீங்கியகலுமால்.

2004 அம்மருதவைப்பினையடுத்தகழிநெய்தல
மம்மர்விடமாலமாணுக்குதவுமாற்று
னம்மினமெனப்பொய்மொழிநாடியுரைகைதை
சும்மையவளக்கரொடுசூழ்ந்துறவுகொள்ளும்.

2005 தாமுமொருபயப்படார்பயப்படுவார்தம்மையுந்தம்போற்
செய்வார்போற், காமரனிறுகாரமற்கழிப்பூமேலடுக்கதுறுங்கணி
தேனூற்று, மாமிதனையறிந்துவெகுண்டெழுந்தென்னவணிவேங்கைக்
குடுமிதன்னை, காமநீள்கடல்பவளக்காட்டிப்பற்றியிநிலமு
மோர்பால்.

2006 நறுமலர்ப்பங்கயங்களையுநாரியர்
கறுவொடுமுள்ளரைக்காப்புபற்றலுந்
தெறுகரங்கிழியப்புண்செய்யுமேதமக்
கிறுதிசெய்வார்க்கெவரிடரிழைத்திடார்.

2007 பறிதாக்களைந்தெறிபாவைமாரையம்
மறிபுனற்குவளைகால்வளைத்துப்பாம்பெனப்
பொறிவெருவுறச்செயும்புடைப்பின்மொய்ம்பிலாச்
சிறிபருந்தம்மினுந்தீங்கிழைப்பரே.

2008 கொள்ளைபோய்நனிவறங்கூர்ந்தகாலையும்
வள்ளியோர்விருந்தினர்வாடக்காண்பரோ
கள்ளறுமலர்வளமிழந்துங்கார்வயல்
வெள்ளனமகிழமீன்விருந்துநல்குமால்.

2009 ஈன்றெடுத்தோர்குணமகவுக்கியையுமுறைப்படிவித்திற்
றோன்றுமுளைமுன்விளர்த்துப்பின்பசந்தொடர்பினா
லான்றசெழுங்கதிர்களுமுன்றூவெள்ளையாயெழுந்து
மான்றுமரகதமேனிவாய்த்துமடல்கிழித்தெழுமால்.

2010 பேதைமையிலாடவர்முன்வளைவின்றிப்பெதும்பைமையின்
மேதகச்சற்றெனவணங்கிமங்கைமையின்மிகநாணு
மாதரைப்போற்பைங்கூழின்மன்னனெதிர்கதித்தெழுந்த
வேதமிலாக்கதிர்முதிர்ந்துவரவரக்கீழிறைஞ்சுமால்.

2011 உருத்திட்பமுறுக்காலைத்தலைநிமீஇயுற்றதற்பின்
றருக்கற்றுநனிவணங்கிப்பழுத்தகதிர்த்தடஞ்சாலி
பெருக்கத்துவேண்டுமாற்பெரும்பணிவுமிகச்சிறிய
சுருக்கத்துவேண்டுமுயர்வெனுமொழியின்சுவைதேற்றும்.

2012 கைப்படையிழந்தவரெதிர்ந்தவர்கடாவு
மெய்ப்படுபெரும்படைபறித்தெதிர்விடுப்பா
ரெப்பொருளுமற்றழியுமேதிலர்கணல்கு
மப்பொருள்கொளேங்களெனுமானமுடையார்போல்.

2013 சென்னெறிநோக்கியமைந்தாங்கொழுகானளவறிகில்லான்
றன்னைவியந்தான்விரைந்துகெடுமெனல்சத்தியங்கண்டா
மன்னியமேருவரையோடிகலிவளர்ந்தெழுவிந்த
முன்னுளதோற்றமும்வீறுமுழுதுமிழந்தமன்றே.

2014 அலைக்காகமலைச்சாரற்பலாச்சுளையைக்கவ்வியெழுந்தாக்கர்
கோமான், சிலைத்தாசாதிமனையைக்கொண்டகன்றுலெனவங்கஞ்
சேருமந்நா, ணிலைப்பானமதிலிலங்கைமிசைத்தாவு
மனுமனைப்போனீள்வான்மந்தி, மலைப்பானின்றலைத்தோணி
பாய்ந்துழக்கிமீண்டெய்தும்வாழ்வுமங்கண்.

2015 கொடும்பாவர்கழியுழக்கக்குதித்தெழுமீனுய்ச்சியர்பாற்
குடத்துள்வீழ்ந்தங், கடும்பயத்தோடலமருமற்றவர்கடையுந்
தயிரோதைக்கலமந்தோடி, யொடுங்குழயல்கைதையினு
ளடங்கியங்கட்கடலொலிகேட்டுள்ளமாழ்குங், கடுங்கருமத்தொட
ரந்தோயாங்குறினும்விடாதெனனக்காட்டுமோர்பால்.

016 குடமுலைக்கெதிரென்றேறுனுங் தரும்பையையெகுண்டுமின்னார்
பொடிபிடியுலக்கைமீப்போய்ப்புடைத்தனமீளாமுன்ன
முடிமிசையதிரத்தாக்கிச்சிந்துமுப்புடைக்காய்த்தெங்கிங்
கிடரிடர்க்கெதிர்செய்வோரின்வியத்தகவெங்குமோங்கும்.

017 வரியளிமுரலாவாடாமாலையவிமையாநோக்க
தரைமிசைத்தோயாத்தாளசித்திரந்தயங்குகாட்சி
வரைவிலாமகளிரின்னோர்மாணலம்வேட்டுவானிற்
சுரர்களுமெய்திச்செவ்விபார்த்துறைதோற்றமொக்கும்.

018 விற்றிடுமெல்குறன்னைமீளவுந்தமதேயாக்கி
மற்றையாரும்விற்கும்வரைவிலார்வீதியிச்சீர்
கற்றிலாவணிகமாக்களாவணக்கவினைநோக்கிப்
பற்றுவெண்டாளக்கோவைப்பத்தியாற்சிரிக்குமன்றே.

019 இருமைவாணிபத்திற்கூர்த்தமதியருமிறும்பூதெய்த
வருவமாமின்பந்தன்னையிம்மியினளவுமேறு
துருவமாம்பொருளுக்கேற்பநிறுத்துவிற்றொழுகவல்ல
விருமணப்பெண்டிர்தம்முட்டருக்கிவாழிருக்கைவீதால்,

2020 செய்வினையினைத்தந்தன்பாற்சேர்த்துவைத்துயிர்க்குப்பின்ன
ரவ்விறையாணையாற்றுலளித்திடுமாயையேபோற்
கொய்வளம்வருவமுற்றுங்கொண்டுபிறுய்கர்மாறப்
பௌவநீருலகுக்கெல்லாமுதவுவபைம்பொன்மாடம்.

2021 செய்பதிண்புயத்தெழிவினைக்கவர்ந்தமைதெரிந்து
வெய்யமாந்தர்கள்வெதும்புறப்பண்முறைதாக்க
வையவோவெனவலறுவபோலணிமுழவ
மையவேலையுஞ்சமழ்ப்புறவயின்றெறுங்கறங்கும்.

2022 தேங்குழூடலின்மாதரார்பறித்தெறிசெங்கே
ழோங்குபன்மணியவரடிவருந்திநைந்துழைய
வாங்குநாடொறும்பெதுறுத்தவிர்வனகொடிதாத்
தாங்கள்செய்வினைதங்களுக்கேபகையாமே.

2023 காமனைமுனிந்துநெடுஞ்சடைமுடித்துக்கவின்றகல்லாடைமேற்
புனைந்தி, யாமெலாம்வழுத்துந்துறவியென்றிருந்துமொருத்தித
னிளமுலைச்சுவடு, தோமுறக்கொண்டாரெனச்சிறையிடல்போற்
சுடர்மணக்குகையுளேகம்பத், தோமொழிப்பொருளையடக்கி
யானந்தமுறுநர்வாழிடம்பலவுளவால்.

2024 மாலைகாரியவுருக்களுமெம்பிரான்வடிவ
மாயவேலவையருண்மயமாகுமற்றதுபோற்
பேயனேன்பிதற்றுரையுமேகம்பர்தம்பெருமைத்
தூயகாதையுள்ளுறுதலாற்றுகளறத்தோன்றும்.

2025 விலங்கிவீழருவித்தாரைவெறுவேறுகவோடிக்
குலாதிப்பாலிவைப்பினேகமாய்க்கூடுந்தோற்ற
மலவில்பல்வழியுமூதுராணிமையினென்றுமாறும்
பலபலமதமுமீற்றினொருவழிப்படலும்போலும்.

2026 முருகவேட்கிடுதூமமோம்புறமுளியகில்சந்
தருவலாரழற்பெய்துபுன்பயிர்விளைத்துவப்பார்
பெருவளந்துறந்தார்தொறுமிடுபலிபெறும்
பொருவில்வாழ்க்கையர்தஞ்செயல்போன்மெனப்பொருப்பர்.

2027 ஏறுதன்னுடல்வருத்தியபகைமையெண்ணாது
தூறுபன்பணிமாமுதற்பொறையெலாந்தொலைத்த
வேறுநன்றியேகடைப்பிடித்திதைவியன்பொருப்பர்க்
கூறுநல்வளம்விளைத்திடுமுயர்ந்தவர்செயல்போல்.

2028 இருசுடர்ப்பெருஞ்சிலைகளினியன்றமாளிகைக
ளொருகுவெங்கதிர்தடவரச்சுடுகனலுமிழு
மருகுதண்கதிர்தடவரக்குளிர்புனலளிக்கு
மருவினோர்குணம்பிடிபடல்வையகத்தியல்பே.

2029 வலியனவெவற்றினுள்ளும்வலியரென்பதற்குச்சான்று
விலகொளிமேருவாங்கிக்குழைத்தமைவிளக்கமற்றை
மெலியனவெவற்றினுள்ளுமெலியரென்பதற்குச்சான்று
குலவுமென்முலைக்குச்சாலக்குழைந்தமைவிளக்கிற்றம்மா.

2030 பழியினீங்கிநன்கீட்டியபசும்பொருள்சிறிதுங்
கழிபடாதுநல்வழிப்பயன்படுவதுகடுப்பக்
கொழிதிரைச்சுவைப்பாலியின்குளிர்புனன்முழுதும்
வழுவுறாதுகால்வழிச்சென்றுவளவயனிறைக்கும்.

2031 அணிமலரழகேநோக்கியகழியுளிழிகின்றோருந்
திணியுமுட்கொடுமைநோக்கிச்சேயிடைவிலகுவோருங்
கணிகையர்கோலநோக்கிக்காதலித்தகப்பட்டோரும்
பிணியுமுட்கருத்துநோக்கிவெரீஇப்பெயர்ந்தகல்கின்றோரும்.

## தணிகைப்புராணம்.

2032 குறைத்தபூங்கதிர்ச்சாலிகொடுபோந்துகளனெங்குஞ்
செறித்திதனைப்பலவாற்றாற்செலுத்தறத்தினுயிர்துறக்க
மிறப்பதுவேண்டாவிதனினெய்துவாமெனவுளத்தி
னறுத்தவர்போலுழவரெலாமைதுநெடிப்போரிடுவார்.

2033 விண்ணுறத்துமெக்கிவர்ந்தாரியன்றுறக்கத்தவர்மகளி
ரன்னன்முலைமுயக்கன்றியறியாமையெதிர்நோக்கிப்
பண்ணரியதவத்தானப்பயப்பாட்டினொடும்விளங்கு
முண்ணகலாறிஞரெனவல்லையவணுறுதிழிவார்.

2034 குரும்பைமென்முலைதோன்றமுன்பாளையங்குரூஉத்துகின்
மிசைபோர்த்திட், டரும்பிமுன்வருகாலதுநீவுவதழகெனப்
புறவத்த, விரும்புமுல்லைகள்சிரிப்பநீர்ப்பழனத்துவிறந்தகெட்
டிலைத்தெங்கு, பெரும்பழங்களாற்றளவிணைச்சிலைதத்திடும்
பிணக்குளதொருபாங்கர்.

2035 நன்பொருளினுக்கியையநன்றுவிளையாடி
யின்புதவும்வேசையரிறைஞ்சுமடியாருக்
கன்பினளவைக்கியையவாருள்சுரக்கு
மின்புரைநதிச்சடிலவித்தகனிகர்த்தார்.

2036 வாய்வதாகியபொருளினைவல்விரைந்தன்றோ
வாய்வதாய்கிலராக்குவான்புகுந்தழிப்பார்போற்
காய்வதாகியதிறத்திறுற்கதழ்ந்துதாயிடத்து
வீவதாக்கியுண்ணுதுபோதுவவிளவேங்கை.

2037 குருவியோப்புதங்கவண்கலாற்குலைந்திருவினத்தோ
ருருவவாசினியுக்கனலசும்பினநிலத்து
மருமலர்ப்பதம்வழுக்கிவீழ்ந்தினைவர்மாணையா
ரொருபொருட்கிடர்செயினவைமறுகணத்துறுகொல்.

2038 ஆழ்ந்தநீரலகாதிகளளித்திடப்படுவ
வாய்ந்தமாமணியாதியவயின்றொறுமிறைவ
தாழ்ந்தவாயினுமரியவேலுயர்ந்தவாய்த்தகையும்
வீழ்ந்தவாயினுமெளியவேற்றாழ்ந்தவாய்விடுமே.

2039 தூதுணம்பறவைகடுதுண்டோவறக்
காதலந்துணையொடுகெழுமிப்புல்லுவ
வேதுணவுண்ணினுமெவர்க்கும்வேள்கணை
தீர்திறமரிதெனத்தெளிப்பபோன்றன.

2040 அளமருபிறப்புகவமலர்க்குய்த்திடும்
வளமலர்களையெனவழங்கப்பட்டன
விளநருந்தகையருபிடைந்தொருத்தர்பாற்
றளர்வுசெய்வாரெனிற்றாழ்க்கற்பாலரோ.

## விநாயகபுராணம்.

2011 மாயைகாரியப்பொருள்களையடியர்பால்வழங்கித்
தூயவான்பொருளெளிதுறுஞ்சுகுணரேபோலத்
தீயதாம்புனற்செழுமுகிற்களித்திருக்கடலும்
பாயதீம்புனனதிகளாற்பருகினமாதோ.

2042 மெல்லெனத்தவழுந்தெண்ணீர்வீங்கிவாருவிபாய்ந்து
கல்லையுங்குழிப்பக்கல்லுட்கதுவியதேதைபாங்க
சொல்லைபாய்ந்துழலாநிற்குமுற்றகேவலத்தினீங்கி
வல்லவனருளாலாவிசகலததினவழங்குமாபோல்.

2043 எல்லார்க்கும்பயன்படுவாரென்செயினும்பொறுப்பரெனு
நல்லார்களுரைப்பொருளைநாட்டியதுகதிர்ச்செந்நெ
லெல்லாரின்வளர்த்தவரேயொறுத்துவரிந்தெடுத்தேகி
வெல்லாதகளத்திட்டுமிதித்திரும்போர்செயப்பட்டே.

## திருவானைக்காப்புராணம்.

2044 கருமமேவிரும்பினாலுங்கவர்தருமுயிர்கள்பின்னர்க்
கருமநேராகிஞானங்கலந்தினைபம்விளைதலோடுங்
கருமமேதானும்வேண்டாக்காட்சியிற்கமழ்நீர்வேண்டாக்
கருமநேர்நோக்கிமள்ளர்கவிழ்த்தனர்மடைகற்சித்து.

2045 *வல்லிதன்பாகனார்வகுத்தலூழினை
யல்லதென்றகற்றுவாரகிலத்தில்லென
நல்லவர்தெளிதாநண்பகற்கணுங்
கல்விளைதருவகபோதகங்களே.

2046 *அருவிபற்பலதிசைதொறும்விழுநிமிரடுக்கல்
பொருநர்வன்கயிற்றிறுக்கியபோகுயர்கழைச்சீர்
தருவவன்னவற்றுச்சியிற்கூத்தியர்தகைய
மருவுமஞ்ஞைகளாலுவமழைவரவெதிர்ந்து.

## பேரூர்ப்புராணம்.

2047 வரையிழியருவியென்னமணிகொழிகலுழியென்ன
விரைதருநதிகளென்னவியத்தகுநீத்தமொன்றே
பரைதனக்குரியகேள்வன்படைத்தளித்தழிப்போர்பாணின்
றுரைதருமூவரென்னப்படுவதொத்துரைவேறெய்தும்.

2048 மனைவியைவெறுத்துமைந்தர்வளநிலமனைத்துநல்கி
நினைவொடுவாக்குக்காயநித்தலுந்தம்பாலாக்கத்
தனைநிகரில்லாவின்பந்தருதலாற்கணிகைமாதர்
வினைநிகர்புதல்வர்த்தாழ்த்திவீடருள்குரவர்போன்றார்.

2049 *முன்னுறநடந்துமுன்னுந்தொழிலினைமுடித்தபூணி
பின்னுறநடந்துபின்னுந்தொழிலையாமுடித்தாமென்று
முன்னுறத்தோற்றஞ்சான்றமுதலினைப்பூணிக்காக்கிப்
பின்னுறத்தோற்றுநெல்லைத்தமக்கெனப்பிரித்தார்மள்ளர்.

## திருக்குற்றாலப்புராணம்.

2050 கூறுகள்பகுத்துச்சாலிகொய்யுநாட்செய்யிற்சேல்க
ளேறுநீர்க்கேணிதாவுமுடனறிந்துணங்குங்காவி
வேறுகண்டுவப்பர்வாழ்வுபிரியுநாட்பிரிவர்கீழோர்
வீறுநாட்கூடிவாழ்ந்துமெலியுநாண்மெலிவர்மேலோர்.

2051 வாள்வகுத்தபடையிரும்புவேர்சாயக்கிளைத்துழுதுவளர்க்குஞ்
சாலி, யாள்வகுத்தகூனிரும்புதாள்பணிதல்போலடியூடரிந்த
வாற்றாற், கேள்படைத்தமனத்துயோர்பகைமைபாராட்டுகினுங்
கேண்மைநீங்கார், தாள்பிடித்துமுடிவணங்கித்தனதுபாராட்டு
கினுந்தடிவார்தெவ்வர்.

## திருப்பெருந்துறைப்புராணம்.

2052 புனைமணித்தொகைவான்றினரோரிடைப்போகட்
டினைவிலாத்தினைவளநனிபோற்றுவரெயினர்
நினைதருந்தாந்தெரிதாரர்பாற்படினிகரி
லனையதாமுயர்பிழிபிழிபுயர்பெனலாமல்.

2053 பெருறவுற்றபோதுஞ்சிறுபகையெனும்பெணார்
சிறுறவுயர்ந்தோரல்லார்செத்தவரென்றன்மெய்யே
யொருமானுந்தியாயுமுழத்தியருறுப்புநள்ளாச்
சாருமோர்பகையாண்மாண்டுசாய்ந்தவம்புயங்களெல்லாம்.

## சேதுபுராணம்.

2054 கொய்பலர்குளிர்சுனைகுளித்துநாடொறுஞ்
செய்யவெங்கதிரெனத்திரிவன்சூரியன்
றய்யநீரவருடன்றொடர்புண்டாயினும்
வெய்யவர்விடுவரோமிக்கதன்மையே.

2055 வந்துதோய்முகிறழீஇமரீஇயதீஞ்சுவை
யுந்திநீர்கடல்புகுந்துவர்படைத்தன
முந்திமேலவர்தொடர்முறுக்கிமீளவுந்
தந்தொடர்ந்துறுநரத்தவறிற்றீர்வரோ.

அரிச்சந்திரசரிதை.

2056 சுரப்புறுசிறைப்புனலெனக்கருதிவற்றியதுவட்சியதனு
ணிரப்புறுதவிப்பினையொருத்திடமனத்தினினைத்துழையெலா
மிரப்பவரைநித்தலுநடத்தியுமொரற்பமுமிரக்கமிலர்பாற்
பரப்பவரையொத்தனகரப்பவரையொத்தனபசாசரதமே

2057 துஞ்சவந்தநாட்டேழைவிட்டயலுறக்கும்
வஞ்சநெஞ்சர்போலலாதுவண்டணிகுழன்மாதே
யஞ்சலாதுநின்றவருடணிநந்தநல்லவர்போற்
கஞ்சநெல்லூடுறப்புண்டுகிடப்பனகாணாய்.

பிரபுலிங்கலீலை.

2058 நகந்தருங்கொடிகண்களைநாணியே
முகந்திரும்புமுறையிற்றிரும்புமான்
மகிழ்ந்திடக்கதிர்வீரமழவலந்
தகுந்தகுந்தகுமென்றுதயங்குற.

2059 தாழ்ந்தோருபார்வையொன்றுமிகவுயர்ந்தோர்தாழ்வரொன்றுமறஞ்
சூழ்ந்தோருரைக்குமுறைகண்டாமதில்சூழ்கிடந்ததொல்லகழி
தாழ்ந்தோரணந்தன்மணிமுடிமேனின்றன்றுயர்ந்ததடவரையைச்
சூழ்ந்தோர்வரையினுதிப்பவன்றாட்கீழ்நின்றதுபோய்ச்
சூழையிலே.

2060 ஈசனளித்தவொருகோட்டியானைக்கியாங்களிணையாயின்
வாசவனைத்தாங்கிருகோட்டியானையெம்மைமானுமெனும்
பாசவுரற்கால்யானையொடும்பாண்டிலிழுக்கும்பகடியரிற்
றேசினிரதப்பரிசிறந்தவெனவனும்பரிகடெருவகலா.

2061 விலைவரம்பறியாமணிக்கோவைசூழ்விளிம்பு
கலையணிந்தொருதலைமுலைமேலலங்கரித்தாண்
முலையொடுந்துகில்கண்டநாண்முதற்றொடர்ந்தன்று
விலகுறுபகலைவல்லவர்கட்படாமென்றல்.

2062 தன்னைநிந்தைசெய்வெண்ணகைமேற்பழிசார
மன்னியங்கதுநிகரறவாழ்மனைவாய்தன்
முன்னிறந்திடுவேனெனஞான்றுகொண்முறைமை
யென்னவெண்மணிமூக்கணியொருத்திநின்றிட்டாள்.

2063 தாய்வாயடைந்துமிருந்தலைபமோதிமோதிச்சலித்தலறக்
காய்வாய்நிலவேயுடன்பிறந்தாளிருந்துவாழுங்கடிமனையை
நீவானெழுந்துவந்தழிப்பாயென்றுலந்தோநிலையின்றித்
தேய்வாய்நின்னோடிமையில்லாவென்னையென்னசெய்பாயே.

2064 தக்கன்மகத்திலொருஞான்றுதாளிற்படுநீதலையேறி
மிக்கமுனிவர்மந்திரநீரிறைப்பவின்னுமீண்டிலாய்
நக்கன்பவளவாய்ப்பட்டுக்களத்தேபிறந்தநஞ்சுநினை
யொக்குமென்பதறியாமையன்றேவொளிர்வெண்மதியமே.

2065 உயிர்த்தபொழுதேநின்குரல்கேளாமுன்னோடிற்றீன்றதாய்
நயத்தின்வளர்த்ததாய்குரல்கேட்டலுமேநடுங்கத்துறந்ததால்
பயத்தமலர்ப்பூங்காவகத்திலிருந்துபல்காற்கூவினாற்
செயிர்த்துநின்னைக்குயிலேநான்வெறுத்தல்செப்பவேண்டுமோ.

2066 மாலருந்தியபோதுதன்வயிற்றிடையிராதிப்
பாலையன்றுடனுமிழ்ந்திலனாகின்மெய்பதைத்து
வேலையின்றலைவீழ்ந்ததனூழுமுண்வெண்ணெ
யாலும்வெந்தழறணிந்துயிருய்ந்தவனலனே.

**அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ்.**

2067 சீர்கொண்டகஞ்சக்கிழத்திதன்காந்தனைச்சிறைசெய்தவா
றறிந்தாற், செயிர்த்துநந்திருமனைவிமகன்மருகிதமையெலாஞ்
சிறைசெய்யுமென்றறிந்து, மேற்கொண்டமைத்துனக்
கேண்மையாலர்ச்சுனற்குறுதிநாள்பயவாமையே, யெண்ணி
முன்பரிதியைப்பரிதியாற்றடைசெய்தவேந்தற்பிரான்புரக்க
பேர்கொண்டமேனிலச்சோபானமிசையேறுபேதைமார்
முகநோக்கிநம், பேராசுகொள்ளவருமதிபோலுமிதுவெனாப்
பெரிதுமெச்சுற்றவர்கடக், கார்கொண்டபின்னற்கரும்
பாந்தள்கண்டுளங்கவலாதுகளிகூர்த்துதன், கலைமதியம்
வைகுபொழில்சூழ்நளத்தூர்வருங்கடவுட்பிராட்டிதனையே.

இராமாயணம்.

2068 தெருண்டமேலவர்சிறியவர்ச்சேரினுமவர்தம்
மருண்டதன்மையைமாற்றுவரெனுமிது வழக்கே
யுருண்டவாய்தொறும்பொன்னுருளுரைத்துரைத்தோடி
யிருண்டகல்லையுந்தன்னிறமாக்கியவிரதம்.

2069 புவியினுக்கணியாயான்றபொருடந்துபுலத்திற்றாகி
யவியகத்துறைகடாங்கியைந்திணைநெறியளாவிச்
சவியுறத்தெளிந்துதண்ணென்றொழுக்கமுந்தழுவிச்சான்றோர்
கவியெனத்தெளிந்தகோதாவரியினைவீரர்கண்டார்.

நளவெண்பா.

2070 கற்பின்மகளிர்பானின்றுந்தமைக்கவட்டின்
விற்குமகளிர்பான்மீண்டாற்போ—னிற்கு
நெறியானைமெய்ம்மைவாய்நின்றானைநீங்கிச்
சிறியானைச்சேர்ந்தாடிரு.

2071 போயொருகான்மீளும்புகுந்தொருகான்மீண்டேகு
மாயர்கொணர்ந்தவடுபோலின்—றூயல்
கடைவார்தங்கைபோலவாயிற்றேகாலன்
வடிவாயவேலான்மனம்.

2072 போவாய்வருவாய்புரண்டுவிழுந்திரங்கி
நாவாய்க்குழறநடுங்குறுவாய்—தீவா
யரவகற்றுமென்போலவார்கலியேமாதை
யிரவகற்றிவந்தாய்கொலின்று.

சீவகசிந்தாமணி.

2073 சொல்லருஞ்சூற்பசும்பாம்பின்றோற்றம்போன்
மெல்லவேகருவிருந்தீன்றுமேலலார்
செல்வமேபோற்றலைநிறுவித்தேர்ந்தநூற்
கல்விசேர்மாந்தரினிறைஞ்சிக்காய்த்தவே.

ஆகச் செய்யுள் 92, கற்பனை முற்றிற்று.

---



# செய்யுள்முதற்குறிப்பகராதி.

[எண். பக்க-எண்.]

# அதிகாரவகராதி.

# பிழையும் திருத்தமும்



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 29 | பொனனுல | பொன்னுல |
| 10 | 27 | நெறிப்படு | நெறிப்பாடு |
| 15 | 15 | செயய | செய்ய |
| 19 | 15 | நினற | நின்ற |
| 20 | 23 | மறறது | மற்றது |
| 35 | 28 | திருப்பங் | திருப்பதங் |
| 43 | 17 | தென | தென் |
| 53 | 6 | மதுபுவிலை | மதுவிலை |
| 57 | 29 | கள்ளுங்ளவு | கள்ளுங்களவு |
| 158 | 2 | யுயிர்கச்ச | யுயிர்க்கச்ச |
| 187 | 23 | முறையிடுனுங் | முறையிடினுங் |
| 201 | 19 | புரதீதல் | புரத்தல் |
| 253 | 23 | மச்சீர | மச்சீர் |
| 262 | 21 | பிமபோா | பிரபோர |
| 274 | 9 | றறிய | றரிய |
| 277 | 16 | சஈ | சசு |
| 285 | 9 | யோட்ட ா | யோட்டா |
| 291 | 23 | பில்லக் | பில்லாக் |
| 324 | 9 | டுகளீட்டம் | டுகளினீட்டம் |
| 328 | 5 | பிழந்த | பிழந்தது |
| 334 | 8 | யொருத்திட | யொழித்திட |